# தென்னாட்டு வீரர்கள்





ஆசிரியர்:


**வித்துவான். வை. சுப்பிரமணியம்,**

தலைமைத் தமிழாசிரியர்,

நகராண்மை உயர்நிலைப் பள்ளி,

சேலம்.






**அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸ்**

**94-95, புதுத் தெரு, மண்ணடி, சென்னை.1**

பதிப்புரிமை] **1950** [விலை அணா **14.**

# முன்னுரை

---

தென்னாட்டு வீரர்கள் என்ற பெயருடன் வெளி வரும் இந்நூல் **வீரபாண்டியக் கட்டபொம்மு, தேசிங்கு மன்னன்** ஆகிய இரு வீரர்களின் வரலாற்றை யுட்கொண்டுள்ளது.

வீரர்களின் வரலாற்றைக் கற்கும் மாணவர்களும், வீர உணர்ச்சி யுள்ளவர்கள் ஆவார்கள் என்பது உறுதி. நம் நாடு நீண்ட நாளாய் வீர உணர்ச்சியற்று கத்தி, இரத்தம் என்றவுடன் கண்ணை மூடிக்கொள்ளும் அளவுக்கு வந்துவிட்டது. மேல் நாட்டிலோ அஞ்சாமை முதல் பாடமாகப் போதிக்கப்படுகிறது.

நாட்டுரிமை பெற்றுள்ளோம் நாம். அதைப் பாது காக்க நல்லுடலும், வீர உணர்ச்சியும், ஒற்றுமையும் வளர்த்துக் கொள்ளுதல் வேண்டும். இவ்வரிய பண்பு களைப் பெறுதற்கு எளிய வழியாக விளங்குவது வீரர் களின் வரலாறேயாம். ஆதலின், அறிஞர்கள் நம் நாட்டு வீரர்கள் முதலிய பல பெருமக்களின் வரலாறுகளை எழுதி வெளியிடல் வேண்டும்.

இவ்வரிய செயலில் ஊக்கம் காட்டி என்னை இச் சிறு நூலை எழுதுமாறு தூண்டிய சென்னை **அஸோஸி யேஷன் பப்ளிஷிங் கம்பெனியாருக்கும்**, புத்தகம் எழுதுங் கால்;உடனிருத்து உதவிய ஆசிரியர், **துரை பழனிவேலன்**, அவர்களுக்கும் எனது நன்றி.

எனது சிறிய இம் முயற்சியை மதித்து அந் நூலைத் தம் பள்ளி இளைஞர்கள் அனைவரும் கற்றுப் பயன் பெறத் தமிழாசிரியர்களும், தலைமை ஆசிரியர்களும் உதவ வேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம் ;

சேலம் : 24-1-59 — **வித்துவான்: வை. சுப்பிரமணியன்,** தமிழாசிரியன்

# உள்ளுறை

# மதிப்புரைகள்

HINDU (14—5—50)

This book contains sketches of the lives of two of our South Indian heroes i. e,, 'Raja-Desing of Gingee and Virapandya Katta Bommu of Panchalam Kurichi. Thesetwo names have raised themselves to legendary and mythological heights and ballads and Stories have been woven around them and thrill the minds and hearts of the Simple country folk even today. Though they were not adventurers or empire seekers like Alexander or Babar, they had all the Qualities of great heroes and they' like prithivi Raj of the north, were victims of circumstances. The present work has tried to trace the history of the houses which these heroes represented. Both houses were foreign to the Tamil land. Desing belonged to a Rajput line and Katta Bommu was a Telugu. But they identified themselves with the Tamil land so much that the Tamilians regarded them as belonging wholly to themselves. An attemept has to trace their public life in full. Detailed accounts are given of their greantness and the causes of their fall hava been graphically described. Incidentally the oneness of Tamil culture in Those days has been clearly portrayed. There have not been divisions on account of nationality or religion anywhere. A Muhamad Khan gives his life for the Rajaput Desing and a European, Davidson, helps Katta Bommu and advises when he is harassed by the Engilish Company.

The author has tried to cull out his stories from authentic sources.

**சுதேசமித்திரன் (27-3-50)**

தென்னாட்டின் வீரதீரர்களுள் ராஜா தேசிங்கு ஒருவர். செஞ்சிக்கோட்டையைக் காணும்போது தேசிங்கு ராஜாவின் அற்புத வரலாறு மனதில் எழுகிறது. உண்மையில் பாளையக்காரராயிருந்தும் டில்லி பாதுஷா தேசிங்கினுடைய வீரத்தைக் கண்டு மெச்சி "ராஜா பட்டத்தை அவருக்குக் கொடுத்து விருதுகளையும் அளித்தான். உண்மைக்கும் ஊர் நன்மைக்கும், நட்பிற்கும் நேசத்திற்கும் வீரதீரத்திற்கும், ஒரு இலக்காய் விளங்கினார் இராஜா தேசிங்கு, இற்றைக்குச் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் சிறப்புடன் வாழ்ந்தவர். அவருடன் உடன் கட்டை ஏறிய இராணியின் பெயரையே இராணிப்பேட்டை தாங்கி நிற்கிறது, இருபத்திரண்டு ஆண்டு முடிவதற்குள் தேசிங்கு ராஜன் செய்த அரிய பெரிய தீரச்செயல்கள் இப்பொழுதும் நமக்கு பெருமையளிக்கின்றன.

மற்றொரு தீரர் கட்டபொம்மு இவருடைய முழுப் பெயர் பாஞ்சாலங்குறிச்சி வீர பாண்டியன் தன் சுயேச்சையும் சுதந்திரத்தையும் காப்பாற்றிக் கொள்ள உயிரை இழந்த மாபெருந்தியாகி இவர். கிழக்கிந்தியா கம்பெனியார் திருநெல்வேலி பாளையங்களைக் கைப்பற்ற வேண்டி உபயோகித்த சாம, பேத, தான, தண்ட முறைகள் பல. அம்முறைகளை பொருட்படுத்தாமற் கடைசி வரையில் எதிர்த்து நின்று போராடிய பெரியார் கட்டபொம்மு. இவ்விரு வீரர்களுடைய அருமை பெருமைகளை சீரிய தமிழில் இந்நூலாசிரியர் எழுதியுள்ளார். தென்னாட்டின் பழைய பெருமைகள் மலிந்துள்ள இந்நூலை நம்மாணவர்கள் அவசியம் படிக்க வேண்டும்.

**தினமணி : (4-4-50)**

தென்னாட்டு வீரர்கள் என்ற புத்தகத்தில் ராஜா தேசிங்கின் கதையும், கட்ட பொம்முவின் சரித்திரமும்

கூறப்படுகிறது. நல்ல தமிழ் நடையில் இந்த இரு வீரர்களின் சரித்திரத்தை ஆசிரியர் வர்ணிக்கிருர்.

**லகானை இழுத்துக் கொடுத்**
**தான் சிமிட்டா ராஜாதேசிங்கு;**
**சிமிட்டா கொடுத்த வேகத்தினுலே**
**திகைத்து நின்றது பார்.**

என்பன போன்ற தேசிங்கு ராஜனைப் பற்றிய நடோடிப் பாடல்கள் தமிழரிடையே பிரசித்தம். அதே மாதிரி வீரன் கட்டபொம்முவின் சரித்திரமும் பிரசித்தம். இவ்விரு வீரர்களின் வரலாற்றை மாணவர்களுக்கு போதிக்க வேண்டுமென்ற நோக்குடன் சேலம் நகராண்மை உயர் நிலைப்பள்ளி தலைமை தமிழாசிரியர் வித்வான். வை. சுப்பிரமணியம் இப்புத்தகத்தை வெளியிடுகிருர்.

**திராவிட நாடு. (2-4-50)**

இடிந்துபோன கோட்டை கொத்தளங்கள் மடிந்து போன மன்னர்களின் வெற்றிச் சின்னங்களாக நிற்கின்றன—நமது நாட்டில் நாலு இடங்களில்!

தமிழகம் 'தாழ்ந்து' விட்டதன் விளைவு, அந்தக் கோட்டைகளின் சரிதங்கள் மக்களிடையே தெரியவில்லை—பரப்பப்படவில்லை. தமிழகத்தின் மண்ணில் நடைபெற்ற சரித நிகழ்ச்சிகள்—சாம்பலாகி விட்டன; மதிப்புத்தரப்படாமல் மங்கிப்போய் விட்டன!

'வாராண்டி வெள்ளைக்காரன்!' என்ற கிராமீயப் பாடல் 'பல்லை நற நற வென்றுகடித்தானைய ராஜா தேசிங்கு' என்ற தெருக் கூத்துப் பாட்டு, போன்றவைகளால் மாண்ட வீர மரபினரின் நினைவு மக்களிடையில் இருக்கிறதென்றுலும், அவை கட்டுக் கதைகள் போல் காட்சியளிக்கின்றனவே யொழிய, கவனத்தைக் கவரவில்லை.

பாஞ்சாலங் குறிச்சி—செஞ்சிக் கோட்டை இந்த இரண்டு இடங்களும் நெஞ்சைச் சிலிர்க்கச் செய்யும் கட்டப் பொம்மு' தேசிங்கு மன்னன் ஆகியோரின் நினைவுச் சின்னங்கள்!

இந்தச் சின்னங்கள் இருக்கின்றன; ஆனால் இவைகளில் மறைந்து கிடக்கும் தமிழ் நாட்டின் வீர அத்தியாயம் சிந்தனைகளைக் கிளறவில்லை; அதற்கான முயற்சிகள் முளைக்காததால்!

வித்துவான் சுப்பிரமணியத்தின் முயற்சி 'தென்னாட்டு வீரர்கள்' மாணவர்களுக்கேற்ற வகையில், பாட புத்தகமாகப் பயன்படும் நிலையில் எழுதப்பட்டுள்ளது

**தமிழ்த் தென்றல்: (1-4-50)**

இந்தியர் உரிமைப் போரைத் தமிழ் நாட்டிலே உண்மையில் தொடங்கி, வைத்தவர்களாகிய இரு பெரு வீரர் வரலாற்றை நன்றுயெடுத்துரைப்பது இப் புத்தகம். வீரபாண்டியக் கட்ட பொம்முவின் வாழ்க்கை தமிழர் உள்ளத்தை உருக்கி, வீரத்தை எழுப்பி, உறுதியை நிலை நிறுத்த வல்லது. தேசிங்கு மன்னனின் சரிதை சிந்தையைக் கவரும் சீரிய வீர சரிதை. இவ்விரு வரலாறுகளையும் தெளிவாக அழகிய இனிய எளிய நடையில் கூறியிருக்கிறது இப் புத்தகத்தில். இளைஞர் அவசியம் இதனைப்படிக்க வேண்டும்; படிப்பதால் பெரும் பயனை அடைவர். வீரர் வரலாறுகளே தமிழ் இளைஞர்க்கு வருங்கால வாழ்வை வகுத்துக் காட்டும் வழிகாட்டிகள், நடுத்தரப் பள்ளிகளில் துணைப் பாடமாய் அமைவதற்குத் தகுந்த நூல் இது என்பதில் ஐயமில்லை,

---

# தென்னாட்டு வீரர்கள்

## இராஜா தேசிங்கு

### 1. செஞ்சிக் கோட்டை

தென்னாட்டவர் ஒரு காலத்தில் சீருஞ் சிறப்புமாய்ப் பகையை ஒடுக்கி, ஈகையை வளர்த்து, வளம் நிரப்பி, வையகம் ஆண்டனர் என்னும் செய்தியை இன்றைய மக்களுக்கு அறிவிப்பன போலத் தென்னாடெங்கும் பண்டை வரலாற்றுச் சின்னங்கள் மலிந்துள. இத்தகைய வரலாற்றுச் சின்னங்களுள், வலியவையும் தென்னாட்டு வரலாற்றின் ஒரு பெரும் பகுதியைத் தம் மகத்தே கொண்டு திகழ்கின்றவையுமான கோட்டைகளுள் செஞ்சிக் கோட்டையும் ஒன்று. இது தென்னாற்காடு மாவட்டத்தின் வட மேற்குப் பகுதியில், செஞ்சி எனப் பெயர் பூண்ட தாலுகாவில் உள்ளது. இக்கோட்டையின் வலிமை காரணமாகத்தான் இதனை ஆண்ட அரசர் பெரும் புகழடைந்தாரெனின் மிகையாகாது. இக்கோட்டை அமைந்துள்ள இடம் ஒரு பெரிய வறண்ட நிலப்பரப்பு; கரடு முரடான குன்றுகளும், செங்குத்தான பாறைகளும் நிறைந்தது. இவை போதாவெனச் சுற்றிலும் மலைப் பிளவுகள் நிறைந்துள்ளன. **இராசகிரி, கிருஷ்ணகிரி, இரத்னகிரி, கோலகிரி** என்னும் நான்கு சிறு குன்றுகளுக்கிடையே கோட்டை அமைந்துள்ளது. மதில்கள் இம்மலைகளை இணைக்கக் கட்டப்

பட்டவையே. இராசகிரியைச் சூழ்ந்துள்ள மதில்களுக்குள் இருப்பதை **உள் கோட்டை** என்பார்கள். இதன் சுற்றளவு சுமார் மூன்று மைல் இருக்கும். இதனைச் சுற்றி மதில்கள் அமைத்து இருபத்து நான்கு மைல் சுற்றளவில் ஒரு கோட்டை கட்டப்பட்டுள்ளது. இதனை **வெளிக் கோட்டை** என்பார்கள். இதன் மதிற் சுவர்கள் கருங்கற்களால் கட்டப்பட்டவை. இம்மதில்களின் அகலம் அறுபது அடி. இச்சுவர்களைச் சூழ ஏறத்தாழ எண்பது அடி அகலமுள்ள ஆழமான அகழி உண்டு.

கோட்டையினுள்ளே இராசகிரியில் பொக்கிஷச் சாலையும், அரசனின் ஆலோசனை மண்டபமும் அமைந்து இருந்தன. கிருஷ்ணகிரில் அரசனது கொலுமண்டபம் இருந்தது. இரத்னகிரியில் சிறைச்சாலையும் ஆயுதச் சாலையும் இருந்தன. இதனைச் **சங்கிலி துர்க்கம்** எனவும் வழங்குவர். கோலகிரியில் திருமால் கோவில் விளங்குகிறது. கோட்டையின் உள்ளேஒரு பகுதியில் இராசகிரியின் அடி வாரத்தில் உள்ள சோலையின் நடுவில் **கமலக்கன்னி அம்மன் கோவில்** இருக்கின்றது. கோட்டையின் மற்றொரு பகுதியில் **செஞ்சி அம்மன் கோவில்** உள்ளது. அவ்வம்மனின் பெயரே கோட்டைக்கும், ஊருக்கும் அமைந்தது போலும்! மற்றும், கோட்டைக்குள்ளே மிகப் பெரிய களஞ்சியங்களும், உடற்பயிற்சிக் கூடங்களும், பரிக்கூடங்களும் இருந்தன கோட்டையினுள் சிறந்த பகுதி, அந்தப்புர மாதர்களுக்கென அமைந்த அறைகளும், நடுவில் எட்டு அடுக்குகள் கொண்ட கோபுரமும் உள்ள **கலியாண மகால்** என்னும் அழகிய மண்டபமாகும். செஞ்சி அரசர்களின் வழிபாட்டுக் கடவுளரான **அரங்கநாதர் ஆலயம்** கோட்டையினுள்ளே இருக்கும் **சிங்கபுரம்** என்னும் இடத்தில் அமைந்திருக்கிறது. பட்டணத்தில் வடமேற்கில் இருந்து தென்கிழக்கு முகமாகச் **சங்கராபரணி** என்னும் சிற்றாறு ஓடுகிறது.

கோட்டைக்கு அமைந்த இயற்கை அரண்கள் போதாவென்று மதில்களிடையே துப்பாக்கிகளும், பீரங்கிகளும் வைத்துச் சுடுவதற்கான கண்ணறைகள் அமைக்கப் பட்டிருந்தன. மற்றும் ஆபத்துக் காலங்களில் வெளியேறிச் செல்லப் பல கள்ள வழிகளும் நிறைந்திருந்தன. இந்தக் கோட்டையைப் போல் வன்மை மிக்க கோட்டை தென்னாட்டிலேயே இல்லை எனலாம்.

கி. பி. 1691-ஆம் ஆண்டு அவுரங்கசீபின் படைத் தலைவனான சுல்பிகர்கான் செஞ்சியைத் தன் முழுப் படையுடன் வளைத்துக்கொண்டான். முற்றுகை தொடர்ந்து ஏழு ஆண்டுகள் நடைபெற்றதென்றாலும், கோட்டையைத் தகர்த்து உள்ளே நுழைவதற்கு முடியவில்லை. இறுதியில், கோட்டையின் உள்ளிருந்த மகாராட்டிரத் தலைவனாகிய இராஜாராம் மாறுவேடம்பூண்டு, கோட்டையினின்றும் வெளியேறிவிட்டான். கோட்டையை மொகலாயர் கைப்பற்றிக் கொண்டனர். இங்ஙனம் செஞ்சி மொகலாயர் வசப்பட்டதற்குக் காரணம் கோட்டையின் வலிமை குன்றியதன்று; கோட்டையுள் உணவுப் பஞ்சம் ஏற்பட்டதுதான். இதினின்று கோட்டையின் வலிமையைப்பற்றி நாம் ஒருவாறுணரலாம். இத்தகைச் சிறப்பினதான இக்கோட்டை இப்போது மிகவும் அழிந்த நிலையில், வரலாற்றுப் பொருள் பாதுகாப்புத்துறையினரால்* ஒரு காட்சிப் பொருளாகக் கண்காணிக்கப்பட்டு வருகின்றது.

———

* Archaeological Department

## 2. செஞ்சியின் ஆட்சி

செஞ்சிக் கோட்டையை ஆதியில் சேரரும், அதன் பின் சோழரும், பிறகு பல்லவரும் கைப்பற்றி ஆண்டு வந்தார்கள். அவர்களுக்குப் பின் கிருஷ்ணக் கோன் என்ற யாதவ குல மன்னன் செஞ்சியைச் சொந்த மாக்கிக்கொண்டான். இவன் திருமாலின் மீது மிக்க அன்புகொண்டவன். இவனுடைய காலத்தில் செஞ்சி யில் பல உயர்ந்த கட்டடங்களும், அரங்கநாதர் முதலிய தெய்வங்களுக்குப் பெரிய கோயில்களும் கட்டப்பட் டன. இவனால் பல மதிற்சுவர்களும் எழுப்பப்பட்டுச் செஞ்சி சிறப்புடையதாயிற்று. இவ்வரசன் அங்குள்ள ஒரு மலைக்குக் கிருஷ்ணகிரி என்று பெயரிட்டு அதில் தன் அவைக் களத்தை ஏற்படுத்தி அரசு செலுத்தி வந்தான்.

இவன் வழிவந்தவர் ஏறத்தாழ இருநூற்று ஐப்பது ஆண்டுகள் செஞ்சியை ஆண்டு வந்தனர். பின்னர் விஜயநகரத்து மன்னர்கள் ஆட்சி வலுத்த காலத்தில் கோட்டை கை மாறி விஜய நகரத்தாருக்குச் சொந்த மாயிற்று. ஆனால், அவர்களிடமும் அது நீண்டகாலம் நிலைத்திருக்கவில்லை. கி. பி. 1565-ஆம் ஆண்டில் நிகழ்ந்த தலைக்கோட்டைப் போரில் அவர்கள் முறியடிக்கப்பட்ட பின், விஜயநகரப் பேரரசு சீர்குலைந்து சிதையத் தொடங்கியது. பதினேழாம் நூற்றாண்டின் இடை யில் அந்த அரசு முழுவதையும் வென்று, தன் வசப் படுத்திக்கொண்டான் பீஜப்பூர் சுல்தான். அப்போது செஞ்சியும் அவன் ஆளுகைக்குட்பட்டது. அவ்வமயம் மராட்டியப் பேரரசை நிறுவ முயன்றுவந்த சிவாஜி யின் படைகள், முஸ்லிம் சுல்தான்களின் நாடுக ளைக் கைப்பற்றிக்கொண்டு, தஞ்சாவூர் வரை சென்று மீண்டன. சிவாஜி கைக்கு வந்த பின்னர் செஞ்சி, தஞ்சைக் கோட்டைகள் மேலும் பலப்படுத்தப்பட்டன.

கி.பி.1680இல் சிவாஜி இறந்தார். நாடாளும் பொறுப்பை அவர்தம் இளைய மைந்தர் **இராஜாராம்** வகிக்க வேண்டியவரானார். சிவாஜி இறந்தபின், அவரால் நிறுவப்பட்ட மராட்டியப் பேரரசைச் சிதைக்கத்தம் முழுப் படையுடன் அவுரங்கசீப் தென்னாட்டில் நுழைந்தார். படிப்படியாக கி.பி. 1691–ஆம் வருடத்திற்குள் செஞ்சியைத் தவிரத் தஞ்சாவூர் உள்பட பல கோட்டைகளை அவர் தம் வசமாக்கிக்கொண்டார்.

அதுசமயம் சிவாஜியின் புதல்வரான இராஜாராம் மராட்டியப் படைகளுடன், முஸ்லிம் படைகளைக் குரங்குப் போர்முறையில் பல எதிர்பாராத தாக்குதல்கள் செய்து, அளப்பருந் தொல்லை கொடுத்துவந்தார். இச்செய்தியை அறிந்த ஔரங்கசீப் இராஜாராமை அழித்தாலொழிய அத் தொல்லை நீங்காதென்பதை அறிந்து, தம் படைத்தலைவனை **சுல்பிகர்கான்** வசம் பெரும்படை ஒன்றைத் தென்னாட்டுக்கு அனுப்பினார். இராஜாராம் செஞ்சியில் இருந்ததை அறிந்த சுல்பிகர்கான் செஞ்சியை வளைத்தான்; கடுமையான போர்கள் பல நிகழ்ந்தன; மொகலாயர் சேனையால் செஞ்சிக்குள் நுழையமுடியவில்லை. ஆயினும் மொகலாயர்களும்மனந் தளராது எவ்வாற்றானும் செஞ்சியைக் கைப்பற்றியே தீருவது என்ற முடிவுடன் அதனை முற்றுகை செய்திருந்தார்கள். ஆண்டுகள் ஏழு கழிந்தன. மொகலாயர்களது விடாப்பிடியை அறிந்த இராஜாராம் கலங்கினார்; செஞ்சிக்குள் உணவுப் பஞ்சம் தாண்டவமாடியது. மேலும் செஞ்சியில் இருப்பது முடியாத செயல் என்பதை அறிந்த இராஜாராம், மாறுவேடம் பூண்டு, கோட்டையை விட்டு வெளியேறினார். இதன் பின் செஞ்சி மொகலாயர் வசப்பட்டது.

அவுரங்கசீபின் படையில் அநேக இராஜபுத்திர வீரர் இருந்தனர். அவர்கள் வீர மரபினர். ஆண்மையும், உண்மையும் நிறைந்தவர். இராஜபுத்திரர்கள்

பெரும்பாலும் தமிழர்களுடையவை போன்ற பழக்க வழக்கங்களைக் கைக்கொண்டிருந்தார்கள். அவர்கள் தமிழர்களைப் போல வீரத்தையே உயிராக மதித்த வர்கள்; பிறருக்கு அடங்கி வாழாதவர்கள்; நீதியும் நேர்மையும் வாய்ந்தவர்கள்; போரில் புறமுதுகிடாது வெற்றி அல்லது வீர மரணத்தை அடைவதில்விருப்பம் உள்ளவர்கள். அவர்கள் தமிழர்களைப் போலவே பெண் களை உயர்வாக நடத்திவந்தார்கள். அவர்கள் தங்கள் குடியின் வளர்ச்சியைப்பற்றி ஆலோசிக்கும்போது அச் சபையில் பெண்களும் இடம்பெறுவார்கள். இராஜபுத் திரப் பெண்மணிகளும் தமிழ்ப் பெண்மணிகளைப் போலவே கற்பும், அறவொழுக்கமும், அஞ்சாமையும் வாய்ந்தவர்கள். அவர்கள் தம் கணவன்மார் போருக்குப் புறப்படுங்கால் "வெற்றியோடு திரும்புக; இன்றேல் வீர மரணம் பெறுக" என்று கூறி அனுப்புவதோடு தாமும் போரிற்கலந்து சண்டை செய்வார்கள். போரில் புறமுதுகிட்டவர்களை அவர்கள் சிறிதும் மதிப்பதில்லை. தம் கணவன்மார் போரில் இறக்கநேரிடின்,

"காதலர் இறப்பின் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்து அகத்தடங்காது
இன்னுயி ரீவர்; ஈயா ராயின்
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்,"

என்று கூறிய பூதப்பாண்டியன் தேவியினது கருத்தை ஒப்பத் தீக்குளித்து மாய்வர். இவர்கள் தம்முடைய குழந்தைகளுக்கு வீரம் செறிந்த வரலாறுகளைக் கூறி வீர மூட்டுவார்கள். இவர்கள் தென்னாட்டிற் பன்னாட்கு முன் புகுந்தவர்கள். இவர்களைச் சேரன் செங்குட்டுவன், கரி காலன் முதலிய மன்னர்கள் வடநாட்டை வென்ற போது திசைக்காவலர்களாக அமைத்தார்கள் என்று சில வரலாறுகள் கூறுகின்றன. இவர்களுடைய வழக்க ஒழுக்கங்களையும் தமிழர்களுடைய வழக்கஒழுக்கங்களை யும் ஒப்புநோக்கில் இச்செய்தியின் உண்மை புலனாகும்

இத்தகைய சிறப்புகள் கொண்ட இராஜபுத்திரர் குலத்தில் தோன்றியவர் **சிரோப் சிங்கு** என்பவர்; கட்டமைந்த உடலும், வலிய கைகளும், அகன்ற கண்களும் கூரிய பார்வையும், பரந்த நோக்கும் கொண்ட சிவந்த மேனியர்; இவர், தம் இளம்பருவத்திலேயே மொகலாயப் படையிற் போர் வீரரானார். தம் அறிவு நுட்பத்தாலும், போர்த்திறமையாலும் படிப்படியாக உயர்வு பெற்றுத் தானைத் தலைவரானார். இவர் ஔரங்கசீபுடன் தென்னாடு வந்திருந்த சமயம், இவருடைய திறனை நன்கு கவனித்த ஔரங்கசீப், இவரை மிகவும் போற்றி மகிழ்ந்தார்; செஞ்சிக் கோட்டை வீழ்ந்த செய்தியறிந்த சக்கரவர்த்தி, தம் படைத்தலைவருள் ஒருவராயிருந்த சிரோப் சிங்குக்கு அக்கோட்டையின் அரசுரிமையை அளிக்குமாறு அதனைவென்ற தம் தளபதி சுல்பிகர்கானுக்கு அஞ்சல் அனுப்பினார். அதன்படி சுல்பிகர்கான் சிரோப் சிங்கைச்செஞ்சியின் மன்னராக்கினான். அன்றிருந்து சிரோப் சிங்கு செஞ்சி மன்னரானார்.

---

## 3. மொகலாயப் பேரரசு

ஔரங்கசீப் காலத்தில் மொகலாயப் பேரரசானது தெற்கே இராமேசுவரம், திருவாங்கூர் வரை பரவியது. அவ்வகன்ற நிலப்பரப்பை (தற்போதைய இந்தியடொமினியனும், பாகிஸ்தானும் சேர்ந்த இடம்) தம் நேரடியான பார்வையின் கீழ் வைத்துச் சீரிய முறையில் ஆட்சி செய்ய முடியாதெனக் கண்ட ஔரங்கசீப், தமது நாட்டைப் பல **சுபா**க்களாகப் பிரித்து, ஒவ்வொரு சுபாவிற்கும் ஒரு **நவாபை** நியமித்தார். அந்த நவாபுகள் தத்தம் சுபாக்களைப் பல சிற்றரசுகளாகப்பகுத்து ஒவ்வொரு சிற்றரசுக்கும் ஒரு சிற்றரசனை நியமித்

தார்கள். இச்சிற்றரசர்கள் தங்கள் நாட்டின் நலனைக் கருதி ஆட்சி புரிந்ததோடு, குடிமக்களிடமிருந்து பகுதிப்பணமும் வசூலித்தார்கள். அப்பகுதிப்பணத்தின் ஒரு பாதியை அவர்கள் நவாபுக்குத் திறையாகச் செலுத்தக் கடமைப்பட்டிருந்தார்கள். இவ்வாறு அவர்களிடமிருந்து பெறப்பட்ட தொகையில் ஒரு பகுதியை நவாப் வைத்துக்கொண்டு, மீதியைச் சக்கரவர்த்திக்கு அனுப்பிவிட வேண்டும். இந்த முறை ஒழுங்காக நடைபெறுவது சக்கரவர்த்தியின் சேனை வன்மையைப் பொறுத்தது.

ஒளரங்கசீப் இறந்ததும் அவர் மக்கள் அரசுரிமைக்காகப்போட்டியிட்டார்கள். சேனையும் பலம் குன்றியிருந்தது. அத்தருணத்தை நவாபுகள் நன்கு பயன்படுத்திக் கொண்டார்கள். ஒவ்வொருவரும் தம் இச்சைப்படி தங்களுக்குக் கீழ்ப்பட்ட சுபாவை ஆண்டு வந்தனர். வரிப்பணத்தை ஒழுங்காகக் கட்டுவதில்லை. சுமார் இரண்டு நூற்றாண்டுகள் தனிச் செங்கோல் ஓச்சிய மொகலாயப் பேரரசு இவ்வாறாகச் சிதைவுற்றுப் பல நவாபுகளின் ஆட்சிக்குள் வந்தது. நவாபுகளுக்குட்பட்ட சிற்றரசர்களும் நவாபுகளை மதியாமல் தங்கள் அரசுகளைத் தங்களிச்சைப்படி ஆண்டு வந்தார்கள். இதன்றியும், சிற்றரசர் தத்தம் நாடுகளைப் பெருக்கிக் கொள்வதிலும் முனைந்து நின்றனர். நவாபுகள் ஈட்டி முனையில் கப்பம் கேட்க வேண்டிய நிலைமையும் ஏற்பட்டது. இதனால் நாட்டில் குழப்பம் நிறைந்தது. குடிகள் அமைதியான வாழ்வைச் சுவைத்து அநேக ஆண்டுகள் ஆயின. மக்களுக்கு இவ்வாழ்வு கசந்தது.

---

# 4. சிரோப்சிங்கின் ஆட்சி

மக்களின் மனநிலை இவ்வாறிருந்த காலத்தில்தான் சிரோப்சிங்கு அரியணை ஏறினர். இவர் தம் திறமை யாலும், அனுபவத்தாலும் அரசியலை நன்கு நடத்தி வந்தார். வீரமும், அழகும், அறிவும் நிறைந்து விளங் கும் தமிழ் மகளிர்க்கொப்ப வாழ்ந்த இராஜபுத்திரப் பெண்மணியாகிய **இராமாபாய்** என்ற அம்மையாரை இவர் வாழ்க்கைத் துணைவியாகப் பெற்றிருந்தார். பெண் களுக்கு இயற்கையாய்க் கூறப்படும் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் பண்புகளின் உருவாய் நின்ற இப்பெண்மணி தம் கணவனுக்கு நன் மனைவியும், நல் லமைச்சுமாய் இருந்து உற்ற உதவிகள் புரிந்து வந்தார். இவர் இருவரும் நாட்டின் நலனே தம் நலம் எனக் கருதிவந்தனர். "குடி உயரக் கோனுயரும்," என்னும் அவ்வையின் அமுதமொழியை நன்குணர்ந்த அரசர், தம் மக்களின் நலங்களில் கண்ணுங் கருத்துமாய் இருந் தார். தம் நாட்டில் நல்ல சாலைகளை அமைத்தார்; குளம் ஏரி முதலிய நீர்ப்பாசன ஏற்பாடுகள் செய்து உழவை வளப்படுத்தினர். பல கல்வி நிலையங்களை நிறுவி நாட்டில் நல்லறிவு பரப்பினர். புலவர் களுக்கு வரிசையும் பெருமையும் ஈந்து, கலையை வளர்த் தார். இவருடைய ஆட்சியில் குதிரையின் மூலம் பல இடங்களுக்கும் அஞ்சல் அனுப்பும் அரிய முறை கையாளப்பட்டது. மேலும், நந்தவனங்களும், சோலை களும், அன்ன சத்திரங்களும், கோவில்களும் அமைக் கப்பட்டு, நாடும் செழிப்பான நிலையில் இருந்தது. கள்ளர்களாலும், கொள்ளைக்காரர்களாலும், பிற நாட் டுப் படையெடுப்புகளாலும் தம்மக்களுக்குத் தீங்கு நேராவண்ணம் தம் படைபலத்தைப் பெருக்கி வலிமை செய்திருந்தார். சிரோப் சிங்கு அஞ்சாநெஞ்சம் படைத் தவர்; எவருக்கும் அடங்காத ஆற்றல் வாய்ந்தவர்.

அவரையொத்த சிற்றரசர் பலரும் அவருடன் அன்பு பாராட்டி அவரது நல்லுறவைப் பெற முயன்றனர். இங்ஙனம் செஞ்சிப்பட்டணத்தின் செங்கோல் செம்மையாக நடந்து வந்தது என்றாலும், சிரோப் சிங்கின் மனம் மாத்திரம் அமைதியற்றதாக இருந்தது. இதற்குக் காரணம் அவருக்குப் பிள்ளைப்பேறின்றி இருந்தமையேயாம்.

இல்லறமாகிய நல்லறத்திற்கு இனிமை தரும் மகப்பேறு இல்லாமை மன்னர் சிரோப் சிங்கின் மனத்தை வருத்தி வந்தது. முற்றும் துறந்த முனிவரது மனத்தையும் பற்றி இழுக்கும் பான்மை வாய்ந்த மகப்பேறு கருதி, மன்னர் பல நல்லறங்கள் செய்தார். 'கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும் செவ்விதழால்' மனத்தைக் கவர்ந்து மகிழ்ச்சியூட்டும் மக்கட்பேறு எய்தற்பொருட்டு மன்னர், நாட்டு மக்களுக்குப் பல நன்மைகள் செய்தார்; நோன்புகள் பல நோற்கப்பட்டன. இவரது தவப் பயனாய் இராணி இராமாபாய் கருப்பமுற்றாள். அது கண்ட மன்னரும் நாட்டு மக்களும் மட்டிலா மகிழ்ச்சியுற்றார்கள்.

---

## 5. விளையாட்டு மன்னன்

இதற்கிடையில் டில்லிப் பேரரசராக ஷா ஆலம் அரியணையில் அமர்ந்தார். அவர் கேளிக்கைப் பிரியர்; போட்டி விளையாட்டுகளிலும், குதிரைப் பந்தயத்திலும் மனத்தைப் பறிகொடுத்தவர். ஷா ஆலம் அரியணை ஏறிய காலத்தில் நவாபுகள் பேரரசை மதியாமல் தங்கள் நாட்டைத் தாங்களே ஆள முயன்று வந்தார்கள். நாட்டை ஒழுங்குபடுத்தி ஆட்சியை நடத்த ஆற்றலற்றவராய் இருந்த அவர், வாழ்வை வேடிக்கை விளையாடல்களிலேயே கழித்து வந்தார். ஒரு சமயம் ஷா ஆலத்திற்கு உயர்ந்த ஜாதிக் குதிரை

ஒன்று கிடைத்தது. அது மிக அழகாகவும் கம்பீர மாகவும், உடலுறுதி வாய்ந்ததாகவும் இருந்தது. அதன் நான்கு கால்களிலும், நெற்றியிலும் வெண்ணிறம் வாய்க்கப்பெற்றிருந்தமையால் அதனைப் பஞ்ச கலியாணி என்று மாந்தர் புகழ்ந்தனர். அச் சிறந்த குதிரை சவாரி செய்வதற்காக அவைக்குக் கொண்டுவரப்பட்டது. ஆனால், அக்குதிரை எவருக்கும் அடங்கி நடவாமல் முரட்டுத்தன மிக்கதாக இருந்தது. அவையில் இருந்த மன்னர் பலரும் குதிரையை அடக்கமுயன்று அவமான முற்றனர். அதுசமயம் அவையிலிருந்த தென்னாட்டு மன்னர் ஒருவர், செஞ்சி மன்னர் சிரோப் சிங்கு ஒருவரே அக்குதிரையை அடக்கும் ஆற்றல் வாய்ந்தவர் என்றும், மற்றையோர் அதனை அடக்குதலரிது என்றும் கூறினர். அதுகேட்ட ஷா ஆலம் உடனே செஞ்சி மன்னருக்குச் செய்தி அனுப்பினர். ஷா ஆலத்தின் அழைப்புக்கிணங்கிய சிரோப் சிங்கு டில்லியை அடைந்தார். ஷா ஆலம் வழக்கப்படி அவையைக் கூட்டிக் குதிரைச் சவாரிக்கு ஏற்பாடு செய்திருந்தார். சிரோப் சிங்கு அவையை அடைந்தவுடன் அவருக்கு நல்வரவு கூறி, அவரைப் பலபடப் புகழ்ந்தார். அதன் பின் பாடல்களும், ஆடல்களும் நிகழ்ந்தன. இத்தனைக்கும் பிறகு குதிரை கொண்டுவரப்பட்டது. ஷா ஆலம் எழுந்து, “மன்னர்களே! இங்குக் கொண்டுவரப்பட்டிருக்கும் இக்குதிரையை எல்லாரும் பாருங்கள்; இக்குதிரை பஞ்சகலியாணி இனத்தைச் சேர்ந்ததாகும். இதன்மீதமர்ந்து இன்னும் ஒருவரும் சவாரி செய்யவில்லை. இக்குதிரையை அடக்கிச் சவாரி செய்பவர் பதினாறு பாரம் நிறையுள்ள தங்கத்தைப் பெறுவார். அத்துடன் அவர் தமது நாட்டுப் பகுதிப்பணத்தையும் நமக்குத் தர வேண்டுவதில்லை. ஆனால், இப்போட்டியில் தவறுபவர் பதினாறு ஆண்டுகள் நமது சிறையில் அடைபட்டிருத்தல் வேண்டும்,” என்று எடுத்துக் கூறினர். கூடியிருந்த மன்னர்களுள் பலர்

பதினாறு பாரம் தங்கத்தையும், பகுதிப் பணத்தையும் எண்ணி ஆசைகொண்டாரெனினும், பதினாறு வருடச் சிறை அவர்கள் மனத்துக்குப் பயத்தைக் கொடுத்தது. ஒருவரையொருவர் பார்த்து விழித்தனரேயன்றிக் குதிரையை நடத்த எவரும் முன்வரவில்லை. ஷா ஆலம், "இவ்வழகு மிக்க குதிரையை நடத்துவதற்கு இச்சபையில் ஒருவரும் இல்லையா? இது நம் அவைக்கு இழுக்கைத் தருவதாகும். வீரம் செறிந்த மன்னர்களாகிய நீங்கள் ஒரு குதிரையை நடத்த அஞ்சுவதென்பது எனக்கே வெட்கத்தைத் தருகிறது," என்று பலபடப் பேசினார். இறுதியில் சிரோப் சிங்கைப் பார்த்து, "இக் குதிரையை நடத்துவது தங்களுக்கும் முடியாத செயல் தானா?" என்று வினவினார். அதுவரை மன்னனது சுடுசொற்களைக் கேட்டு மனங்கொதித்திருந்த சிரோப் சிங்கு என்ன நேர்ந்தாலும் குதிரையை அடக்கியே தீருவதென்று முடிவு செய்தார். சிரோப் சிங்கு தம் இருக்கையினின்று எழுந்து, "மன்னரது கட்டளை இருந்தால் என்னாலானதைச் செய்யச் சித்தமாயிருக்கிறேன்," என்று கூறினார். குதிரையைக் கண்டு அஞ்சிக் கிடந்த மற்ற மன்னர் மறுகணம் என்ன நடக்குமோ என்று எதிர்பார்த்திருந்தனர். ஷா ஆலம் மனமகிழ்ச்சியுடன் சிரோப் சிங்கிற்குக் குதிரையை நடத்துமாறு உத்தரவளித்தார். உறுதியான உள்ளமும், அஞ்சாமையும் பிறவிப் பண்புகளாகக் கொண்ட தென்னாட்டு மன்னர் சிரோப் சிங்கு குதிரையை நடத்த இசைந்தார். பாதுஷாவும், மற்றும் பல மன்னரும், வரிசை வரிசையாக அமைந்திருந்த ஆசனங்களில் அமர்ந்திருந்தனர். பல வகையான சிற்றுண்டிகள் வழங்கப்பட்டன. குதிரையேற்றத்தைக் காணவந்தவர்களின் கூட்டம் எங்கிலும் குழுமி இருந்தது.

சிரோப் சிங்கு, குதிரையேற்றத்திற்கு உரிய உடைகளை உடுத்திக்கொண்டு குதிரையை அணுகி,

அதன் கலினக் கயிற்றைப் பற்றி அதன் மீது ஏறினர். குதிரையின் முதுகில் அமர்ந்தது தான் தாமதம். என்றும் யாரையும் சுமந்தறியாத அக்குதிரை துள்ளியெழுந்தது. நேராகவும், சுழன்றும், வளைந்தும் ஓடத் தொடங்கியது. குதிரை மீதிருந்த மன்னர் சிரோப் சிங்கு, குதிரையின் துள்ளலுக்கு ஆற்ருது மண்ணில் சாய்ந்தார். அது கண்ட மன்னர் எல்லாரும் நகைக்கலாயினர். சிரோப் சிங்கு அவமானத்தாலும், காயத்தாலும் வருத்த முற்ற தோடு பாதுஷாவால் சிறையும் வைக்கப்பட்டார். அவர் கர்ப்பிணியாகிய தமது மனைவியைப் பிரிந்ததுபற்றி அள வில்லாத் துக்கம் கொண்டார். "ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு என்பது என்னளவில் உறுதியாகிவிட்டதே! ஐயோ! என்னைப் பிரிந்து இராமாபாய் எங்ஙனம் வாடு கிருளோ! அருந்தவம் செய்து பெற இருந்த குழந்தை யைக் கண்ணுலும் காண்பதற்குரிய பேறு பெருதவன் ஆனேனே," என்று இரவும் பகலும் ஏங்கித் துடித்தார். மன்னராக விளங்கிய சிரோப் சிங்கு ஒரு எளிய குடி மகன் போல நடத்தப்பட்டார். சுருக்கமாகக் கூற வேண்டுமானல் சிரோப் சிங்கின் உடல் டில்லியிலும் உயிர் செஞ்சியிலுந்தான் இருந்தன. அவர் அடைந்த துன்பம் அளத்தற்கரியது.

செஞ்சியிலிருந்த இராணி இராமாபாய் டில்லி சென்ற தன் கணவன் குதிரை யேற்றத்தில் தவறிச் சிறைப்பட்டதைக் கேள்வியுற்று மீளாத் துயரடைந் தாள். பதினருண்டுகள் சிறை கடந்தபின் தனது கணவரது முகத்தைப் பார்க்கும் பேறு வாய்க்குமோ என்று மனம் நைந்தாள். அரசர்க்கெல்லாம் அரசராக விளங்கிய ஷா ஆலத்தின் முறையைத் தடுத்துத் திருத்து வார் யாரும் இலர் என்பதையுன்னித் துன்பக் கடலில் மூழ்கினள். கவலையும் கண்ணீருமே உருவாக விளங்கிய இராணி இராமாபாயை அமைச்சர் பலர் அணுகி, "அன்னையே, தாங்கள் மகப்பேறு வாய்த்திருக்கும் இச்

சமயத்தில் கவலையுறுதல் ஆகாது. விரைவில் மன்னரை மீட்பதற்கு எங்களாலானதைச் செய்கிறோம். நிகழ்ந்ததைக் குறித்து வருந்துவதில் பயனில்லை. தாங்கள் வருந்தி வாளாவிருப்பின் அரசியல்களில் பல தொல்லைகள் ஏற்படுமாகலின், கவலையை ஒழித்துக் கடமையை ஆற்றுங்கள்,'' என்று தேறுதல் கூறினர். இராணி இராமாபாய் உரிய காலத்தில் செஞ்சிச் செல்வனாகிய தேசிங்கைப் பெற்றெடுத்தாள். நாடு முழுவதும் செல்வன் பிறந்ததற்காகக் கொண்டாட்டங்கள் நிகழ்ந்தன. விழாக்களும், கேளிக்கைகளும் மலிந்தன. இழந்த மன்னனை அடைந்ததே போன்று செஞ்சி மகிழ்ந்தது.

---

## 6. கல்வியும் இளமையும்

இராணி இராமாபாய் தன் தவச் செல்வனை வளர்ப்பதில் பெரிதும் ஊக்கம் காட்டினாள். தேசிங்கை இராப்பகலாகப் பாதுகாக்கத் தாதியர் பலர் நியமிக்கப்பட்டனர். தொட்டிலிலும், கட்டிலிலும், மார்மேலும், தோள் மேலும் வைத்துக் குழந்தையைக் கண்ணைப் போன்று பாதுகாத்து வந்தனர். கவலையுற்றிருந்த தாயின் கவலையைத் தன் இளஞ் சிரிப்பால் போக்கினான் கண்மணி தேசிங்கு. கணவனைப் பிரிந்து கவலையில் மூழ்கியிருந்த இராமாபாய் தன் குழந்தையின் கள்ளமற்ற சிரிப்பைக் கண்டு ஒருவாறு மனம் தேறி இருந்தாள். தேசிங்குக்கு வயது இரண்டாயிற்று; ஓடி விளையாடத் தலைப்பட்டான். அரண்மனையில் அலுவல் செய்யும் பெருமக்களின் குழந்தைகளோடு கூடி விளையாடினான். அவனுக்குக் கண்ணைக் கவரத் தக்க பல விளையாட்டுப் பொருள்கள் அளிக்கப்பட்டன. தந்தத்தாலும், தங்கத்தாலும் ஆன விளையாட்டுப் பொருள்களை அவன் விரும்பவில்லை. வாள், வேல், ஈட்டி முதலியவைகளே அவன்

மனதைக் கவர்ந்தன. ஆயுதங்களை எடுத்து விளையாடவே அவன் விரும்பினுன். தேசிங்கு, ஆயுதங்களை எடுத்து விளையாடும் போதெல்லாம் தோழிமார் தடுத்து நிறுத்துவர். அதுகண்ட இராமாபாய், "வீரர் குடியில் பிறந்த தேசிங்கு பொம்மைகளையா விரும்புவான்? அவன் எடுத்த வாளை அவனிடமே கொடுத்து விடுங்கள்," என்று கூறித் தேசிங்கின் விருப்பப்படி அதனை அவனுக்கு விளையாட்டுப் பொருளாகத் தருவாள். தேசிங்கின் விளையாடல்கள் பலவும், அரசியல் தொடர்புள்ளவைகளாகவே நிகழும். அவன், படை வகுப்பதும், முறை செலுத்துவதுமாகவே விளையாடுவான்.

இராணி இராமாபாய் நன்கு கல்வி பயின்றவளாதலால், தன் கண்மணி தேசிங்குக்கு இளம் வயதிலேயே சேரன் செங்குட்டுவன், கரிகாலன், இமயவரம்பன், சிவாஜி, அசோகன் முதலிய ஒப்பற்ற வீரர்களுடைய வரலாறுகளைக் கூறி வீர உணர்ச்சி ஊட்டுவாள். குமணன், பாரி, காரி, ஓரி முதலிய கொடைவள்ளல்களுடைய வரலாறுகளைக் கூறி அறவுணர்ச்சியைத் தோற்றுவிப்பாள். இங்ஙனம் தாயினிடம் நல்லறிவு பெற்ற தேசிங்கு, இளமையிலேயே, தான் சிறந்த வீரனுக வேண்டுமென்றும், கொடையாளியாக விளங்க வேண்டுமென்றும் உறுதி பூண்டான். தக்க காலத்தில் இவனுக்கு எழுத்தறிவு நல்கப்பட்டது. சிறந்த அறிஞர் பலர் அரண்மனைக்கு வந்து இவனுக்குக் கல்வி கற்பித்து வந்தனர். செஞ்சி நாட்டுச் செல்வன் தேசிங்கு அறிவுச் செல்வனுக நாட்டை அணி செய்ய வேண்டுமென்று கருதிய ஆசிரியர் பலர் இவனுக்குத் திறம்படக் கல்வி போதித்தனர். தேசிங்கும் கல்வியைக் கண்ணென மதித்துக் கருத்துடன் பயின்றுன். ஆண்டுகள் பன்னிரண்டு நிறைந்தன. மன்னர் குலமுறைக் கேற்பப் படைக்கலப் பயிற்சிகளைப் பயிலத் தொடங்கினுன். குதிரையேற்றம், யானையேற்றம், முதலிய பலவகை சவாரிகளிலும், வாள் சண்டை,

குத்துச் சண்டை, மற்போர் முதலியவைகளிலும் சிறந்த பயிற்சி பெற்றான். இவனைப் போல வாட்போர் முதலியவைகளில் நல்ல பயிற்சியும், திறமையும் பெற்ற **மகமத்கான்** என்பவன் தேசிங்குக்கு உற்ற நண்பனானான். இருவர் கருத்தும் ஒத்திருந்தமையின், இவர்கள்நட்பு ஒப்பற்றதாய் இருந்தது. இவர் இருவரும் உண்ணும் போதும், உறங்கும்போதும், கற்கும்போதும், விளையாடும்போதும் இணை பிரியாமலே இருந்து வந்தனர். இங்ஙனமாகப் பதினைந்தாண்டுகள் நிறைவதற்குள் எல்லாவகைக் கல்விகளும் கைவரப்பெற்றான் இளைஞன் தேசிங்கு.

---

## 7. தேசிங்கின் வீரச்செயல்கள்

தேசிங்குடன் இளமை முதல் நண்பனாகி, இடைவிடாது அவனோடு இருந்துவந்த மகமத்கானுக்குப் புதுச்சேரிக்கருகிலுள்ள **வழுதாவூர்** பிறப்பிடமாகும். அவன் தந்தையார் சிரோப் சிங்கிற்கு உற்ற நண்பராக விளங்கிய ஒரு சிற்றரசராவார். மகமத்கானும் தன் தந்தையைப் போலவே தேசிங்கினிடம் ஒட்டி உறவு பூண்டு மிகப்பற்றுடையவனாய் நடந்துகொண்டான். இவனது நட்புத் தேசிங்கிற்கு உற்ற உதவியாக விளங்கியது

ஒரு சமயம் தேசிங்கும் மகமத்கானும் தங்களுடைய நண்பர்களுடன் கூடிக் காட்டிற்கு வேட்டை ஆடச் சென்றனர். சிங்கம், புலி முதலிய பலவகை விலங்கினங்களைக் கொன்று மாலைநேரமானதும் வீரர்களோடு வீடு திரும்பினர். அதுசமயம் வேங்கை ஒன்று எதிர்ப்பட்டது. அது மிக நீளமாகவும் உயரமாகவும் இருந்ததோடு அதன் தலை மிகவும் பருத்திருந்தது.

அதன் கண்கள் நெருப்பைக் கக்குவனபோல விளங்கின. வேங்கையைக் கண்டனைவரும் கலங்கினர். அக்கொடிய வேங்கை, வீரன் ஒருவன்மேல் பாய்ந்தது. அது கண்ட நமது தேசிங்கு வேங்கையின் மீது பாய்ந்தான்; வேங்கை அறுபது அடி தூரத்திற்கும் அதிகமாகப் பாய்ந்தது. தேசிங்கு அவ்வளவு தூரம் பாய்ந்து, புலியை எட்ட முடியவில்லை. ஆனாலும் ஓடிச்சென்று தன் ஈட்டியால் புலியைக் குத்திக் கொன்றான். இதைக் கண்ட வீரர் அனைவரும் தேசிங்கின் தீரத்தை மெச்சினர். இறந்த புலியை அரண்மனைக்கு எடுத்து வந்து இராமா பாயிக்கும், அமைச்சர் பலருக்கும் காட்டித் தேசிங்கின் அஞ்சாமையையும், அறச் சிந்தையையும் விளக்கிப் புகழ்ந்தனர். இங்ஙனம், நண்பர்களாலும், அமைச்சர்களாலும், தாயாராலும், புகழுரை பெற்றும், தேசிங்கின் மனம் மட்டும் அமைதி பெறவில்லை. வேங்கை பாய்ந்த அவ்வளவு தூரம் தான் பாய முடியவில்லையே என்பது அவன் மனத்தை உறுத்தியது. அதற்காக தேசிங்கு தன் அரண்மனையிலேயே நீண்ட தூரம் பாய்வதற்குப் பயிற்சி செய்தான். மகமத்கானும் இப்பயிற்சியைப் பின்பற்றினான். இருவரும் நாள்தோறும் பயிற்சி செய்தனர். அரண்மனையைச் சேர்ந்த பயிற்சிசாலைச் சுவரொன்றில், பல அடி உயரத்தில் ஒரு குறியை அமைத்துக் கொண்டு அதனை எட்டித் தொடப் பழகி வந்தனர். சில நாட்களில் தேசிங்கு அக்குறியைத் தொட்டு விட்டான். அவன் அவ்வாறு தொட்டதற்கு அடையாளமாகச் சந்தனக் குழம்பைத் தன் கையில் பூசிக்கொண்டு அக்குறியின் மேல் அறைந்தான் என்றும், அந்த அடையாளமே இன்னும் இருந்து வருகிறதென்றும், செஞ்சிக் கோட்டையின் ஒரு பகுதியில் இன்றும் இதைக் காட்டுவர்.

ஒருநாள் செஞ்சியில் அரசவை கூடியிருந்தது. அரசர் பலரும் அணியணியாக அமர்ந்திருந்தனர். அன்று நவராத்திரி என்னும் விழாவில் இறுதிநாளாகை

யால், வீரர் பலர் தமக்குத் தெரிந்த சிலம்பம், மற்போர், குத்துச்சண்டை முதலிய விளையாடல்களைச் செய்து காட்டி, அவையை மகிழ்வித்தனர். புலவர் பலர் சொற்பொழிவாற்றினர். நாட்டியங்களும், பலவித வேடிக்கைகளும் நடந்தவண்ணமிருந்தன. அது சமயம் வடநாட்டு வீரனொருவன், தான் மற்போரில் வல்லவனென்றும், பல இடங்களிலும், சென்று பலரை வென்று வந்ததாகவும், தன்னுடன் யாராவது மற்போர் புரிந்து வென்றால் அவருக்குத் தான் அடிமையாகி விடுவதாகவும், அங்ஙனமன்றித் தன்னிடம் தோல்வியுறுபவர் தனக்கு அடிமையாகிவிட வேண்டும் என்றும் அவையில் நின்று கூறினான். அம்மல்லனது உரைகேட்ட செஞ்சி மல்லருள் பலர் அஞ்சினர். வடநாட்டு மல்லனுடன் பொருது வாகைசூட எவரும் முன்வரவில்லை. முடிவில் அம்மல்லனுக்குப் பரிசில் கொடுத்து அனுப்பி விடுவது என்றும் முடிவு செய்தனர். அதுவரை பொறுத்திருந்த தேசிங்கு எழுந்து, "இம்மல்லனுடன், போரிட்டு வெற்றி பெறுவதற்குச் செஞ்சியில் வீரர் ஒருவரும் இல்லையா? ஏன் விழிக்கிறீர்கள்? இங்ஙனம் இவனுக்குப் பரிசில் கொடுத்தனுப்புவது நமது செஞ்சியையே இழிவு படுத்துவதாகும்," என்று கூறினான். வீரர் அனைவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டாரேயன்றி, எவரும் முன் வரவில்லை.

உடனே தேசிங்கு தானே மல்லனுடன் போரிடமுற்பட்டான். அதுகண்ட அமைச்சர் முதலியவர் தடுத்தனர்; அவையினர் திகைப்பும், வியப்பும் கொண்டனர்; அடுத்த கணம் என்ன நேருமோவென்று அஞ்சினர். இருவருக்கும் போர் மூண்டது. அவையோருள் பலர் "மலைபோன்றிருக்கும் மல்லனுடன் செஞ்சிச் செல்வனைப் போரிட விடுவது தவறு, தவறு." என்று கூவினர். மல்லன் தேசிங்கைச் சுழற்றி எற்றுவதற்காக அணுகினான். ஆனால் தேசிங்கு அவன் பிடியில்

இருந்து தப்பி, அவனைப் பலவிதமாக நையப் புடைத்தான். மல்லன் தேசிங்கை அடக்குவதற்காகத் தான் கற்ற வித்தைகள் பலவற்றையும் பயன்படுத்தினான்; ஆனால் ஒன்றும் பயனளிக்கவில்லை. 'இத்தனை நாளும் பெற்று வந்த வெற்றியை இச்சிறுவனிடம் இழப்பதா?' என்ற மான உணர்ச்சி மல்லனை வாட்டி வதைத்தது. தாவிச் சென்று தேசிங்கைத் தாக்கினான்; உடனே தேசிங்கு அவன் கழுத்தை இறுகப் பற்றி நெறித்ததோடு, முகத்திலும் மாறி மாறிக் குத்தினான். வட நாட்டு மல்லன் வலியிழந்து மண்ணில் சாய்ந்தான். உடனே சபையிலிருந்தவர் ஆரவாரம் செய்தனர். தேசிங்கு வெற்றி வீரனாக விளங்கினான். தோல்வியுற்ற மல்லனுக்கும் வரிசைகள் வழங்கப்பட்டன. இச்செயலைக் கண்டார் அனைவரும் செஞ்சி வீரன் தேசிங்கை வாயார வாழ்த்தினர்.

இவைபோன்ற அருஞ்செயல்கள் பல் புரிந்த தேசிங்கு எல்லாராலும் நன்கு மதிக்கப் பெற்றுப் பெரு வீரனாக விளங்கினான்.

---

## 8. டில்லிக்குப் பயணம்

செஞ்சி மன்னனாகிய தேசிங்கு, அருஞ்செயல்கள் பல செய்து, நாட்டு மக்களை மகிழச் செய்தான். என்றாலும் தன் தந்தை டில்லி மன்னனது சிறையில் அகப்பட்டு வருந்தி வாழ்ந்ததை அவன் மறக்கவில்லை. தன் தந்தையின் நிலையைக்குறித்துத் தான் தனித்திருந்த போதெல்லாம் நினைத்து வருந்துவான். ஒரு நாள் அவன் வெளியே சென்று வந்த பொழுது, இராணி இராமாபாய் தனி அறை ஒன்றில் அமர்ந்து, கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கக் கண்ட தேசிங்கு, தாயின் வருத்தத்தின் காரணம் அறிய விரும்பினான். இராணி உற்றதைச் சொல்லித் தன் மகனது மனத்திற்கு வருத்தத்தை

அளிக்க விரும்பாததால், வேறு பல செய்திகளைக் கூறி உண்மையை மறைத்து விட்டாள். ஆயினும், ஊகித்து உணரும் ஆற்றல் வாய்ந்த தேசிங்கு, கொழுநனைப் பிரிந்த வருத்தமே தன் தாயின் வருத்தத்துக்குக் காரணம் என்பதை எளிதில் அறிந்தான். தாயின் வருத்தத்தை நீக்கவும் தந்தையாரின் மானத்தைக் காக்கவும் முனைந்தான். தன்னுடைய அமைச்சர் பலரையும் அழைத்துத் தந்தையாரை மீட்பதற்காகத் தான் டில்லி புறப்பட நிச்சயித்திருப்பதாகக்கூறினான். அமைச்சர்கள் தாங்களும் உடன் வருவதாகவும், ஷா ஆலத்திற்கு வேண்டிய சமாதானங்களை எடுத்துக் கூறி சிரோப்சிங்கை மீட்டு வரலாம் என்றும் யோசனை கூறினர். தேசிங்கோ இக்கருத்தை ஏற்றுக்கொள்ள வில்லை. "அச்சமற மக்களை அடக்கி ஆண்டு வாழவேண்டிய ஒரு மன்னன், அயலான் ஒருவனிடம் பிச்சை ஏற்று வாழ்வு பெறுவதா? கூடாது; எனது தந்தையார் எந்தப் பந்தயத்தில் தோல்வியுற்றாரோ, அந்தப் பந்தயத்தில் வெற்றிகண்டு, அவரை மீட்பதே தக்க செயலாகும். அதுவே செஞ்சியின் மாட்சியையும், என் தந்தையாரின் மானத்தையும் காக்க வல்லதாகும்," என்று கூறினான். இவ்வுரை கேட்ட அமைச்சர் பலரும் அஞ்சித் தேசிங்கு தனியே செல்வதைத் தடுத்துக்கூறினர். விடா முயற்சியும், மான உணர்ச்சியுமுள்ள தேசிங்கின் செவிகளில் அமைச்சர்களின் சொல் இடம் பெறுததாயிற்று. முடிவில் அன்னை இராமாபாயினிடமாவது கூறித் தடுத்தற்கு முயன்றனர். இராணி இராமாபாய் தேசிங்கைக் கண்டு, "மகனே! உன் தந்தையார் சிறை இடப்பட்டதிலிருந்து உனக்காகவன்றோ உயிர் வாழ்ந்து வருகிறேன். உன் தந்தையாரைப் பிரிந்த துக்கமனைத்திற்கும் உன் முகமன்றோ எனக்கு ஆறுதலாயுள்ளது. உன்னையும் பிரிந்து நான் எவ்வாறு வாழ்வேன்? உன் தந்தையார் இன்னும் ஓராண்டில் சிறை நீங்கி வந்துவிடுவார். நீயோ சிறுவன்; மனங்கொண்டபடி எதையும் செய்தல் பொருத்தமாகாது. என் கட்டளையைக் கட

வாதே. அமைதியாக இரு," என்று கேட்டுக்கொண் டாள். அதைக் கேட்ட தேசிங்கு, "தந்தைக்குற்ற அவ மானத்தையும், துன்பத்தையும் போக்காத நான் மன்ன னுவதற்குத் தகுதியுள்ளவனுவேனு? முடியுடை மூவேந்தர் படிபுகழப் பாராண்ட இத்தென்னுட்டில் பிறந்த நான், ஒரு குதிரையை அடக்கி, என் குலப்பெரு மையைக் காவாவிட்டால் நான் பிறந்ததன் பயன் யாது?

**"தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதில்லார்**
**தோன்றலில் தோன்ருமை நன்று."**

என்னும் வாக்கிற்கிணங்க நிலைபெருத இவ்வுலகத்தில் நிலைபெற்ற புகழைத் தேடுவதே மக்களின் கடமையா கும். உயர்வும், பெருமையும் உழைப்பவர்க்கே உரிமை யானவை. புகழ் என்பது எளிய பொருளன்று. உயிரைப் பணயம் வைத்து மேன்மையான செயல்கள் செய்ப வர்க்கே அதுகிடைக்கிறது. உல்லாசமாக உண்டுகளித்து ஊரைச் சுற்றும் சோம்பேறிகள் புழுக்கள்போல் தோன்றி மடிகின்ருர்கள். பெருமையடைய வேண்டு பவர் அருமையான செயல் ஆற்றியே தீரவேண்டும். என்னைத் தாங்கள் தடுத்தல் முறையன்று. வீரக் குடி யில் பிறந்த தாங்கள் என் ஊக்கத்திற்கு உதவியளித்து உறுதி கூறுவதை விடுத்து, தடுத்துக் கூறல் முறை யாகாது; விடைதாருங்கள்; வெற்றி வீரனுகத் திரும்பு கிறேன்," என்று கூறி டில்லி புறப்பட ஆயத்தமானுன். தேசிங்கின் மன வலிமையையும், விடாப்பிடியையும் கண்டு தாய் மகிழ்ந்தாள் என்றாலும் விடைதருவதற்கு அவள் மனம் ஒப்பவில்லை. ஆயினும், மகனது கட்டா யத்திற்கு இணங்கினுள். மகமத்கானும் தேசிங்கும் டில்லிக்குப் புறப்பட்டனர். பெருமக்களும், தாயும் "வெற்றியோடு திரும்புக"!என்று இருவருக்கும் ஆசி கூறி அனுப்பினுர்கள். வாழ்விலும் தாழ்விலும் இணைபிரி

யாத மகமத்கானும் செஞ்சிச்செல்வனும் குதிரையேறிப் பத்துத் தினங்களில் டில்லியை அடைந்தனர்.

ஒரு நாள் ஷா-ஆலத்தின் கேளிக்கை மண்டபத்தில் வழக்கப்படி மன்னர் பலர் நடனங்களைக் கண்டும், மனத்துக்கினிய பாட்டுகள் கேட்டும் மகிழ்ச்சியில் திளைத்திருந்தனர். பலர், குடித்துக் களித்துக் கூத்தாட்டங்களில் மூழ்கி இருந்தனர். அது சமயம் ஷா-ஆலத்தைக் காணவேண்டுமென்று சிறுவர் இருவர் வந்திருப்பதாகச் செய்தி கிடைத்தது. ஷா-ஆலம் அவர்களை உள்ளே அழைத்து வருமாறு கட்டளை இட்டார். வந்திருந்தவர் வேறு யாருமல்லர். செஞ்சிச் சிங்கம் தேசிங்கும், அவன் நண்பன் மகமத்கானுமேயாவர். தேசிங்கு, ஷா-ஆலத்திற்கு முறைப்படி வணக்கம் செலுத்தி நின்றான். ஷா-ஆலம் தேசிங்கைக் கண்டவுடன் அரச குடும்பத்தைச் சேர்ந்தவன் அவன் என்று தெரிந்து, தக்கதோர் ஆசனத்தில் அமரச் செய்து, உரையாடத் தொடங்கினார். "நீ யார்? எங்கிருந்து வருகிறாய்?" என்று ஷா-ஆலம் வினவியதைக் கேட்ட தேசிங்கு, "நான் தென்னாட்டில் விளங்கும் செஞ்சி மன்னர் சிரோப் சிங்கின் மகனாவேன்; இவன் எனது தோழன். இவன் பெயர் மகமத்கான்," என்று கூறினான். மேலும் தேசிங்கு தாங்கள் வந்த செய்தி யாது? என்று ஷா-ஆலம் வினவுவதற்கு முன்பே, "பாராசாரி என்னும் பஞ்சகலியாணிக் குதிரை ஒன்றை அடக்கி நடத்துபவருக்குப் பரிசில் கொடுப்பதாகவும், அதில் தவறுபவர்களைச் சிறைப்படுத்துவதாகவும் தாங்கள் பந்தயம் ஏற்படுத்தினீர்களாம். அப் பந்தயத்தில் என் தந்தையார் தோல்வியுற்றுச் சிறைப்பட்டதாகக் கேள்விப்பட்டேன். நான் தங்கள் குதிரையை அடக்கி என் தந்தையாரைச் சிறை மீட்டுப் போவதற்காகவே வந்திருக்கிறேன்," என்று வீரம் ததும்பத் தைரியமாக எடுத்துரைத்தான். அது கேட்ட வெள்ளறிவு படைத்த ஷா-ஆலம் கலகல வென்று நகைத்து, "சிறுவனே,

உன் துணிவுக்கு மெச்சுகிறேன். இது போன்ற வீர உரை கூறும் உன்னைப் பெற்றெடுத்த உன் தந்தையை நீ விரும்பினால், விடுதலை செய்து அனுப்புகிறேன். ஆனால், குதிரையை அடக்கும் எண்ணத்தை விட்டுவிடு. பல வீரர்களாலும், உன் தந்தையாராலும் அடக்க முடியாத குதிரையை, பாவம்! சிறுவனாகிய உன்னால் எவ்வாறு அடக்கமுடியும்?" என்று கூறி மேலும் நகைத்தார்.

அரசர்க்கரசரே, தாங்கள் என் தந்தையாரை விடுதலை செய்வதோ அல்லது என்னை மதிப்பதோ எனக்குப் பெரிதல்ல. முதலில் என் குடிக்கு ஏற்பட்ட அவமானத்தைப் போக்குவதற்காகவே நான் இங்கு வந்திருக்கிறேன். நான் குதிரையை அடக்கினாலும், அடக்காவிட்டாலும் தாங்கள் இன்னும் ஓராண்டில் என் தந்தையாரை விடுதலை செய்வீர்கள் என்பது நான் அறிந்ததே. எடுத்த காரியத்தை முடிக்காமல் தங்கள் தயவால் என் தந்தையாரைச் சிறை மீட்டுப் போவது, பிச்சை பெறுவதைப் போன்ற ஈனத் தொழிலாகும். தென்னாட்டு மன்னர்களாகிய நாங்கள் பிறரையண்டிப் பிச்சை பெறுதலை எந்நாளும் விரும்பியதும் இல்லை; இனி விரும்பப் போவதும் இல்லை. தயவு செய்து குதிரையேற அனுமதிக்குமாறு வேண்டுகிறேன்," என்று கூறி நின்றான். அது கேட்ட ஷா-ஆலம், "தேசிங்கு, நீ தென்னாட்டு வீரக் குடியிற் பிறந்த உண்மை வீரன் என்பதை அறிந்தேன். நீயோ சிறுவன்! குதிரையோ முரட்டுக் குணம் படைத்தது. வீணில் உயிரிழக்க வேண்டா என்பதற்காகவே இவ்வளவும் கூறினேன். இனி உன் விருப்பம். ஆனால், சிறுவனாகிய உன்னைக் குதிரை ஏறும்படி சொல்லிக் கொன்றுவிட்டேன் என்னும் பழிக்கு நான் ஆளாக மாட்டேன். குதிரை ஏறுவதும் ஏறாததும் உன் விருப்பத்தைச் சேர்ந்தது. இன்று முதல் உன் தந்தையை விடுதலை செய்திருக்கிறேன்," என்று கூறி, தன் பணியாளர்களை நோக்கித் தேசிங்கு தங்குவதற்கு வேண்டிய

ஏற்பாடுகளையும் அவனது தந்தையாரைக் கண்டு மகிழ் வதற்குரிய ஏற்பாடுகளையும் செய்யுமாறு பணித்தார். சிரோப்சிங்கு தம் மகன் தம்மை நாடிவந்திருந்த செய்தியைத் தூதர்கள் மூலம் கேள்வியுற்று அளவிலா ஆனந்தம் கொண்டார்; மகனைக் கண்டதும் வாரியெடுத்து உச்சி மோந்து முத்தமிட்டார். "என் கண்ணே, செல்வமே, இன்டம் நிறைந்த உன் சிறு பருவத்தைக் கண்டு களித்து மகிழும் பேறும் பெருத நான் நற் பேறில்லாதவனே யாவேன். என் குடி விளங்க வந்த குலமணியே! என்னை மீட்டுச் செல்ல வந்த உன் மன வலியை எவ்வாறு புகழ்வேன்?" என்று பலபடப் புகழ்ந்தார்; இராணியைப் பற்றியும் செஞ்சியைப் பற்றியும் விசாரித்தார். முடிவில், "மகனே! நான் இன்னும் ஓராண்டில் நாடு திரும்பிவிடுவேன்; நீ கவலை கொள்ள வேண்டா; பாராசாரிக் குதிரை மிகவும் முரட்டுத்தனமுள்ளது. சிறுவனுகிய உன்னல் அடக்குதற்கரியது. இக் குதிரையால் நான் பட்ட துன்பத்தை நீயும் அடைய விரும்புவது அறிவுடைமையாகாது. முடியாதகாரியத்திற்கு முயற்சி செய்வது ஏற்றதன்று,' என்று கூறித் தடுத்துரைத்தார். அது கேட்ட தேசிங்கு, தந்தையே! "மானம் இழந்த பின் வாழாமை முன்னினிதே," என்பது போன்ற நீதிகளைத் தாங்கள் அறியாதவரல்லர். குடிக்கு ஏற்பட்டபழியைத் துடைப்பதே மக்களாவார் செய்யத்தக்க கடமையாகும். அரிய செயலினையாற்ற அஞ்சாது முயல்பவரே பெருமைஅடைவர். 'முயற்சி திருவினையாக்கும்'என்னும் முது மறையின் கருத்தை உன்னுங்கள். இச் செயலால் துன்பமுற நேரினும் கடமையைச் செய்த பெருமை எனக்குண்டு. உள்ளம் உடையவர் உயர்வடைவாரேயன்றி, முயற்சியற்றவர் என்றும் உயர்வு பெருர். ஆதலின் எனக்குத் தடை கூருது விடை கொடுத்தல் வேண்டும்,'' என்று கூறி நின்ருன். இம் மொழிகளைக் கேட்ட சிரோப்சிங்கு தேசிங்கின் வீரத்தை மெச்சி, "உன் கருத்தை இறைவன் நிறைவேற்றட்டும்,'' என்று

ஆசி கூறினர். தக்கதொரு நாளிலே குதிரைச் சவா ரிக்கு ஏற்பாடாயிற்று. செஞ்சியிலிருந்து வந்த சிறுவன் ஒருவன் பாராசாரியை அடக்கப்போகிருன் என்றசெய்தி காட்டுத் தீயைப் போல டில்லி நகரம் முழுமையும் பரவியது. இக் காட்சியைக் காண மக்கள் அணி அணி யாக வந்து குழுமிய வண்ணம் இருந்தார்கள். அனைவரும் இக் காட்சியைக் காண்பதற்கு அரசரால் தக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பரந்த வெளி ஒன்றில் குதிரை ஏற்றம் நிகழ ஏற்பாடாகி இருந்தது. அங்குக் கூடாரம் அமைத்து, ஷா—ஆலமும் மற்றும் பல குறுநில மன்னர் களும் கூடி இருந்தார்கள். கூடியிருந்தவர், "வீராதி வீரர் களாலும் அடக்க முடியாத இக் குதிரையை இச் சிறுவ னல் அடக்க இயலுமா? இது வீண் முயற்சி; பேரழகு வாய்ந்த இச் சிறுவன் குதிரைக்குப் பலியாவதுதான் இன் றைய நிகழ்ச்சியின் சுருக்கம். அறியாத சிறுவன் தெரியாத செயலில் இறங்குவதைத் தடுத்தலன்றோ மன்னரின் கடமை. ஷா-ஆலத்தின் செயல்களனைத்திலும் விளை யாடல் நிறைந்திருப்பது போல, இன்றும் இவ்விபரீத விளையாடல் அமைந்திருக்கிறது," என்று கூறிக்கொண் டனர். மற்றும் பலர், "சிறுவனைக் குதிரைக்குப் பலி இடும் இத்தீச் செயலை நாம் கண்ணுற் காணுதலும் தீது," என்று கூறி இல்லம் திரும்புவதற்கு முயன்றனர். மற்றும் சிலர், "இச்சிறுவன் இக் குதிரையை அடக்கு வானேயானல் மிகமிக் வியப்புக்குரியதொன்ருகும்!" என்று கூறி நடக்க இருப்பதை விழித்த கண் மூடாமல் பார்த்துக்கொண்டே இருந்தனர். வீரர் பலர் குதி ரையை உரிய இடத்திற்குக் கொண்டுவந்து சேர்த்த னர். குதிரை மிகத் துடுக்கானதாகவும் அடங்காத தாகவும் இருந்தது.

வீரர்கள் குதிரையை அவைக்குக் கொண்டுவந்த வுடன் "குதிரையை அப்படியே பிடித்துக்கொள்ளுங் கள்," என்றுகட்டளையிட்டான் தேசிங்கு. குதிரையைக்

கண்டவுடன் தான் ஏறி அமரும்வரை குதிரை அடங்கி நில்லாது என்பதைத் தன் நுட்ப மதியால் அறிந்து கொண்டே அவன் அவ்வாறு கட்டளையிட்டான். இவனுக்கு முன் இக்குதிரையை நடத்த முயன்றவர் அனைவரும் தாமே குதிரையின்மீது ஏறத் தொடங்கியதனுல் தான் அவர்கள் தோல்வியடைய நேர்ந்தது. தேசிங்கு குதிரையின்மீது அமர்ந்து, கலினக்கயிற்றைச் செவ்வையாகப் பிடித்துக்கொண்டான். குதிரையைப் பற்றி இருந்த வீரர் குதிரையை விட்டுவிட்டு விலகினர். உடனே பாராசாரி பாய்ந்து ஓடத் தொடங்கியது. துள்ளியும், பிறழ்ந்தும், நெளிந்தும், குதித்தும் காற்றினும் கடிய வேகத்தில் ஓடிய குதிரையின்மீது தேசிங்கு அட்டையைப் போல் ஒட்டிக்கொண்டான். குதிரை ஓடி ஓடிப் பார்த்தது. ஒன்றும் முடியவில்லை. உடல்களைத்து வாயில் நுரைதள்ள அலுத்து நின்றது. தேசிங்கு தன் திறமையினுல் குதிரையின் துள்ளல்கள் அத்தனைக்கும் ஈடு கொடுத்தான். நடத்துவோனது விடாப்பிடியைக் கண்ட குதிரை பணிந்துவிட்டது. தேசிங்கு, குதிரையை நடத்தி அரசர்முன் கொண்டு வந்து நிறுத்தினுன். அவையிலிருந்தவர் அனைவரும் கை கொட்டி ஆரவாரம் செய்தனர். "தேசிங்கு வாழ்க! செஞ்சிவீரன் வாழ்க! குதிரையை அடக்கிய கொற்றவன் வாழ்க!" என்பன போன்ற வாழ்த் தொலிகள் வானைப் பிளந்தன.

இக் குதிரையேற்றத்தைக் குறித்துத் தேசிங்குராஜனைப் பற்றிக் கூறும் நாட்டுப்பாடல் பின்வருமாறு கூறுகிறது:

> குதிரையின் அருகே வந்து
> நின்றுன் குழந்தை தேசிங்கு;
> கொல்லும் வேங்கை போல
> நின்றது குதிரையும் அப்போது,

பார்த்தான் மன்னன் லகானைக்
கையால் பாங்குடனே பற்றிப்
பாய்ந்தே ஏறி முதுகில்
அமர்ந்தான் பாலன் தேசிங்கு;
கலகல வென்றே சிரித்துப்
பிடித்தான் கையில் சாட்டைதனை;
கனைத்த பரியைக் கழுத்தில்
தட்டினான் கண்மணி தேசிங்கு;
மட்டின தட்டில் குதிரை
கிளம்பித் தரையில் நில்லாமல்
தாவியே வானில் சென்று
பாய்ந்தது தங்கமேனிக் குதிரை;
மலையும் குன்றும் உடைந்து
சிதறி மண்ணில் விழுவதைப்பார்!
குன்று மலைகளைத் தாண்டித்
தாண்டிக் குதித்துப் பாயுதுபார்!
அசுவம் போகும் வேகத்திலே
அலையுது மேக மெலாம்!
மேகம் இடித்து மின்னல் கக்கி
மழையைப் பொழியுதுபார்!
புரவிபோகும் வேகம் அறிந்தான்
புலிக்குட்டி தேசிங்கு;
பொல்லாக் குதிரை தன்னைக்
கொல்லப் போகுதென் றறிந்தான்.
லகானை இழுத்துக் கொடுத்
தாண்சிமிட்டா ராஜா தேசிங்கு;

சிமிட்டா கொடுத்த வேகத்தினாலே
திகைத்து நின்றது பார்!
நின்ற குதிரையை டில்லிக்குத்
திருப்பி நேரே ஓட்டிவந்தான்;
நிமிஷந் தன்னில் கீழே
குதித்து நின்றான் தேசிங்கு
டில்லி துரையும் தேசிங்கு ராஜனை
சேர்த்தணைத் தெடுத்து
உயர்ந்த சிம்மாசனத்தில் வைத்து
ஒதுங்கிப் பக்கம் நின்றார்.

---

## 9. தேசிங்கின் திருமணம்

தேசிங்கு குதிரையேற்றத்தில் வெற்றிபெற்றதைக் கண்ட மன்னரும் மற்றையோரும் மட்டிலா மகிழ்ச்சியுற்றனர். பாதுஷாவும் வெற்றிபெற்ற வீரச் செல்வனுக்கு "இராஜா" என்ற பட்டத்தைச் சூட்டி மகிழ்ந்ததோடு, "இனி என்றும் நீர் கப்பம் கட்ட வேண்டுவதில்லை. இன்று முதல் செஞ்சியை உமக்கு இனமாக வழங்கி இருக்கிறோம்," என்றும் கூறினர். அதுவுமன்றி, அவன் ஏறி நடத்திய பாராசாரிக் குதிரையுடன் பல குதிரைகளையும், யானைகளையும் அவனுக்குப் பரிசிலாக வழங்கினர். பந்தயத்திற்கு என்று ஏற்பட்ட பரிசுப் பொருளாகிய பதினாறு பாரம் தங்கத்தையும், மற்றும் அரசரால் அளிக்கப்பட்ட பல வெகுமதிகளையும் தேசிங்கு பெற்றுத் தேசுற விளங்கினான். அவனுடன் வந்த தோழன் மகமத்கானுக்கும், மன்னர் பல வரிசைகள் செய்து

மகிழ்ந்ததோடு தாம் ஏறிச் சவாரிசெய்து வந்த நீலவேணிக் குதிரையை அளித்துச் சிறப்பித்தனர். இங்ஙனம் அருஞ்செயலாற்றிப் பெருஞ்சிறப்புப் பெற்ற தேசிங்கைக் கண்டவர் யாவரும் வாயாரப் புகழ்ந்தனர். "தென்னாட்டுச் செல்வனாகிய இவ்வருமந்த மகனைப் பெறுதற்கு இவன் தந்தை செய்த அருந்தவந்தான் யாதோ? இவனன்றோ வீர மகன்! தென்னாட்டவரே உலகில் வலியர் போலும்!" என்று கூறி வியப் புற்றனர்.

ஷா-ஆலத்தின் சேனாதிபதியாகவிளங்கியஇராஜபுத் திர வீரர் **பீம்சிங்கு** என்பவர்; தேசிங்கின் வீரத்திலும், அழகிலும் ஈடுபட்டுத் தமது ஒரே மகள் **இராணிபாயைத்** தேசிங்குக்கு மணம் செய்து கொடுக்க விரும்பினார். இதை அறிந்த ஷா–ஆலம், தேசிங்கின் தந்தையாராகிய சிரோப்சிங்குக்கு இதை எடுத்துக் கூறினார். சிரோப்சிங் கும் தேசிங்கும் இம்மணத்திற்கு உடன்பட்டனர். ஷா ஆலம் இத்திருமணத்தை டில்லியில் தமதுமேற்பார்வை யிலே நடத்த விரும்பினார். ஏழு நாட்கள் பெருத்த ஆர வாரங்களுடன் திருமணம் நடந்தேறியது. வேடிக்கைப் பிரியரான ஷா-ஆலத்தின் தலைமையில் நடந்ததிருமணம் எவ்வாறு நிகழ்ந்தது என்பதைக் கூறவும் வேண்டுமோ!

அதன் பின் தேசிங்கும், சிரோப்சிங்கும் சில நாள் டில்லியில் தங்கியிருந்துவிட்டு, ஷா-ஆலத்தினிடம் விடை பெற்றுக் கொண்டு செஞ்சி திரும்பினர். தந்தையைத் தேடிச் சென்ற தன் தவப் புதல்வன் திருமணமும், பரிசில்களும் பெற்றுச் செஞ்சிக்குத் திரும்புகிறான் என் பதைக் கேட்ட இராமாபாயின் உள்ளம் மகிழ்ச்சிக் கட லில் மூழ்கித் திளைத்தது; முகலாயப் பேரரசின் படைத் தலைவரான பீம்சிங்கின் மகள் இராணிபாய் தனக்கு மருகியாக வாய்க்கும் பேற்றை நினைந்து மனம் பூரித் தாள். டில்லியில் நிகழ்ந்த குதிரை யேற்றமும், மற்ற

நிகழ்ச்சிகளும், இராமாபாய்க்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தந்தன. தான் பெற்ற செல்வன், பெரும் பேறு பெற்றுத் தன்னைக் காணவரும் நாளை ஆவலோடு எதிர்பார்த்திருந்தாள். தனி மகனாகச் சென்ற தன் மகன் மணமகனாக வருதலைக் கண்ட தாய் அவனை வாரியெடுத்து மார்போடணைத்துக்கொண்டாள். தேசிங்கும் இராணிபாயும், அன்னையின் அடி தொழுது ஆசி பெற்றனர். தேசிங்கின் திருமணம் குறித்து மீண்டும் செஞ்சியில் பல கொண்டாட்டங்கள் நிகழ்ந்தன. ஆண்டுகள் பல கழிந்தன. செஞ்சி, புதுமை பெற்று விளங்கியது.

சிரோப்சிங்கு மன்னருக்கு முதுமை வந்துற்றது. உடல் மெலிந்து வலி குறைந்து நோய்வாய்ப்பட்டார். அவர் தம் மகனுக்குக் கூறவேண்டிய அறிவுரைகள் அனைத்தையும் கூறி இறப்பை எதிர்பார்த்து நின்றார். மன்னு வுலகத்து மன்னுவர் யாரே! இயற்கையின் முறைப்படி சிரோப்சிங்கு மரணமடைந்தார். அக்கால முறைப்படி இராஜபுத்திரக் குலத்துதித்த இராணி இராமாபாய் உடன்கட்டையேறி உயிர் நீத்தாள். தந்தையையும் தாயையும் ஒருசேர இழந்த தேசிங்கின் மன நிலை இருந்தவாறு என்னே! ஊகித்துக் கூறல் அருமையினும் அருமை! அளவில்லாத் துயருற்று அழுது புலம்பினான். தேசிங்கின் சிற்றப்பனான தரணிசிங்கு மன்னனும் மற்றும் அமைச்சர்களும், தேசிங்குக்குத் தேறுதல்கள் கூறினார்கள். தேசிங்கும் தந்தை தாயாருக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களை முடித்துப் பல மாதங்கள் துக்கம் காத்தான். அதன் பின் தக்கதொரு நாளிலே தன்னாட்டுப் பெருமக்களும், அமைச்சர்களும் புடைசூழ முடிசூட்டிக் கொண்டான். இவனுக்கு உற்ற உதவியாக இருந்து அரசியல் அலுவல்களை இவனது சிறிய தந்தையாராகிய தரணிசிங்கு கவனித்து வந்தார். தேசிங்கு பட்டத்திற்கு வந்தவுடன் தன்னாட்டு மக்களுக்குப் பலவிதமான நன்மைகளையும் செய்தமைத்தான். குடிமக்கள்

இன்பமுறுவதையே தன் குறிக்கோளாகக் கொண்டிருந்தான். குடிகளுக்கு உற்ற குறையைக் கூசாது தன்னிடம் கூற அநுமதி அளித்திருந்தான். வரிப் பணத்தில் பெரும் பகுதியை குடிமக்கள் நலனுக்காகவே செலவழித்து வந்தான். இராஜகிரியில் உள்ள அரண்மனையில் நாள்தோறும் அவையைக் கூட்டி முறை செலுத்துவதும், அரசாங்க அலுவல்களை மேற்பார்வை செய்வதுமாகக் காலம் கழித்தான். அரசாங்க அலுவலாளர்கள் குடிமக்களுக்குத் தீங்கு செய்யாதவாறு போதுமான எச்சரிக்கை செய்திருந்தான். அலுவலாளர் அனைவரும் பொது மக்களின் நலனைப் பாதுகாக்கவே அமைந்தவர் எனும் உண்மையைத் தன்னுடைய பணியாளர்களுக்கு நன்கு விளக்கியிருந்தான். பயிர்த் தொழிலுக்கு வேண்டிய நீர்ப்பாசன வசதிகளும், பிறவும் செய்தமைத்து உழவைப் பெருக்கினான். புலவர்களையும், அறிஞர்களையும் ஆதரித்து நாட்டின் அறிவை வளர்த்தான். தேசிங்கு பட்டத்துக்கு வந்தது முதலாகப் படையைப் பெருக்குவதில் கண்ணும் கருத்துமாக இருந்து வந்தான். நல்ல உடற்கட்டுடைய நாட்டு இளைஞர் ஆயிரக் கணக்கானவர் படையில் சேர்ந்து பணி புரிந்தனர். தன்னுடைய படைத்தலைவர்களைக்கொண்டு அவர்களுக்கு நல்ல பயிற்சி அளிக்குமாறு திட்டமிட்டிருந்தான். படை வீரர்களுக்குப் போதுமான பணம் செலவழிக்கப்பட்டது. தேசிங்கும் படை வீரர்களுடன் அடிக்கடி கலந்து போர்ப் பயிற்சிகள் செய்வான். வீரர்களுக்கு வீரஞ் செறிந்த சொற்பொழிவாற்றி வீரமூட்டுவான். இவனது படையில் தக்க ஒழுங்குமுறை நிலவியது. இதனால் செஞ்சிப் படை ஆற்றல் வாய்ந்ததென்று அயலரசர்களாலும் புகழப்பட்டது. இப்படைகளுக்குத் தேசிங்கு தன் தோழனான மகமத்கானைத் தலைவனாக்கினான்.

இங்ஙனம் இளைஞனான தேசிங்கு ஆட்சிக்கு வந்தவுடன் நாட்டையும், படையையும் திருத்தி வலியுற

அமைத்ததைக் கண்ட அயலரசர் அனைவரும் ஆத்திரம் கொண்டனர். செஞ்சிக்குத் தம்மால் ஏதாவது தீங்கு செய்ய முடியுமா என்பதைக் கனவிலும், நனவிலும் ஆராயத் தொடங்கினர். செஞ்சியைப்பற்றி நினைக்கும் போதே நம் வீரனது வாள் வலிமை அவர்களுடையகண் முன் தோன்றும். அதனால் அவர் வாளா இருந்துவிடுவர். இங்ஙனமாகச் செஞ்சி தேசிங்கின் ஆட்சிக் காலத்து ஒப்பற்ற பெருமையுடன் ஒளிர்ந்தது.

---

## 10. சையதுல்லா

*1711*ல் ஷா–ஆலம் இறந்தார். அவருக்குப் பின் **ஜகந்தர் சாஹிபு** என்பவர் சிங்காதனம் ஏறினர். அவரது ஆட்சி ஓராண்டுக்கு மேல் நிலைத்திருக்கவில்லை. அவரையும் அவரது அரசையும் ஆட்டிப் படைத்து வந்த சுல்பிகர்கான் என்பவனையும் **பரக்சியர்** என்பவன் படுகொலை செய்து சிங்காசனத்தைக் கைப்பற்றிக்கொண்டான். ஒரு மன்னனது ஆட்சிமாறி, மறுமன்னனது ஆட்சி நாட்டில் நுழையும் போது பல மாறுதல்கள் நிகழ்கின்றன. புதிய அரசனுக்குப் பழைய ஒழுங்கு முறைகள் பழுதாகத் தோன்றும். அதனால் புதிய முறைகளைப் புகுத்த முயலுவான். இந்நிலைகளில், சுயநலமிகள் புது அரசனை வசப்படுத்தக் கோளும், குண்டுணிகளும் பகர்ந்து கூழைக் கும்பிடு போட்டுப் புதிய அரசன் தயவிற்குப் போட்டியிடுவார்கள். இதனால் உண்மை ஊழியர்கள் ஒதுங்கிக் கிடக்கப் பதடிகள் முன்னேற்றம் அடைவார்கள். இம்முறையே பரக்சியர் பட்டம் பெற்ற காலத்திலும் நிகழ்ந்தது. பரக்சியர் பழைய நவாபுகளையும் மந்திரி முதலியவர்களையும் மாற்றிப் புதியவர்களை நியமிக்க ஏற்பாடு செய்தான். காரணம் பழைய அதிகாரிகள் ஷா-ஆலத்தின் குடும்பத்தின் மீது பற்றுள்ள

வர்களாக இருக்கக் கூடுமென்பதே. பரக்சியர் தனது நண்பனுகிய சையதுல்லாகானைத் தென்னுட்டுத் தலைவனுக்கினுன். தென்னுடுகள் அனைத்திற்கும் தொண்டை நாட்டிலிருக்கும் ஆர்க்காடே தலைநகரமாய் விளங்கியது. சையதுல்லாகானும் ஆர்க்காட்டைத் தலைநகரமாய்க் கொண்டு ஆட்சிபுரிந்து வந்தான். சையதுல்லாகான் பேராசை பிடித்தவன். பிரித்தாளும் சூழ்ச்சியில் வல்லவன். எந்நேரமும் தன் வளர்ச்சிக்குப் பாடுபடுபவன். பிறர், நலம் பெற்று இருப்பதைக் காணப் பொருதவன். எல்லாரும் தனக்கு இதஞ்செய்பவராய்த் தன் அடிவருடி வாழவேண்டுமென்ற பேராசை பிடித்தவன். இவன் காலத்துத் தென்னுடு பல சிறு பகுதிகளாகப் பிரிந்திருந்தது. இப் பிரிவுகளுக்குப் பாளையப்பட்டுகள் என்பது பெயர். ஒவ்வொரு பாளையப்பட்டுத் தலைவனும் படை பலமும், ஆட்சிப் பலமும் உடையவனுய் நாட்டில் அமைதியையும் நீதியையும் நிலைநிறுத்துவான். இப்பாளையங்களுள் செஞ்சியும் ஒன்று. செஞ்சியின் சிறந்த ஆட்சியும், படைபலமும், கோட்டையினது பொலிவும் வீரர்களது திறமையும் சையதுல்லாவின் மனத்தைக் கிளறிக் கொண்டே இருந்தன. சையதுல்லா எவ்வாருவது செஞ்சியை ஒடுக்கிவிட வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான்.

ஒருநாள் சையதுல்லா தனது கணக்கரை அழைத்துச் செஞ்சி சம்பந்தமான கணக்குகளைப் பார்வையிட்டான். ஷா–ஆலத்தின் காலத்திற்கு முன்பு சிரோப்சிங்கு ஆர்க்காட்டுக்கு வரி செலுத்தி வந்ததையும், அதன் பிறகு பல ஆண்டுகளாக அதற்கு வரிப்பணம் செலுத்தப்படாது இருந்ததையும் அறிந்தான். தனக்கு முன்னிருந்த நவாபுகள் செஞ்சி மன்னனிடம் வரி பெருமல் மற்றப் பாளையங்களிடம் மட்டும் வரி பெற்று வந்திருந்ததையும் அறிந்தான். சையதுல்லா ஷா–ஆலத்தின் காலத்திலிருந்து செஞ்சிக்குப் பகுதிப் பணம் விலக்

கம் செய்யப்பட்டிருந்ததை அறிந்தான் என்றாலும்பகை கொள்ளுவதற்குத் தக்க காரணத்தை நாடி நின்றான்.

இது இவ்வாறாக, டில்லி மன்னன் பரக்சியர் ஒரு நாள் வரி வசூல் கணக்குகளைப் பார்வை செய்தபோது, ஆர்க்காட்டு நவாபு தமக்குச் செலுத்த வேண்டிய பகுதிப் பணம் நிலுவையாக இருந்தது என்பதையும், செஞ்சி மன்னன் நீண்ட காலம் தமக்கு வரி செலுத்தவில்லையென்பதையும், ஏறக்குறைய எழுபது இலட்சம் ரூபாய்கள் செஞ்சியிலிருந்து தனக்கு வசூலாக வேண்டுமென்பதையும் அறிந்தான். உடனே தன் கணக்கரை அழைத்து, ஆர்க்காட்டு நவாபுக்குக் கடிதம் எழுத உத்தரவிட்டான். "நீண்டகாலமாகச் செஞ்சி மன்னன் நமக்குக் கப்பம் கட்டுவதில்லை. அவர்கள் தரவேண்டிய பகுதிப் பணத் தொகை எழுபது இலட்சத்திற்கு மேலாகிறது. உடனே நீர் சென்று செஞ்சி மன்னனிடம் பகுதிப் பணத்தைப் பெறுக! இல்லையேல் செஞ்சியைக் கைப்பற்றுக!" என்று கடிதமெழுதி, நவாபுக்கு அனுப்பினான். கடிதம் கண்ட நவாபு பக்ரஸியரின் கட்டளைப்படி செஞ்சியிலிருந்து பகுதிப் பணத்தைப் பெறவோ அன்றி செஞ்சியைக் கைப்பற்றவோ ஆற்றலற்றவனாயிருந்தான். என்றாலும் படையாலும், பணத்தாலும், கோட்டையாலும் பொலிவுற்று விளங்கிய செஞ்சியை எதிர்ப்பதற்குத் தக்க ஆதரவு கிடைத்ததென்றுஎண்ணி உளம் மகிழ்ந்தான். சையதுல்லா தனது கணக்கனாகிய **பங்காரு நாயக்கனை** அழைத்துக் கையிருப்புத் தொகையில் ஓரளவு பணத்தை டில்லி மன்னனுக்கு அனுப்பி வைத்ததோடு, மீதித் தொகையை மேலும் இருபது நாட்களில் அனுப்பிவைப்பதாகத் தவணையும் கேட்டுக் கொண்டான். செஞ்சி மன்னன் தேசிங்குமட்டும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேலாகக் கப்பம் கட்டுவதில்லை என்னும் செய்தியையும் மன்னருக்குக் கடிதத்தின்மூலம் தெரிவித்தான்.

செஞ்சி மன்னனை எதிர்க்கத் திட்டமிட்டு வந்த வஞ்சகனாகிய சையதுல்லா தோடர்மல் என்பவனை அழைத்துச் செஞ்சி மன்னரிடம் கப்பம் பெற்றுவரு மாறு தூதனுப்ப முடிவு செய்தான். தோடர்மல் வயது முதிர்ந்தவன். நீண்ட நாளாக முகம்மதிய மன் னர்களிடத்தில் அரசாங்க அலுவல்கள் புரிந்தவன். போதுமான நம்பிக்கையும், நாணயமும் வாய்ந்தவன். இவனைத் தோன்றமல்லன், தோன்றமல்லண்ணு என்றும் கூறுவர். இவனிடம் சையதுல்லா டெல்லி மன்னரிட மிருந்து தனக்கு வந்த கடிதத்தையும், பகுதிப் பணம் கட்டுமாறு தான் ஒரு கடிதத்தையும் எழுதித் தேசிங் குக்குஅனுப்பினான்.தேசிங்கின்அஞ்சாமையையும், படை வலிமையையும் தோடர்மல் நன்கு அறிவான். இத் தூது எத்தீதில் முடியுமோ என்று அவன் அச்சம் கொண்டான். செஞ்சிக்குச் செல்லும் வழியிலுள்ள திமிரிக் கோட்டையிலிறங்கிச் சேக்கு முகம்மது என்ற பாளை யக்காரனைக் கண்டு பேசினான். மற்றும் ஆரணிக்கோட் டையிலும் தங்கி வேங்கடராயன் என்ற சிற்றரசனிடத்தி லும் அளவளாவினான். ஷேக்கு முகம்மது, வேங்கடரா யன் முதலிய பாளையக்காரரனைவரும், "செஞ்சி, ஷா ஆலம் காலத்திலிருந்தே பகுதிப் பணம் கட்டுவதிலிருந்து நீக்கப்பட்டுவிட்டதே. இது நவாபு அறியாத செய்தி யன்றே. அறிந்திருந்தும் பகுதிப் பணம் கேட்டது அறியாமையாகவன்றோ முடியும். தேசிங்கு பகுதிப் பணம் கொடுத்தற்கு ஒருப்படான். தாங்கள் மிக எச்ச ரிக்கையாக நடந்துகொள்ளல் வேண்டும்," என்று தோடர்மலுக்கு அறிவுறுத்தினர். தோடர்மல் அச் செய்தியை நன்கு அறிவானாயினும், சையதுல்லாவின் கருத்துக்கு எதிராகத்தான் ஒன்றுஞ்செய்ய விரும்பாமை யால், தூது சென்றான். தோடர்மல் ஐம்பது குதிரை வீரர்கள் தன்னைச் சூழ்ந்துவரச் செஞ்சியை அடைந் தான். செஞ்சிக்கு மூன்று கல் தொலைவிலுள்ள பழைய செஞ்சி என்னும் மேலச்சேரியில் ஒரு பாடி வீட்டை

அமைத்துக் கொண்டு, தான் வந்திருந்த செய்தியைத் தேசிங்குக்கு அறிவிக்குமாறு ஒருவனை அனுப்பினான்.

இதற்குள் தேசிங்கு ஒற்றர்கள் மூலம் தோடர்மல் தூது வருவதையும், மற்றும் பிற செய்திகளையும் அறிந்துகொண்டான். அமைச்சர்களோடு கூடி இது பற்றி ஆராய்ந்தான். "எமது செஞ்சி அரசு என் தந்தையாரின் வீரத்தை மெச்சி அவுரங்கசீபால் பரிசாகக் கொடுக்கப்பட்டது. அவர் தம் மைந்தரான ஷா-ஆலம் என் குதிரையேற்றம் கண்டு வியந்து இறைப் பணத்தை நீக்கித் தந்தார். செஞ்சியைப் பிறர் பறித்துக் கொள்ளவோ, அன்றி அதற்குப் பகுதிப் பணம் கேட்கவோ நினைப்பது எத்துணை தவறான செயல்கள்?" என்று கூறினான். அதனால் ஆர்க்காட்டு நவாபுடன் தாம் எவ்வித எதிர்ப்புக்கும் தயாராக வேண்டுமென்பதை மந்திரி முதலியவர்களுக்கு விளக்கிக் கூறினான். அமைச்சர்கள் தோடர்மல் வந்திருப்பதையும், அவனிடம் சமாதானமாகச் செய்தியை எடுத்துக் கூறினால், அவனும் நவாபு முதலியவர்களுக்குச் சொல்லி, ஒருவாறு சமாதானமாய்ப் போவதற்கு வழி ஏற்படுமென்றும் எடுத்துக் கூறினார்கள். போரில் தாமே வென்றாலும், அளவற்ற பொருள் சேதமும், பெருந் தொல்லையும், உயிர்ச் சேதமுமேற்படும். ஆகையால், முதலில் சமாதானத்திற்கு ஏற்றவைகளையே செய்தல் நலம் என்று கூறினார்கள்.

இதற்கிணங்கிய தேசிங்கு தோடர்மலைக் காணத் தன் பரிவாரங்களோடு புறப்பட்டான். தோடர்மல் செஞ்சிக்கு மூன்று கல் தொலைவிலுள்ள பழைய செஞ்சியில் தங்கி இருந்தானதலால், தேசிங்கு தன் பரிவாரங்களுடன் அங்குச் சென்றிருந்தான். அரசன் வருவதைக் கண்ட தோடர்மல் அவனை எதிர்கொள்ள எழுந்து சென்றான்.

அங்ஙனம் எதிர் வந்தவனைக் கண்ட தேசிங்கு, முறையாகக் குதிரையை விட்டு இறங்கி வணக்கம் செய்திருத்

தல் வேண்டும். ஆனால், தேசிங்கு குதிரையை விட்டு இறங்காமல் அதன் மீது அமர்ந்தவாறே 'சலாம்' செய்தான். இம்முறையற்ற முறையைக் கண்ட தோடர்மல் மனம் வருந்தி, மன்னனை எதிர் கொண்டு அழைக்காது, திரும்பித் தன் கூடாரத்திற்குச் சென்று விட்டான். தேசிங்கும் தோடர்மல் தன்னை வரவேற்பு செய்யாததை அறிந்து செஞ்சிக்கோட்டைக்குத் திரும்பி விட்டான். இங்ஙனம் இவர்களது சந்திப்பு முடிந்தது.

தோடர்மல் செஞ்சி மன்னனது செய்கைக்கு வருந்தினன் என்றாலும், இளைஞனாக இருப்பது கண்டு அறியாமையால் செய்திருக்கக் கூடும் என்று ஒருவாறு தணிந்து, திரும்பவும் தேசிங்கைக் காணுவது என்று முடிவு செய்தான். மறுநாள் காலையில் தோடர்மல் தன்னை மிக அழகாக அலங்கரித்துக்கொண்டு, குதிரை வீரர்கள் சூழ்ந்து வரச் செஞ்சியை அடைந்தான். அரச மரியாதையுடன் தேசிங்கைக் கண்டான்.

தேசிங்கு தோடர்மலை வரவேற்று ஆசனம் கொடுத்தான். தோடர்மல் தேசிங்குக்கு அக்கால முறைப்படி பல சிறந்த பொருள்களைக் கொடுத்து உரையாடிய பின் "தற்போது நம் நாட்டுக்கு பரக்சியர் மன்னராக விளங்குகிறார். அவருக்கு எல்லா அரசர்களும் கப்பம் கொடுத்து நாட்டில் அமைதியையும் நீதியையும் நிலைநிறுத்துகிறார்கள். எல்லோரையும் போலத் தாங்களும் கப்பம் செலுத்தி, நாட்டில் நீதியை நிலைநிறுத்த உதவ வேண்டும். இச் செய்தியைத் தங்களிடம் எடுத்துக் கூறிக் கடந்த பல ஆண்டுகளாக நிலுவையாக நிற்கும் கப்பப்பொருளை வசூலித்து வருமாறு ஆர்க்காட்டு நவாபு என்னைத் தங்களிடம் அனுப்பி இருக்கிறார்." என்று கூறினன். அது கேட்ட தேசிங்கு புன்சிரிப்போடு "தூதரே! தங்கள் பேச்சு வேடிக்கையானது. ஷா-ஆலத்தின் முன் டில்லிப் பட்டணத்தில்

குதிரையின் துடுக்கை அடக்கிப் பாதுஷாவால் 'ராஜா தேசிங்கு' என்னும் பட்டம் பெற்றதையும், செஞ்சிக்குப் பகுதிப் பணம் நீக்கப் பெற்றதையும், பாதுஷாவால் பீம்சிங்கு மன்னன் மகள் திருமணம் செய்து கொடுக்கப்பட்டதையும் இந்நாட்டிலுள்ள யாவரும் அறிவரே. இது தங்கள் நவாபுக்குத் தெரியாதா?" என்று வினவினன். உடனே தோடர்மல், செஞ்சியின் அரசாட்சியை ஷா-ஆலம் இனும் செய்து தரவில்லை என்றும், மரியாதைகளும், பட்டங்களும் வழங்கப்பட்டனவே அன்றிப் பகுதியை இனும் செய்து தரவில்லை என்றும், எல்லாரையும் போலவே தேசிங்கினிடம் பகுதிப் பணம் வசூலிக்க வேண்டும் என்று டில்லியிலிருந்து கட்டளை கிடைத்துள்ளது என்றும் தோடர்மல் கூறினன். உடனே தேசிங்கு, "தங்கள் நாவாபு போதுமான அநுபவம் அற்றவர்; பதவிக்கு வந்து ஓராண்டு தான் ஆகிறது. என் தந்தை காலத்திலிருந்து வரி தராமல் வாழும் நான், இப்புதிய வழக்கத்தை ஏற்றுக்கொள்வதற்கு ஒரு சிறிதும் சம்மதியேன். என் நாட்டின் ஆளுகையில் பிறர் குறுக்கிடுவதற்குச் சிறிதும் இடந்தரேன். பழைய வழக்கங்களையும், நடந்து கொள்ள வேண்டிய ஒழுங்கு முறைகளையும், அநுபவம் மிகுந்த அமைச்சர்களைக் கொண்டு உம் நவாபை அறிந்து கொள்ளச் சொல்லும். டில்லி மன்னர் ஒருக்காலும் என்னைப் பகுதிப் பணம் கட்டுமாறு கூறி இரார்", என்று கூறினன். அது கேட்ட தோடர்மல் தான் கொண்டு வந்த இரு கடிதங்களையும், தேசிங்கினிடம் கொடுத்தான்.

தேசிங்கு தான் பெற்ற கடிதங்களை அமைச்சர் ஒருவரிடம் கொடுத்துப் படிக்குமாறு கூறினன். அமைச்சரும் டில்லி மன்னனது கடிதத்தையும், நாவாபினுடைய கடிதத்தையும் படித்துக்காட்டினன். "கூடுமான விரைவில் பகுதிப் பணம் கட்டிவிடவேண்டும்; இல்லையேல் செஞ்சி அரசு பறிக்கப்படும்," என்பதே

கடிதத்தின் சுருக்கம். செஞ்சி பறிக்கப்படும் என்ற செய்தியைக் கண்டவுடனே தேசிங்கின் கண்கள் சிவந்தன; மீசை துடித்தது. செஞ்சி எனது உரிமைத் திருநாடு. என் தந்தையார் செய்த அருஞ்செயலைக்கண்டு மனமகிழ்ந்த ஔரங்கசீபினால் பரிசாகக் கொடுக்கப்பட்டது. வீரம் காரணமாகப் பெற்ற பரிசுப் பொருள் செஞ்சி. செஞ்சி பிறருக்கு அடங்கி நடக்கவோ, பகுதிப் பணம் கட்டவோ என்றும் சம்மதியாது. வீரர் பரிசாகப் பெற்ற செஞ்சி, வீரர்களை இழந்த பிறகுதான் பிற அரசருக்கு அடிமைப்படும். செஞ்சிக் கோட்டைக்குள் வீரன் ஒருவனுடைய உடலில் இரத்தம் ஓடிக்கொண்டிருக்கும் வரையில் செஞ்சி பிறர் வசப்படாது. நீர் ஒரு சாதாரணத் தூதர் என்பதற்காக உம்மிடம் இரக்கங் காட்டுகிறேன். நீர் கூறியது போல் நவாபு கூறியிருந்தால் அவன் உயிர் இந்நேரம் உடலை விட்டுப் பிரிந்திருக்கும். எங்களிடம் நவாபு வரி பெற விரும்பினால் வரகும், வைக்கோலுந்தான் கிடைக்கும். வரி பெற விரும்பும் உமது நவாபை வந்து எங்கள் கோட்டை மேட்டு மணலை அள்ளிப் போகச் சொல்லும். செஞ்சியான் அஞ்சுவான் என்று கனவிலும் கருதவேண்டா. செஞ்சியை அடிமைப்படுத்த நினைக்கும் ஒவ்வொரு உள்ளமும் ஈட்டியால் துளைக்கப்படும் என்பதை மறக்க வேண்டா; செஞ்சி நாட்டை நீங்கள் கைப்பற்ற முடியாது; அப்படி நினைப்பீர்களாயின், ஆயிரக் கணக்கான தலைகள் பந்துகள் போல உருளும். இரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடும். இதை நல்லறிவற்ற உமது நவாபுக்குக் கூறும்," என்று கூறியவண்ணம் தோடர்மல் கொடுத்த இரண்டு கடிதங்களையும் தரையில் வீசி எறிந்தான்!

இதைக் கண்ட தோடர்மல் தனக்கு ஏதாவது தீங்கு நேருமோ என்று அஞ்சினான். தனது தலைவனாகிய நவாபை இழிவுபடுத்தியதைக் குறித்துப் பெரிதும் வருந்

தினன் என்றாலும் பேசுவதற்கு அஞ்சினான். மன்னனால் எறியப்பட்ட கடிதங்களை எடுத்துக்கொண்டு தோடர்மல் திரும்பி விட்டான். தோடர்மல் திரும்பி வந்ததை அறிந்து, சையதுல்லா அவனை மகிழ்ச்சியோடு வரவேற்றுச் செய்தியை அறிய விரும்பினான். தோடர்மல் மிக்க வருத்தத்தோடு நடந்தவை அனைத்தையுங் கூறினான். இதைக் கேட்ட நாவாபு முதலில் அஞ்சினான் என்றாலும் டில்லி மன்னனது ஆதரவு தனக்கு இருந்தமையால் செஞ்சியை எதிர்க்க மனந்துணிந்தான். மற்றும் பல பாளையக்காரர்களுக்கு தத்தம் படையுடன் ஆர்க்காடு வந்து சேரும்படி கடிதம் எழுதி அனுப்பினான்.

---

## 11. படையெடுப்பு

தேசிங்கின் நண்பனாகவும், செஞ்சிச் சேனையின் தலைவனாகவும் விளங்கிய மகமத்கான், கலியாணம் செய்து கொள்வதன் பொருட்டு வழுதாவூருக்குச் சென்றான். அவன் திரும்பி வரும்வரை **யூசப்கான்** சேனைத் தலைவனாக நியமிக்கப்பட்டான். யூசப்கான் இயற்கையாகத் தீய பண்புகளும், குடிப் பழக்கமும் உடையவன். இவன் ஒரு சமயம் தன் அதிகாரச் செருக்கால் தன்னைப் போன்ற **தாதேகான்** என்ற படைத்தலைவனை மரியாதைக் குறைவாக நடத்தினான். தாதேகான் தந்திரமும், திறமையும் வாய்ந்தவன், நல்ல அறிவாளி; யூசப்கான் மீது வஞ்சம் தீர்க்கக்கருதினான். ஒரு சமயம் யூசப்கானுக்குத் தன் இல்லத்தில் விருந்தளிக்க ஏற்பாடு செய்தான். அதற்குப் பல பெரியார்களையும் வரவழைத்திருந்தான். அவ்விருந்தில் மட்டுமிதமின்றி யூசப்கானுக்கு மதுவை வழங்கினான். வெள்ளறிவு படைத்த யூசப்கான் கணக்கு மிதமின்றி மதுவை அருந்தி மயங்கிக் கிடந்தான். இச்சமயத்தை எதிர்பார்த்திருந்த தாதேகானின் முன்னேற்பாட்டின்படி ஒரு வீரன் யூசப்கானைத் திட்டத்

தொடங்கினுன். யூசப்கான் தன்னைத் திட்டிய வீரனைக் கத்தியால் தாக்கவே, தாதேகான் அந்நிகழ்ச்சியை வந்திருந்த பலருக்கும் காட்டித் தேசிங்கினிடம் போய் யூசப் குடித்து வெறித்துப் பலரை வம்புக்கிழுத்துத் துன்புறுத்தியதாக முறையிட்டான். இதனுல் யூசப், தனது சேனைத் தலைவன் பதவியை இழந்து, போர் வீரனுக மாற்றப்பட்டான். தாதேகான் சேனுதிபதியாக நியமிக்கப் பட்டான். யூசப் மது வெறியால் தனக்கேற்பட்ட மானக் கேட்டை எண்ணி வருந்தியதோடு, தான் இனிச் செஞ்சிச் சேனையில் இருக்கக் கூடாதென்றும், செஞ்சிச் சேனைக்குள் கலவரத்தை உண்டாக்க வேண்டுமென்றும் கருதிப் பல முயற்சிகள் செய்தான். ஒன்றும் பலிக்க வில்லை. இதனுல் யூசப்கானுக்குத் தாதேகான் மீதும் தேசிங்கின் மீதுமிருந்த வெறுப்பு அதிகரித்தது.

இது இவ்வாருக, ஆர்க்காட்டு நவாபு பல பாளையக் காரர்களைத் திரட்டிக் கொண்டு, செஞ்சியை எதிர்க்கத் திட்டமிட்டான். முதலில் தகுதியான ஒற்றர் மூலம் செஞ்சியின் செய்திகளை அறிய விரும்பினுன். தேசிங்கின் தந்தையாகிய சிரோப்சிங்கின் காமக்கிழத்தியின் மகனுகிய **தாவுத்கான்** இளமையில் சில மேல் நாட்டு வியாபாரிகளுடன் கூடிக் கான்ஸ்டாண்டிநோபிள், துருக்கி முதலிய பல நாடுகளையும் சுற்றி வந்தான். என்ருலும், அவன் சிறந்த வீரனுகவும், கூடுமானுல் படைத்தலைவனுகவும் இருக்க விரும்பினுன். தாவுத்கான் செஞ்சி மன்னனுக்கும் ஆர்க்காட்டு நவாபுக்கும் இருந்த பகைமையை அறிந்துகொண்டு, அது சமயம் ஆர்க்காட்டு நவாபை அணுகினுல், தன் கருத்து நிறைவேறுமென்று கருதினுன். ஆர்க்காட்டு நவாபைக் கண்டு தன் கருத்தை எடுத்துரைத்தான். இயற்கையிலேயே செஞ்சியினிடம் வெறுப்புற்றிருந்த தாவுத்கானே செஞ்சியின் செய்திகளை அறிந்து வரத் தக்கவன் என்று எண்ணிய ஆர்க்காட்டு நவாபு, முதலில், "நீ செஞ்சியின்

செய்திகளை அறிந்து வரவேண்டும்" என்று தாவுத் கானுக்குக் கட்டளையிட்டான். தாவுத்கான் ஓர் அயல் நாட்டு வியாபாரியைப் போல வேடம் பூண்டு கவசம், துப்பாக்கி, உடைவாள் முதலிய பாதுகாப்புடன் செஞ்சியுள் நுழைந்தான். அங்ஙனம் நுழைந்த தாவுத் கான் காவல் வீரர்களுள் பலரையும் கண்டு, செஞ்சி யின் நுட்பங்களை அறிய விரும்பினான். ஒன்றும் பயன் படவில்லை. இறுதியில் பூசப்கானிடம் உரையாடினான். பூசப்கான் செஞ்சியையும், தேசிங்கையும் பல முறை இழித்துக் கூறியதை அறிந்த தாவுத்கான், தன் கருத்திற் கேற்றவன் பூசப்கானே என்று முடிவு செய்து, அவன் மூலம் செஞ்சியின் நுட்பங்களை அறிந்து கொண்டான். பூசப்கான் மாறு வேடம் பூண்டு வந்தவனாகிய தாவுத் கானை அரசவை முதலியவைகளுக்கும், படைக்கலச் சாலைகளுக்கும் அழைத்துக்கொண்டு போய்க் காட்டி னான். வஞ்சமறியா நெஞ்சுடைய தேசிங்கும், தாவுத் கானை வணிகனென்றே கருதி வரிசைகள் பல செய் தான். பல நாட்கள் செஞ்சியில் தங்கிய தாவுத்கான், செஞ்சியின் படைபலம், போர்க்குரிய ஏற்பாடுகள், சுரங்க வழிகள் முதலியவைகளைப் பற்றி நன்கு அறிந்து கொண்டதோடு, தாக்கவருபவர்கள் வடக்குக் கோட்டை வாயிலிலுள்ள சுரங்கத்தின் வழியாக வரவேண்டுமென் பதையும் அறிந்துகொண்டான். இறுதியில் நவாபை அடைந்து எல்லாச் செய்திகளையும் எடுத்துக் கூறினான். இவ்வொற்றறிதலை வெற்றியுடன் முடித்து வந்த தாவுத்கானுக்கு நவாபு தன் படைத்தலைமையை அளித் தான்.

நவாபு 1714-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 10-ஆம் நாள் செஞ்சியின்மீது படையெடுத்தான். செஞ்சியினது திறமையான ஆட்சியையும் வீரர்களையுங் கண்டு மனம் புழுங்கியிருந்த சுற்று வட்டாரப் பாளையங்களின் படை களனைத்தும் நவாபுக்குத் துணை செய்தன. குதிரைப்

படை, யானைப்படை, காலாட்படை, பீரங்கிப்படை முதலியவைகளுடன் எண்பதினாயிரம் வீரர் செஞ்சி நோக்கிப் பயணமாயினர். பாளையங்கள் செஞ்சிக்கு அண்மையிலுள்ள தேவனூரில் வந்து தங்கின. ஆங்காங்கே உள்ள பாளையங்கள் படைகளுக்கு வேண்டிய உணவு வசதி முதலியவை செய்தன. திருவண்ணாமலைப்பாளையக் காரனான சுபங்கித்துரை செஞ்சியைச் சேர்ந்த தேவனூரை முதலில் கொள்ளையிட நவாபினிடம் அனுமதி கேட்டான். சுபங்கித் துரையின் தலைமையில் தேவனூர் கொள்ளையிடப்பட்டது. போர் வீரர்கள் பொது மக்களிடமிருந்து பொன்னையும், மணிகளையும் கொள்ளை கொண்டதோடு வீடுகளையும் தீக்கிரையாக்கினார்கள். வயல்களிலிருந்த பயிர்ப் பச்சைகள் நாசஞ் செய்யப்பட்டன. பெண்களை மரியாதைக் குறைவாக நடத்தினார்கள். குழந்தைகளையும், முதியோர்களையும் மற்றும் ஆடு மாடுகளையும் கொன்று குவித்தார்கள். எங்கும் கொலையும், களவும் மலிந்ததை அறிந்த ஊரார் நாலாபக்கங்களிலும் சிதறியோடினர். தேவனூரில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கோட்டை அலங்கங்களிலிருந்து தேசிங்கும், அவனது சிற்றப்பனான தரணிசிங்கும் கண்டனர். தேவனூரார் பலர் செஞ்சிக் கோட்டைக்குள் வந்து அடைக்கலம் புகுந்தனர். தேசிங்கின் இரத்தம் கொதித்தது. இதற்குள் தேவனூரார் பலர் வந்து தேசிங்கினிடம் முறை இட்டனர். தேசிங்கு, "எமது நாட்டு மக்களே, நீங்கள் அஞ்ச வேண்டா! நவாபு ஒரு தேவனூரைக் கொள்ளை இட்டதற்குப் பதிலாக அவனது ஒவ்வொரு ஊரையும் கொள்ளை இட்டு உங்களுக்கு ஈடு செய்கிறேன். நீங்கள் அஞ்சுதல் வேண்டா," என்று ஆறுதல் கூறிவிட்டு, மேல் நடக்க வேண்டியவைகளைப்பற்றி ஆலோசிப்பதற்காகச் சென்றான்.

நவாபு, செஞ்சியின்மேல் படையெடுத்த செய்தியை வழுதாவூர் சென்றிருந்த சேனைத்தலைவன் மகமத்

கான் அறிந்தான். உற்றாரும், உறவினரும் கூடி இருந்த மணப் பந்தலில் மகமத்கான் மணக்கோலம் பூண்டு நின்றான். அது தாலிகட்டும் சமயம்; தாலியைக் கையி லும் ஏந்தி விட்டான்; பகைவர்கள் செஞ்சியின்மீது படையெடுத்த செய்தி அவன் காதுக்கு எட்டிய பின் தான் மணமகனாக இருப்பதை அவன் விரும்ப வில்லை. பந்தலில் இருந்தவர்களைப் பார்த்து, "பெரி யோர்களே! ஆர்க்காட்டு நவாபு என் அன்னைநாடு செஞ்சி யின்மீது அணிவகுத்து நின்றான். நான் மணமகனாக இருந்து மகிழக்கூடிய நேரம் இதுவன்று. தாய்நாட் டைக் காப்பதினும் தாலிகட்டி மகிழ்வது வீரனுக்கு இன்பமளிக்காது. என் நாட்டு மக்கள் இன்னலுக்கு ஆளாகி இரத்தக் கண்ணீர் வடிக்கும் போது, நான் மணத்தில் மகிழ்வது மடமையாகும். என் உயிர் செஞ்சியி லிருக்கிறது. படையில் கலந்து போரிட்டுப் பகை வர்களை முதுகிடச் செய்து, வெற்றிவீரனாகத் திரும்பிய பின், நான் மணம் முடித்துக் கொள்கிறேன். என்னை ஒருவரும் தடை செய்ய வேண்டா. உத்தரவு கொடுங் கள்," என்று கூறியவண்ணம் எடுத்த தாலியைத் தட்டி லேயே வைத்துவிட்டுச் செஞ்சிக்குப் புறப்பட்டான்; அது சமயம் அவனது தாய் மணக்கோலத்துடன் நின்ற மகனைக் கண்டாள். "என் அருமைக் கண்மணி! நீ எனக்கு ஒரே மகன். உன்னைப்பெற நான் எவ்வளவோ அருந்தவம் செய்தேன். உன்னைத் தேசிங்கு மன்னனோடு ஒப்ப எல்லாரும் புகழ்கின்றனர். நீ உனது தோழனும், தலைவனுமாகிய தேசிங்குக்கு வேண்டிய உதவிகளனைத் தையும் செய்யக் கடமைப்பட்டுள்ளாய். தேசிங்கின் உயிரைக் காட்டிலும் உன் உயிர் பெரிதல்ல தேசிங் கைக் காப்பதில் உன் உயிரையும் பொருட்படுத்தாதே! நீ வீரனாகத் திரும்புவதையே நான் விரும்புகிறேன்," என்று வாழ்த்துக் கூறி அனுப்பினாள். மகமத்கான் அன்னையின் அடிகளிற் பணிந்தெழுந்து, குதிரை ஏறி, செஞ்சிக்குக் காற்றாய்ப் பறந்தான். தேசிங்கும்

நொடிக்கு நொடி மகமத்கானின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். மஞ்சளாடையும், மலர்மாலையும், கங்கணமும், சந்தனமும் பூண்ட கோலத்தோடு காட்சியளித்த தனது நண்பன் மகமத்கானைக் கண்ட தேசிங்கு "நண்பா! மணவினை முடிந்ததா?" என்றான். "அன்னை நாட்டுக்கு ஆபத்து நேர்ந்திருக்கும் பொழுது அலங்காரத் திருமணமா? அப்படிப்பட்ட இன்பத்தை நான் எப்போதும் விரும்பியதில்லை. ஆர்க்காட்டு நவாபின் படை அலறி ஓடி ஒடுங்கி ஒளியும்வரை எனக்கு அமைதி ஏது? விடை கொடுங்கள். படையுடன் செல்லுகிறேன். சையதுல்லாவின் படைகளை இமைப்போதில் வென்று திரும்புகிறேன்," என்றான். தேசிங்கு "நண்பா! உன் நாட்டுப்பற்றை மெச்சுகிறேன். நீ மட்டும் போக வேண்டா. நானும் வருகிறேன்," என்று கூறினான். "ஒரு சையதுல்லாவை வெல்லுவதற்கு என்னாலாகாது என்று தாங்கள் கருதிவிட்டீர்களா? நாங்களிருக்கத் தாங்கள் படையில் நுழைவானேன். நாங்கள் வீரராவது என்று? தாங்களும் போருக்கு வந்தால், உலகம் உங்களைத்தான் புகழும். எனக்குத் தடை கூறாமல் விடை தாருங்கள். நவாபின் படை நடுங்கி ஓடுவதைக் கண்ணால் காண்பீர்கள்," என்று கூறித் தானே படைத்தலைமை பூண்டு போருக்குப் போக முற்பட்டான். மகம்மதுகானின் வற்புறுத்தலுக் கிணங்கிய தேசிங்கும் மகம்மதுகானின் தலைமையிலொரு படையை அனுப்பினான். மகமத்கான் நீலவேணிக் குதிரையின் மீதமர்ந்து நவாபின் பாளையத்தில் நுழைந்து சண்டை செய்தான். இரு தரப்பிலும் வீரர் பலர் மாண்டனர். தாக்குதல் கடுமையாக இருந்தது. செஞ்சி வீரர் மிக ஆவேசமாகப் போரிட்டனர். நவாபின் படை நடுங்கியது. பல மணி நேரத் தாக்குதல்களுக்குப் பின், நவாபின் படைகள் நாலு பக்கங்களிலும் சிதறியோடத் தொடங்கின. சேனையின் நடுவில் தலைவனாக நின்ற சுபங்கித்துரையை மகமத்கான் சிறைப்படுத்த விரும்பினான். தன்னைக் கைப்பற்ற

வரும் மகமத்கானை நோக்கிச் சுபங்கித்துரை தன் கைத் துப்பாக்கியால் பல முறையும் சுட்டான். குனிந்தும், வளைந்தும், நெளிந்தும், மறைந்தும் தன்னைக் காத்துக் கொண்ட மகமத்கான் நீண்ட குத்தீட்டி ஒன்றுடன் சுபங்கித் துரையையணுகி அவனைக் குத்தித் தள்ளினான். மேலும் சுபங்கித் துரையை விடாமல் மகமத் கான் கைப்பற்றிவிட்டான். இதைக் கண்ட ஆர்க் காட்டுப் படைகள் ஓட்டமெடுத்தன. பிடிபட்ட சுபங்கித்துரை மகமத்கானின் காலில் விழுந்து கெஞ்சி னான். மகமத்கான் நகைத்து "வீரமும் நேர்மையுமில் லாத வீணனே! நீயும் ஒரு மனிதனா? கூலிக்கு வீரர்க ளாக வந்த நீங்களா எங்கள் செஞ்சியை வெல்லுபவர் கள்? ஓடிப்பிழை," என்று விரட்டினான். உடனே மகமத்கான் போர் வீரர்களுடன் நவாபைத் தேடினான். இதற்கிடையில் திமிரிக் கோட்டைப் பாளையக்காரனை ஷேக் முகம்மது எதிர்த்துப் போரிட்டான். இருவருக்கும் கடுமையான போர் நடந்தது. முடிவில் ஷேக் முகம்மது மகமத்கான் வாளுக்கு இரையாகி மண்ணைக் கவ்வி னான். மகமத்கான் எப்படியும் நவாபைத் தேடிப்பிடித்து அவனைக் கொன்றாலன்றி, செஞ்சிக்குள் நுழைவதில்லை என்று உறுதியான எண்ணங் கொண்டிருந்தான். இதற் கிடையில் போரிட்டு இறந்து கிடந்த பிணங்களுக்குள் தானும் ஒருவனாகப் பதுங்கிக் கிடந்த தாவுத்கான்பின் புறமாக இருந்து மகமத்கானைச் சுட்டான்.

---

## 12. தேசிங்கின் வீரம்

"மகமத்கான் ஆர்க்காட்டு நவாபின் சேனையில் நுழைந்து அநேகரைக் கொன்று குவிக்கிறான். ஆர்க் காட்டுச் சேனை அஞ்சி ஓட்டமெடுத்து விட்டது," என் பன போன்ற செய்திகளைக் கேட்டுக் கொண்டிருந்த

செஞ்சி மன்னன், "மகமத்கான் வஞ்சனையால் கொல்லப்பட்டான்," என்ற செய்தியையும் கேள்விப் பட்டான். நாட்டுப் பற்றும், உண்மை அன்பும்கொண்ட ஆருயிர்த் தோழன் மகமத்கானை இழந்த வருத்தம் தேசிங்கை நிலை கலங்கும்படி செய்துவிட்டது. முறை யற்ற முறையில் ஆர்க்காட்டு நவாபு தன் மீது படை எடுத்து வந்ததும், தன் நண்பன் மகமத்கானை வஞ்சனையால் கொன்றதும் தேசிங்கின் மனத்தைக் கொதிக்கும்படி செய்தன. உடனே போருக்குப் புறப் பட்டான் தேசிங்கு. ஜெயராம், கங்காராம், தரணி சிங்கு, கோபாலசிங்கு, கிருபு சிங்கு, மான் சிங்கு, இராமு தாரி, இலட்சுமணதாரி முதலிய படைத்தலைவர்களும் வந்து கூடினார்கள். தேசிங்கு அவர்களைப் பார்த்து வீர முழக்கம் செய்தான். "தோழர்களே, வீரர்களே, நம்முடைய அளவற்ற செல்வத்தையும், அமைதியான வாழ்க்கையையும் கண்டு பொறாமைப்பட்டு ஆர்க் காட்டு நவாபு நம் மீது படையெடுத்திருக்கிறான். டில்லி பாதுஷா நமக்குக் கப்பத்தை நீக்கி வெகு காலமாயிற்று. இவ் வஞ்சகன் அதை அறியாததைப் போல நம் மீது படையெடுத்திருக்கிறான். நாம் தென்னாட்டு வீரர்கள். நமக்கு வீரமே உயிர் ; மரணமே ஆபரணம் ; வீரக் குடி யிற் பிறந்து, வீர மரபினராக வாழும் நாம், அயலான் ஒருவனுக்கு அஞ்சி அடிமைகள்போலக் கப்பம் கட்டி வாழ்வதா? மானத்தை விற்றுப் பெறுகின்ற வாழ்வு வாழ்வாகாது. கலை அழிந்து, நாகரிகம் தொலைந்து, உரிமை மறைந்த பின் நாம் இருப்பதை விட இறப்பதே மேல். தாய் நாட்டைப் பாதுகாக்க வீரப்போர் புரிந்து நாம் அடையும் புண்கள் ஒவ் வொன்றும் இரத்தினங்களால் அமைந்த அணிகலன் களாகும். வீரப் போரிட்டு நாம் இறந்தால் நாம் நம் மரபினர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய் தவர்களாவோம். தென்னாட்டார் அஞ்சி அடங்கிவாழ்ந்த வர் அல்லர். வரலாறுகள் நம்மை உயர்த்திக்கூறுகின்றன.

நம்முடைய வீரத்திற்குச் சரியான சோதனைக் காலம் வந்துள்ளது. நாட்டுப்பற்று மிக்க தென்னாட்டு வீரன் மகமத்கான்; தாய் நாட்டு விடுதலைக்காகப் போரிட்டு வீர மரணம் அடைந்தான். பகைவரோடு போரிடும் போது இறக்க நேரிட்டால், அது வெற்றியே ஆகும்; அது தோல்வியாகாது. தன்னுலான கடமையைச் செய்ய அஞ்சிப் பகைவருக்கு அடங்கி வாழ்வது, உண்மையில் தோல்வியே ஆகும். தென்னாட்டு மன்னர்களின் வழி வந்த நாம், நமது உடலில் வலிமை உள்ளவரையில் போரிட்டுப் பகைவர்களைத் தொலைப்பதே கடமையாகும். வெற்றி நேர்ந்தாலும், தோல்வி நேர்ந்தாலும் அது பற்றி நாம் கவலைப்பட வேண்டுவதில்லை. எடுங்கள் வாள்களை! அழியுங்கள் ஆர்க்காட்டுப் படைகளை! புறப்படுங்கள் போர்க்களத்திற்கு,'' என்று கூறிய வண்ணம் தேசிங்கு பாராசாரியின் மீது ஏறிப் புறப்பட்டான். வீரர்களும் நாட்டு மக்களும் வீராவேசங் கொண்டு தேசிங்கைப் பின்பற்றினர். இதற்கிடையில் தேசிங்கின் சிற்றப்பனை தரணிசிங்கு தேசிங்கு போர்க்கோலம் பூண்டு படைக்குப் புறப்படுவதைக் கண்டான். "மகனே இன்று வெள்ளிக் கிழமை; நீ சண்டைக்குப் போதல் கூடாது. நீ பிறந்ததும், உன் குதிரை பிறந்ததும், நீ அரியணையேறியதும் வெள்ளிக்கிழமை. இன்று கழித்து நாளை புறப்பட்டால் வெற்றி நமதே. இன்று புறப்படுவது நமக்கு வெற்றியைத் தாராது. இன்று நாளும், இலக்கினமும் பொருத்தமாக இல்லை,'' என்று கூறித் தடுத்தான். தேசிங்கு, "நாளும் கிழமையும் நாடாளும் மன்னர் யோசித்துப் பயனில்லை. குடிகள் அலறித் துடிக்கும் வேளையில் கொற்றவன் அமைதியாக வாழ்வதா? நாட்டு மக்கள் நாசகாரர் கையில் சிக்கி நலிந்து வருந்துவதைக் கண்டும், நாளும் கிழமையும் பேசி நாம் வாளாவிருப்பதா! நாள்களும், கிழமையும் நல்ல பயனைத் தருவதாக இருந்தால் நாட்டில்

துன்பங்கள் நிகழ்வதற்குக் காரணமே இல்லை; மணத் திற்கு அமைத்த நாட்கள் எத்தனையோ மரணத்திற் குத் துணையாக முடிந்திருக்கின்றனவே! உழைப்பும், ஊக்கமும், முயற்சியும் தக்க பயனைத் தருமேயொழிய நாட்கள் மக்களுக்குப் பயனைத் தந்ததில்லையே! நாளையும், கோளையும் சொல்லி என் புறப்பாட்டைத் தடுக்காதீர் கள்,'' என்று கூறிவிட்டு மேலே சென்றான்.

போருக்குப் புறப்படும் இராஜபுத்திர வீரர்கள் என்றும் தம்முடைய மனைவியர்களிடத்தில் கூறிக் கொண்டுதான் செல்வது வழக்கம். அம்முறைப்படி தேசிங்கும் தன் மனைவியைக் காணப் புறப்பட்டான். இராணி பருவமடைந்தகாலத்தில் நாள், கோள்கள் தக்க வையாக இல்லையென்றும், அதனால் கணவனும் மனைவி யும் ஒருவரையொருவர் காணலாகாது என்றும் சோதிடர் கூறியபடி இராணி தனி அரண்மனை ஒன்றில் இருந்து வந்தாள். சோதிடர்கள் கூறிய கணக்கின்படி மூன்று ஆண்டுகள் முடிய மேலும் ஒரு நாளே மீதமிருந்தது. அரசன் தன்னைக் காண்பதற்கு வருகிறான் என்பதையும், செஞ்சியைப் பகைவர்கள் வளைத்து இருக்கிறார்கள் என்பதையும் கேள்வியுற்ற இராணி மனம் கலங்கினாள். திருமணம் ஆனதிலிருந்து கணவனைத் தான் ஒரு நாளும் கண்ணாற் கண்டு மகிழாத நிலையில், தன் கணவன் போருக்குப் புறப்படுவதை அறிந்த இராணி மிகவும் வருந்தினாள். இதற்குள் தேசிங்கு தன் வரவை இராணிக்குத் தெரிவித்தான். இராணியைத் தேசிங்கு நேரில் காணலாகாதாகையால் தேசிங்கிற்கும், இராணிக்கும் இடையேஒரு திரைச்சீலை இடப்பட்டது. இராணி, தேசிங்கைத் தன் அந்தப்புரத்திற்கு அனுமதித் தாள். தேசிங்கு திரைச் சீலையின் வெளிப்புறத்தில் நின்ற வண்ணமே "யான் இன்று போர்க்களம் புக வேண்டி இருப்பதால், நம் குல முறைப்படி உன்னிடம் விடைபெற்றுப் போக வந்திருக்கிறேன். நீ மகிழ்ச்சி

யோடு விடை கொடுப்பாயாக,'' என்று கேட்டான். அதற்கு இராணி, "என் இன்னுயிர்த் தலைவரே! தங்களை நான் மணம் செய்துகொண்டதிலிருந்து இன்னும் ஒரு நாள் கூடத் தங்களைக் கண்டு மகிழவில்லையே என்பது மனத்தை வருத்துகின்றது. இன்று ஒரு நாளும் தங்கி, நாளை புறப்பட்டால், யான் தங்களைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்து போருக்குப் போக அனுமதிப்பேன். நானும் போரில் உடன் வந்து பங்கு பெறுவேன். ஆகையால் இன்று தங்கி, நாளை போகுமாறு கேட்டுக்கொள்ளு கிறேன்,'' என்று வேண்டிக்கொண்டாள். "கண்ணே! அரசன், குடிகளின் துன்பத்தைப் போக்கவும், இன்பத் தைப் பாதுகாக்கவும் வாய்த்தவனாவான். நம் நாட்டுக் குடிமக்களுள் பலர் பகைவரிடத்து அகப்பட்டுப் பதைத்துக் கொண்டிருக்கும் நிலையில், நாம் நம் இருவரின் இன்பத்தைப் பெரிதாகக் கருதுவது தவறு. நாட்டு மக்களின் நலமே நமது நலம். நாட்டு மக்களின் மகிழ்ச் சியே நமது மகிழ்ச்சி. நாட்டு மக்களின் துன்பமே நமது துன்பம். ஆதலின் இன்றைய எனது புறப்பாட் டைத் தடை செய்யாதே. மகிழ்ச்சியோடு விடை தரு வாயாக!'' என்று கேட்டான். வீர மகன் தேசிங்குக்குப் பதில் சொல்ல ஆற்றாத இராணி வருத்தத்துடன் மனம் இசைந்தாள். முடிவில் என் ஆருயிர்த் தலைவரே! நான் தங்களது முகத்தைக் காணாவிடினும் தங்களது கையை யாவது காண விழைகின்றேன்,'' என்று கேட்டுக் கொண்டாள். உடனே, தேசிங்கு தனது உடைவாளால் திரையைக் கிழித்துக் கையை உள்ளே நீட்டினான். இராணி, வீரனது வாள் பிடிக்கும் கரங்களைத் தன் மலர் போன்ற கரத்தில் ஏந்தி முத்தமிட்டாள். அதுபோது இராணியின் கண்களிலிருந்து வெந்நீர்த் துளி போன்ற இரு கண்ணீர்த் துளிகள் தேசிங்கின் கரத்தில் வீழ்ந்தன. இதை அறிந்த தேசிங்கு, "கண்ணே! இது என்ன பேதைமை. வீரக் குடியில் பிறந்த நீ கண்ணீர் விடு

வதா? நன்றாயிருக்கிறது! தென்னாட்டு மன்னர்களின் மனைவியர் நடந்துகொள்ளும் முறை இதுதானா? மறக் குடியில் பிறந்த மாண்பு மிக்க பெண்கள் கணவனுக்கு வேண்டுவன கூறி, 'வெற்றியுடன் திரும்புக' என்ற வீர உரை பகர்ந்தன்றோ அனுப்புவர். வீரமணியாகிய நீ செய்யத் தக்கதும் அஃதேயன்றோ! மனம் கலங்காதே. மகிழ்ச்சியோடு விடைகொடு. எல்லாம் வெற்றியாக முடியும்,'' என்று கூறினான். அது கேட்ட இராணி, “நவாபின் படையை நாசமாக்கி, வெற்றியை நிலைநிறுத் துவீராக!'' என்று கூறி விடை தந்தாள். மன்னன் உடனே போர்க் களத்திற்குப் புறப்பட்டான். மனைவி நவாபின் படையை நாசமாக்கி வெற்றியை நிலைநிறுத்து வீராக என்று கூறினாளேயன்றி, நிலை நிறுத்தித் திரும்புக! என்று கூறாதது ஒரு சகுனத்தடை என்றே மன்னன் கருதினான். மன்னன் போருக்குப் புறப்பட்ட போது, “செஞ்சிச் செல்வன் வாழ்க! இராஜா தேசிங்கு வாழ்க!'' என்பனபோன்ற வாழ்த்தொலிகள் வானைப் பிளந்தன. இஃது இங்ஙனமாக, மகமத்கானைக் கொன்றதில் மட்டற்ற மகிழ்ச்சியுற்றிருந்த நவாபு, தாவுத் கானுக்கு வயிர மாலைகளும், வரிசைகளும் ஈந்து மகிழ்ந்தான். இம்மகிழ்ச்சி தோன்றி மறைவதற்குள் தேசிங்கு பெரும்படையுடன் தாக்க வருவது கேட்ட சையதுல்லா திகைத்தான். தேசிங்கு வருவதை அறிந்த பாளையக்காரர் அனைவரும் அஞ்சினர். சையதுல்லா முதலில் தேசிங்கின் வரவைத் தடுப்பதற்குத் துணிந்தான். குண்டுணி கூறி கூழைக்கும்பிடு போடும் திருவண்ணாமலை பாளையக்காரனாகிய சுபங்கித்துரையை அழைத்துச் செஞ்சிக்கு மேற்குத் திக்கிலுள்ள தாழனூர், மலையனூர் ஏரிகளை வெட்டிச் சங்கராபரணியாற்றில் திருப்பிவிடுமாறு கட்டளையிட்டான். சுபங்கியும் பல வீரர்களுடன் சென்று ஏரியை வெட்டி ஆற்றில் திருப்பி விட்டான். ஏரியில் அப்போது நீர் நிறைந்திருந்தமையால், சங்கராபரணியாற்

றில் வெகு விரைவில் வெள்ளம் பெருக்கெடுத்தது. படைகள் வந்து கொண்டிருந்த போது, இந் நிகழ்ச்சி நடந்தமையின் செஞ்சிச் சேனைகள் துண் டிக்கப்பட்டு ஆற்றின் வடகரையிலும், தென் கரையி லுமாகச் சிதறுண்டது. சையதுல்லாவின் இச் சூதை அறிந்த செஞ்சி மன்னனது உள்ளம் கொதித்தது. இவ்வாய்ப்பைப் பயன்படுத்த விரும்பிய நாவாபின்படை, செஞ்சிப் படையைத் தாக்க முற்பட்டது. இரு படை களிலும் வீரர் பலர் மாண்டனர். போர் கடுமையாக இருந்தது. முதலில் செஞ்சி வீரர் பலர் சிதைவுற்றனர் என்றாலும், நவாபின் படையினர் நன்கு எதிர்த்துப் போரிட்டனர். இதற்குள் ஆற்றில் வெள்ளம் குறைந் தது. தேசிங்கும், படைகளும் நவாபின் படையைத் தாக்குதற்கு வந்து கூடினர். தேசிங்கின் தலைமையில் நின்ற படைகள் எவ்வாறு போர் புரிந்தன என்பதைக் கூறவும் வேண்டுமா? தலைவன் மகமத்கானை இழந்த வருத்தமும் வீரர்களுக்கு இருந்தமையால், வீராவே சத்தோடு போர் புரிந்தனர். கூலிப் படைகளின் கூட்டம் பெரிதாக இருந்தும் நாட்டுப்பற்றுள்ள செஞ்சியின் சிறு கூட்டத்திற்கு முன் நிற்கமுடியாமல் பின்னிட்டது.

"ஒலித்தக்கா லென்னும் உவரி! எலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.''

என்பது முதுமறையன்றோ? சிலமணி நேரங்களுக்குள் போர்க்களம் பிணக்காடும் நிணச்சேறுமாய்க் காட்சி அளித்தது. நவாபின் படைகள் நாலாப் பக்கங்களிலும் ஓடத் தலைப்பட்டன.

தாவுத்கான் பெரும் படையொன்றைத் திரட்டிக் கொண்டு தன்னை எதிர்க்க வருவதைத் தேசிங்கு அறிந்து கொண்டான். தேசிங்கு தன் குதிரையைத் தட்டிவிட் டான். காற்றினும் கடிய வேகத்தில் சென்று பாரா சாரி தாவுத்கானின் குதிரையோடு மல்லிடத் தொடங்

கியது. தாவுத்கானுடன் வந்த சேனை வீரர், வந்தவன் தேசிங்கு என்பதை அறிந்ததும் திசைக்கு ஒருவராகப் பறந்தனர். தாவுத்கான் தனியனுனுன். "பிணத்தில் பதுங்கிப் பின்னின்று மன்னரைச் சுடும் பேடியே, உன் உடலில் உரம் இருந்தால் எடு வாளை. இனத்தில் பிறந்தும், கனத்தில் குறைந்து, எதிரிகளின் எச்சிலுக்கு ஏமாந்து நாட்டைக் காட்டிக் கொடுக்கும் கயவனே, உன்போன்றார் சிலர் இருப்பதாலன்றோ அற்பர் பலர் இம் மண்ணில் ஆதிக்கம் பெற்றனர். நாடு இன்றுள்ள இழிநிலைக்கும் உன்போன்றார் உயிரோடிருப்பதேயன்றோ காரணம்! உன்போன்றாரைச் சுமப்பதே இம் மண்ணுக்கு இழிவு. முதலில் உன்னை ஒழித்துவிடுகிறேன்; எடு வாளை," என்று கூறியவண்ணமே வாளை உருவிச் சண்டை செய்தான்.

ஓடித் தப்புவதற்கோ, உயிர் தப்புவதற்கோ தன்னைத் தேசிங்கு விடமாட்டான் என்பதை அறிந்து கொண்ட தாவுத்கான், தன் கையில் ஆயுதமின்றி நின்றால் வீரனாகிய தேசிங்கு தனக்கு ஊறு ஏதும் செய்யான் என்று எண்ணி, போரிடும் போது வேண்டுமென்றே தன் கைவாளை நழுவவிட்டு நின்றான். உடனே தேசிங்கு "காட்டிக் கொடுக்கும் கயவனே! உன் சூதனைத்தும் நானறிந்தவையே! இதோ வாள்; போரிடு," என்று தன் வாளில் ஒன்றைக் கொடுத்துச் சண்டையிடுமாறு அவனைத் தூண்டினான். தாவுத்கான் மன்னன் கொடுத்த வாளையும் நழுவவிட்டு நின்றான். தேசிங்கு "வஞ்சகனே! இதோ! இப்போது கொடுக்கும் வாளையும் ஏற்றுக்கொள்," என்று கூறிய வண்ணமே தாவுத்கானின் தலையை இருதுண்டாக வெட்டி மண்ணில் உருட்டினான். தலைவனை இழந்த படைகள் சின்னபின்னமாகச் சிதறிச் சிதைந்தன. பல பாளையக்காரர் பயந்து ஓட்டமெடுத்தனர்; நவாபு நிலைகலங்கினான். இதற்கிடையில் தேசிங்கு, நவாபு இருந்த இடத்தைக் காண ஆவல்

கொண்டு, குதிரையின்மீது சுற்றிக் கொண்டே இருந் தான். அது சமயம் வேங்கடராயன் என்ற படைத் தலைவன் ஒருவன் எதிர்ப்பட்டான். அவனைத் தேசிங்கு எதிர்த்தான். எதிர்த்தது யாரென அறிந்த வேங்கட ராயன் நடுங்கினான். அவனுக்குப் பேச நாவும் எழ வில்லை. வாளைக் கையில் தாங்கவும் வலி இல்லை. முடி வில் தேசிங்கு, வாளேந்திய அவனது கையைத் தோளோடு வெட்டி எறிந்தான். இனித் தாமதித் தால் தலை போய் விடும் எனக் கருதிய வேங்கடராயன், தன் மார்பிலிருந்த பூணூலைக் காட்டி "ஐயா! நான் போர்முகம் அறியாதவன்; புனிதமான பிராமண குலத் தில் பிறந்தவன். இரத்தத்தைக் கண்டாலே என் கண் கள் சுழலுகின்றன; எனக்கு உயிர்ப் பிச்சை அளிக்க வேண்டும்," என்று கெஞ்சினான். அதுகேட்ட தேசிங்கு "ஓடிப் பிழை, பதரே!" என்று அவனைத் துரத்திவிட்டு, மீண்டும் நவாபைத் தேடினான்.

---

## 13. செஞ்சியின் சிதைவு

படைகள் சிதறியோடியதையும், தாவுத்கான்தேசிங் கின் வாளுக்கு இரையானதையும் கேட்ட நவாபு மனம் கலங்கினான்; செய்வகையறியாது திகைத்தான். தேசிங்கு தன்னைத் தேடிக்கொண்டிருந்ததை அறிந்து அஞ்சி னான்; இனியும் போர் நடந்தால் தனக்கு ஆபத்து நேரும் என்பதை உணர்ந்தான்; ஆதலால் நவாபு தோடர்மல்லை அழைத்துச் சமாதானத் தூதனாக அனுப்பினான்.

தோடர்மல் சமாதானத்தைக் குறிக்கும் வெள்ளைக் கொடியுடன் தேசிங்கை அணுகினான், கொதித்த உள் ளத்தோடு நின்ற தேசிங்கு, "தோடர்மல், நீ வந்த செய்து யாது?" எனக் கேட்டான். தோடர்மல், "மன் னரே, எம் நவாபு சமாதானத்தை நாடுகிறார்; போரில்

நீதியின்றிப் பலர் மடிவதை அவர் விரும்பவில்லை. தாங்களும் தயவு செய்து சமாதானத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்," என்று வேண்டி நின்றான். "தோடர்மல், நன்று! நன்று! உம் மன்னர் செய்கை! போரைத் தொடங்கும்போது இந்நல்லறிவு எங்கே மறைந்திருந்தது? 'எட்டினால் தலையையும் எட்டா விட்டால் காலையும் பிடிப்பது'தான் உங்கள் மன்னர் இயல்பு போலும்? என் படை வெல்லும் நிலையில் இருக்கும்போது சமாதானமா? இது சுயநல வாதிகளின் முறை. உமக்குத்தான் பயனளிக்கும் சமாதானம்; எமக்கன்று" என்றான். அதுகேட்ட தோடர்மல், "மன்னரே இப்போரால் தங்களுக்கு ஏற்பட்ட நட்டமனைத்தையும் எம்மன்னர் ஈடு செய்ய ஒப்புகிறார். ஆதலின் மனம் பொறுத்துச் சமாதானத்தையே விரும்ப வேண்டும்," என்று கேட்டுக் கொண்டான். அதுகேட்ட தேசிங்கு, "உம் மன்னனா, என் நட்டத்தை ஈடுசெய்பவன்! பேராசைப் பேயன். அமைதியாக வாழ்ந்த எம் செஞ்சிமீது படையெடுத்து, என் அருமைத் தோழன் மகமத்கானைக் கொன்றானே, அவனா சமாதானத்தை விரும்புகிறவன். மகமத்கான் உயிருக்கு உம் நவாபின் உயிரே ஈடுசெய்ய வல்லது. ஆண்மையுடன் போரிட்டு வெற்றி பெற்றுத் திரும்பும்படி கூறு. சமாதானம் என்பது இனி கிடையாது. போ திரும்பி. நில்லாதே!" என்று அதட்டினான். தோடர்மல் ஓட்டோடியும் வந்து நவாபிடம் நடந்ததைக் கூறினான். நவாபு, மேல் செய்யத்தக்க தொன்றுமில்லை என்று எண்ணி ஓட்டமெடுக்கத் துணிந்தான்.

இதற்கிடையில் செஞ்சியின் படைத்தலைவனாகிய தாதேகான், யூசுப்கானைத் துரத்திக் கொண்டு வந்தான். தாதேகான், "அவ்வஞ்சகனைப் பிடித்துக்கொல்லுங்கள்; விடாதீர்கள்," என்று தேசிங்கை நோக்கிக் கூவிக் கொண்டே வந்தான். அது கேட்ட தேசிங்கு யூசுப் ஏதோ சூது செய்திருக்கிறான் என்று எண்ணித் தடுத்

தான். யூசுப் செஞ்சி மன்னனது காலில் விழுந்து "நான் அறியாமல் செய்த பிழையை மன்னித்து விடுங்கள். எனக்குத் தெரிந்த உண்மையை ஒளியாமல் கூறிவிடு கிறேன்," என்று கூறிக்கெஞ்சினான். இதற்குள் தாதேகா னும் தேசிங்கினிடம் வந்து சேர்ந்தான். யூசுப்கான், நவாபின் படைத்தலைமை பூண்ட தாவுத்கான் சிரோப் சிங்கின் காமக்கிழத்தியின் மகனென்றும், அவன் முன் ஒருகால் வணிகனைப் போலச் செஞ்சி வந்து ஒற்றுராய்ந் ததாகவும், தான் அவனுக்கு உடந்தையாக இருந்து, கோட்டையின் உண்மைகளையும் வடக்கு வாயில் சுரங்க வழியின் நுட்பங்களையும் தன் அறியாமையால் வெளி இட்டதாகவும் கூறித் தன்னை மன்னிக்கும்படி வேண்டி நின்றான். அது சமயம் பகைவர்கள் வடக்கு வாயில் வழியாகச் செஞ்சிக்குள் நுழைந்தனர். மதிலிலிருந்த பீரங் கிகளின் முழக்கம் இடியொலியைப் போலக் கேட்டது. யூசுப்கான்மீது அளவற்ற கோபம் கொண்டிருந்த தாதேகான் தன் அரசனது அடிகளில் உயிருக்காக மன் றாடிக் கொண்டிருக்கிறான் என்பதையும் நினையாமல், யூசுப்பின் தலையை வெட்டி வீழ்த்தினான். இதைக் கண்ட தேசிங்கின் மனம் பதைத்தது. தேசிங்கு தன் காலடியில் நின்றவனை வெட்டி வீழ்த்திய தாதேகானைத் தன் அரிய படைத் தலைவன் என்றும் கருதாது கொன்று வீழ்த்தி னான். இங்ஙனம் தேசிங்கின் நிலை மிகவும் வருந்தத் தக்கதாக முடிந்தது. ஒருபுறம் தனது அரும்பெரும் படைத்தலைவனும், ஆருயிர் நண்பனுமான மகமத் கானின் மரணமும், மற்றொரு புறம் கோட்டைக்குள் நுழைந்து பகைவர்கள் வெளியிலிருந்த தன் படை யைத் தாக்கியதும், மற்றப் படைத்தலைவனான தாதேகான் இவ்வாறு முடிந்ததும், அவன்நெஞ்சைப் பிளந்தன. இனி வீழ்ச்சியின்றி வெற்றி கிடைப் பது அரிது என்று அவன் கருதினான். எங்ஙனமாயினும் தன் நண்பனைக் கொன்ற தாவுத்கானைக் கொன்றாயிற்று.

இனி நவாபையும் கொன்றுவிடுவது என நிச்சயித்தான்; அவனுடைய கண்கள் நவாபைத் தேடிய வண்ணமே இருந்தன. நவாப் அதுபோது ஒரு யானையின் மார்பின்கீழ் ஒரு தொட்டில் கட்டி அதில் ஒளிந்திருந்தான். அவனது பாகன் யானையை நடத்தினான். தேசிங்கு, யானையைக் கண்டவுடன் அதன் மீது நவாப் இருக்கலாம் என்று எண்ணி, யானையின் அருகில் வந்தான். பாராசாரி யானையின்மீது தன் முன்கால்களைத் தூக்கித் தாவியது. மேலே இருந்த பாகன் குதிரையின் முன்னங் கால்களி லொன்றை வெட்டிவிட்டான். தொட்டிலிலிருந்த நவாப் குதிரையின் பின்னங் கால்களில் ஒன்றை வெட்டிவிட்டான். பாராசாரி மண்ணில் சாய்ந்தது. தேசிங்கு கீழே குதித்து வாளை உருவிப் பகைவரை எதிர்த்தான். தொட்டிலிலிருந்த நவாபு எட்டிக் குதித்து, "தேசிங்கு தனித்து விட்டான், பிடியுங்கள்," என்று கூவிக்கொண்டே ஓடினான். நவாபின் படைகள் தேசிங்கைச் சூழ்ந்தன. படை. வீரர்களைத் தேசிங்கின் வாள் கண்ட துண்ட மாக்கியது. சூழ்ந்த வீரர்களுள் பலர் பின் வாங்கினர். மேலும் பல படைகளைத் திரட்டிக் கொண்டு தேசிங்கைச் சிறை பிடிப்பதற்காகச் சையதுல்லா முயன்றான். தேசிங்கு, தான் இனி வெற்றி பெற நிச்சயமாக முடியாதென்பதையும் தோல்வியுற்றுப் பிறருக்கு அடிமையாகி வாழ்வதினும், உரிமையோடு மரிப்பதே தக்கதென்றும் முடிவுசெய்தான். தனது பாராசாரிப் பரியைத் தன் வாளாலேயே வெட்டிக் கொன்றுவிட்டுத் தான் இறக்குமுன், உறுதியும் உள்ளன்பும் படைத்த உத்தமன் மகமத்கானைக் காணும் முயற்சியை மேற்கொண்டான். படுகளத்தில் குவிந்து கிடந்த பிணங்களைப் புரட்டி ஆராய்ந்துகொண்டே வந்தான். அதுசமயம் மகமத்கானது நீலவேணிக் குதிரை கனைத்த ஒலி கேட்டுத் திரும்பினான். மகமத்கான் உயிரிழந்த இடத்திலேயே நீலவேணிக் குதிரையும் நின்று வருந்

திக்கொண்டிருந்தது. தேசிங்கு ஓடோடியும் சென்று மக மத்கானது உடலைக் கண்டு வாரி எடுத்து அவனது, உடலில் இருந்த படுகாயங்களைக் கண்டு கண்ணீர் வடித்தான்.

"பிறந்ததின முதலாகப் பெற்றெடுத்த
விடலையினும் பீடும் தேசும்
சிறந்தனையென் றுனைக்கொண்டே தெவ்வரைவென்
றுலகாளச் சிந்தித் தேனே;
மறந்தனையே என்றனையும்; மாலையினால்
வளைப்புண்டு மருவார் போரில்
இறந்தனையே என்கண்ணே! என்னுயிரே!
உயிரேயின் றென்செய் தாயே."

என்று பலவாறு புலம்பினான். பிசிராந்தையாரும் கோப்பெருஞ் சோழனும் போன்ற உயர்ந்த உள்ளம் படைத்த அவரது நட்புப் பிரிக்க முடியாததாயிருந்தது. மணக்கோலம் தாங்கி நின்ற நண்பன் தன் பொருட்டுப் பிணக்கோலம் பூண்ட பின் தான் வாழ்வதில் பயனில்லை என்று முடிவு செய்தான். நல்ல நட்பை இழந்து வாழ்வதினும் சாவதே மேல் என்று அவன் நெஞ்சம் விளம்பிற்று. அதன் பின் அவன் மகமத்கான் ஏறி நடத்திய நீலவேணியையும் கொன்றுவிட்டுத் தானும் குத்திக் கொண்டு இறந்தான். என்னே! நட்பின் வன்மை. வாழ்விலும் தாழ்விலும் இணை பிரியாத தேசிங்கின் பெருமையைக் கண்டவர் யாவரும் கண்ணீர் வடித்தனர். "கேட்டினும் உண்டோருறுதி கிளைஞரை நீட்டியளப்பதோர் கோல்" என்ற முதுமறைக் கேற்பத் தேசிங்கு மகமத்கானிடம் கொண்டிருந்த அன்பின் அளவு இம் மரணத்தால் நன்கு புலனாகியது.

தேசிங்கு இறந்தான் என்றது கேட்ட வஞ்சகனாகிய சையதுல்லா பயந்தோடிய தன் படைகளைத் திரட்டிக்

கொண்டு படைக்களம் வந்தான். நட்பிற்காக நல்லுயிரை ஈந்து பிணமான செஞ்சி மன்னனது உடலைக் கண்டான்; வாரி எடுத்தான். ஐயோ! அறிவற்ற நான் என்ன செயல் செய்து விட்டேன்! உன் உண்மையையும் வீரத்தையும் மெச்சி உறவுகொண்டாடி உயர்வு பெறுமல், உலுத்தர்களின் உரை கேட்டு உயிரிழக்கும்படி செய்தேனே! இளமையும் எழிலும் பொங்கும் உன் முகத்தை என்கண்ணுற் காண முடியவில்லையே," என்று வருந்தினுன். அதுபோது சுபங்கித் துரை என்பவன் தேசிங்கைக் கொன்றவன் தானே எனப் பெருமை பேசிக்கொண்டான். ஆனுல், சையதுல்லா இதை ஒப்புக்கொள்ளவில்லை. தேசிங்கின் வீரத்தைப் பலபடப் புகழ்ந்தான். அதன் பின் படையுடன் செஞ்சிக்குள் நுழைந்தான் சையதுல்லா. செஞ்சி மக்கள் தலைவனை இழந்திருந்தாலும் நவாபின் படையை எளிதாக விட்டுவிடவில்லை. கோட்டைக்குள் கடும்போர் நிகழ்ந்தது. நாட்டுப் பற்று மிக்க வீரர்கள், கூட்டம் கூட்டமாக ஆங்காங்குப் பதுங்கி இருந்து சின்னுபின்னமாகச் சிதற வடித்தனர். இக் கடும்போருக்குப் பின், செஞ்சி, ஆர்க்காட்டு நவாபு சையதுல்லாவின் கை வசப்பட்டது.

தேசிங்கு மாண்டான் என்ற செய்தியைக் கேட்டதும் இராணிபாய் தன் குல முறைப்படி தீ வளர்த்து அதில் இறங்கினுள். மற்ற இராஜபுத்திரக் குடும்பத்தார் அனைவரும் நகரைவிட்டு வெளியேறினர். போரிட்டுச் செஞ்சியைக் கைப்பற்றிய சையதுல்லா, இராணிபாய் மிகவும் சிறு பெண்ணுய் இருந்தும் தன்னுடைய உற்ருர் உறவினருடன் ஓடி உயிர் தப்பாமல், தீக்குளித்து மாண்ட பெருமையை நினைத்து மனம் மறுகினுன். அக் கற்பரசியின் பெயர் நாட்டில் நெடு நாள் நிலவ வேண்டும் என்று விரும்பி, பாலாற்றங் கரையில் **இராணிப் பேட்டை** என்ற பெயரால் ஒரு பட்டணத்தை உண்டாக்கினுன்.

இங்ஙனமாகத் தென்னாட்டு மன்னன் தேசிங்கின் குடி மறைந்தது. தேசிங்கு மன்னன் தனது இருபத்திரண்டாவது ஆண்டு நிறைவதற்குள் அரும் பெரும் செயல்கள் பல செய்து தென்னாட்டு மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டான். அவன் இளம் பருவத்தில் காட்டிய வீரத்தைப் புலவர்களும் பொது மக்களும் அரியதாக மெச்சினார்கள். இவ் வீரனது வரலாற்றைப் புலவர் ஒருவர் எளிய நாட்டுப் பாடலாக வெளியிட்டுள்ளார். இந்நூல் 'தேசிங்கு ராஜன் கதை' என்னும் பெயரில் இன்றும் படிக்கப்படுகிறது. இந்நூல் இலக்கிய 'வகையைச் சேர்ந்ததன்றாயினும், படிப்பவர் மனத்தில் நாட்டுப் பற்றையும், வீர உணர்ச்சியையும் ஊட்டவல்லதென்பதில் சிறிதும் ஐயமில்லை.

---

# கட்டபொம்மு

## 1. தென்னாடு

வீரத்தின் பிறப்பிடமாகவும், வெற்றியின் உறைவிடமாகவும் விளங்கியது தென்னாடு; உண்மையும், ஒழுக்கமும், உயர்வும் நிறைந்தது தென்னாடு; விண்ணையும் மண்ணையும் இணைக்கவல்ல இமயத்தையும் இயற்கை எழில் மிகுந்த இலங்கையையும், கடல் கடந்ததும் கரையற்ற செல்வமுடையதுமாகிய கடாரத்தையும் தன்னடிப்படுத்தியது தென்னாடு. கங்கைச் செல்வத்தையும், காவிரிச் செல்வத்தையும் பெற்று நல்வாழ்வு வாழ்ந்தது தென்னாடு; வில்லும், புலியும், கயலும் ஒற்றிய வீரக் கொடியை விண்ணை இடிக்கும் இமயத்திலும், கண்ணைக்கவரும் இலங்கையிலும் நாட்டியது தென்னாடு; ஆதியில் மக்கள் தோன்றிய இடங்களுள் ஒன்றென ஆராய்ச்சிவல்லார் புகழ்வது தென்னாடு; பிற நாட்டு மக்கள் நாகரிகமறியாது விலங்கினம் போல் வாழ்ந்த அக்காலத்திலேயே, நாடுதோற்றி நகரங்கள் அமைத்து, நாட்டுக்குத் தலைவரும், அவர்க்குரிய நல்லமைச்சும் அமைத்து, நாகரிகமுற்று நலம் பெற்றுத் திகழ்ந்தது தென்னாடு.

காயும் கனியும், கன்னலும் செந்நெலும், காவும் கழனியும், வாவியும் குளமும், மாவும் மரமும், புள்ளும், புனலும், மலையும், நதியும் மலிந்து பொன்னாடு எனப் புகழ்பெற்றது தென்னாடு. ஆவியன்ன வெண் துகிலும், அழகு நிறை பட்டாடையும், காலம் அறிந்தணியும் கலை புணர்ந்தது தென்னாடு. இசையுப், மருத்துவ

மும், எண்ணரிய பல் கலையும் திசையிலுள்ளோர் தாம் புகழத் திகழப்பெற்றிருந்தது தென்னாடு.

கொடையில் சிறந்த குமணனும், வண்மையிற் சிறந்த வளவனும், மாரியினும் சிறப்ப ஈயவல்ல பாரியும், அற நூலின் விதி முறையினும் சிறப்ப ஈந்துவந்த அதிகனும், காரியும், நள்ளியும், ஓரியும், பேகனும், நலம் மலிய வாழ்ந்து புகழ் மலிய ஈந்தது தென்னாடு.

அன்றும் இன்றும் என்றும் போற்றுதற்குரிய தெய்வப் புலவராம் திருவள்ளுவரையும், கற்பரசி கண்ணகிக்குக் காவியம் வகுத்த இளங்கோவையும் கபில பரணரையும், கல்லாட மாமூலரையும் தோற்றுவித்து, அளப்பரிய பெருமையில் களித்திருந்தது தென்னாடு. காவியம் செய்த கம்பனையும், கலையுருவாம் அவ்வையையும் மேவி நமக்களித்து மேன்மையுற்றது தென்னாடு. முக்கண் படைத்த முதல்வனே கூறினும் 'குற்றம் குற்றமே' என்று வீரமொழி உரைத்து வீறு பெற்ற நற்றமிழ்ப் புலவன் நக்கீரன் வாழ்ந்தது தென்னாடு. எந்நாட்டுக்கும் இல்லா இணையற்ற புகழ்பெற்று இறுமாந்திருந்தது தென்னாடு.

இத்தகைய பெரும்புகழும் நலம் பலவும் இயைந்து எந்நாட்டவரும் புகழும் தென்னாட்டை முடியுடை மூவேந்தராம் சேர சோழ பாண்டியர் அறமும், அன்பும், முறையும், நிறையும் அமைய ஆண்டு வந்தனர். எதிர்த்த மன்னர்களையும், இமயத்தையும் வென்று தன் அன்னையின் எண்ணத்தை ஈடேற்றிய சேரன் செங்குட்டுவனும், கயவாதுவை வென்று காவிரிக்குக் கரையமைத்த கரிகாலனும், வடநாட்டு மன்னரை வாகை சூடி ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும் வாழ்ந்த காலத்தில் பேரரசுகள் விளக்கமுற்றிருந்தன.

“ஆறிடு மேடு மடுவும் போலாம் செல்வம்,” என்னும் மூதுரைக்கேற்ப, வளமுற்றுத் திகழ்ந்த தென்னாடு

வளங் குன்றியது. பிறநாட்டு மக்களின் படையெடுப்பும், தாய் நாட்டு மக்களின் ஒற்றுமைக் குறைவும் நாட்டை நலிவுறச் செய்தன. மன்னர்கள் அளவுக்கு மிஞ்சிய அறக் கருத்தையும், ஆக்கை நிலையாமை முதலிய பிற கருத்துக்களையும் மேற்கொண்டு வீர உணர்ச்சியும், நாடு காவலும் மறந்து, மறு உலக வாழ்க்கையில் மனம் ஊன்றி நின்றார்கள். இது காரணமாகப் பேரரசுகள் மறைந்து "ஒரே ஒரு ஊருக்கு ஒரே ஒரு இராசா; அவனுக்கு ஒரே ஒரு மந்திரி" என்னும் பாட்டிக் கதைக்கு இலக்கியமாக நாடு சின்னு பின்னமாகச் சிதறிச் சிற்றரசுகள் நிறைந்தன. வீரம் செறிந்த தென்னாட்டில் வீணர் பலர் புகுந்தனர்; மறைகள் மலிந்த தென்னாட்டில் மாசுகள் மலிந்தன. வண்மை மிகுந்த தென்னாட்டில் வறுமை வளர்ந்தது. அந்தோ! நாடு, 'நாடு' எனும்படிக்கின்றி, காடுபோல விளங்கியது. எந்த நேரமும் படையெடுப்பும், வரித் தொல்லையும் மக்களை வாட்டி வதைத்தன. இத்தகைய சூழ்நிலையில் தென்னாட்டுப்பாளையப்பட்டுகள் தோன்றலாயின. இனித் தென்னாட்டுப் பாளையங்கள் எவ்வாறு தோன்றி வளர்ந்தன என்பதை அறியத் தொடங்குவோம்.

---

## 2. தென்னாட்டுப் பாளையப்பட்டுகள்

தென்னாட்டைப் பண்டுதொட்டுப் பாண்டிய மன்னர்கள் ஆண்டு வந்தார்கள் என்றாலும், இடைக் காலத்தில் அது பல மன்னர்களின் கை வசப்பட்டது. பாண்டியருக்குப் பின் பல்லவர்களும், சளுக்கியர்களும் ஒருவர் பின் ஒருவராக வெற்றிகொண்டு ஆண்டு வந்தாலும், அவர்களது ஆட்சி நிலைபெறவில்லை; பிற்காலச் சோழர்களின் முதல்வனாய்ப் பெரும் புகழுடன் விளங்கிய சோழன் **பராந்தகன்** ஈழத்தையும், பாண்டி நாட்

டையும் வென்று தன் வசப்படுத்தினன். இதற்குப் பின் பாண்டியரும், சோழரும் இடையருது போரிட்டுக் கொண்டே இருந்தனர். முடிவில் பாண்டி நாடு **பராக்கிரம பாண்டியன்** ஆட்சிக்குட்பட்டு நின்றது. அது சமயம் டில்லியில் ஆண்டுவந்த அல்லாவுதீனின் படைத் தலைவனுகிய **மாலிக்காபூர்** பாண்டி நாட்டைப் பற்றிக் கொண்டான் என்ருலும், விரைவில் பாண்டி நாடு உரிமை பெற்றது. 1374-இல் பாண்டிய நாட்டைச் **சுந்தர சோழன்** என்பவன் ஆண்டு வந்தான். அவன் காலத்தில் **முஜர்ஹிட்** என்ற முஸ்லிம் மன்னன் தென்னுட்டின் மீது படை எடுத்துக் கொள்ளையடித்துக் கொண்டு திரும்பிவிட்டான். இவை போன்ற மாறுதல்கள் பல தென்னுட்டில் நிகழ்ந்தமையால், பாண்டியர் வழிமுறை வழுவத் தொடங்கியது. பாண்டியர் வழிமுறையைச் சேர்ந்த ஐவர் தம்மைப் '**பஞ்ச பாண்டியர்**' என்று கூறிக்கொண்டு, சிறு சிறு பகுதியை ஆண்டு வந்தனர். இவர்களுக்குள் நிகழ்ந்த சிறுவழக்கு காரணமாக கி. பி. 1404- இல் விளக்கமுற்றிருந்த விஜய நகரத்தார் தென்னுடு நுழைந்து, பாண்டி நாட்டைத் தம் வசப்படுத்தி, தம் மேற்பார்வையின் கீழ் ஆட்சி புரிந்தனர். இங்ஙனம் ஐம்பது ஆண்டுகள் நிகழ்ந்தன. விஜய நகரத்தார் வலுக்குறைந்ததை அறிந்து தென்னுட்டில் இருந்த பதிலரையர் (Viceroys) தங்கள் மண்டிலங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள முற்பட்டனர். இதை அறிந்த விஜயநகரத்தார் தங்களிடமிருந்த சேனைகளையும், சேனைத் தலைவர்களையும் தென்னுட்டுக்கு அனுப்பிப் பதிலரையர்களை அடக்கி, நாட்டைச் சிறு சிறு பகுதியாகப் பகுத்து, ஒவ்வொரு பகுதியையும் ஒவ்வொரு படைத் தலைவனிடம் ஒப்புவித்துப் படை ஆட்சியை (Military Rule) நிறுவினர். மேலும் விஜயநகரத்தார் தம் வலிமை குறைந்ததை அறிந்து, ஆங்காங்கிருந்த படைத்தலைவர்களையே குறுநில மன்னர்களாக்கித் திசை காவலராக

அமைத்தனர். இறுதியில் விஜயநகரம் அழியவே, ஆங்காங்கிருந்த படைத்தலைவர்களே மன்னர்களாக மாறிவிட்டார்கள். இங்ஙனம் தோன்றிய குறுநில மன்னர்களே பாளையக்காரராவார்கள். இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு பண்டைத் தமிழ் மன்னர் வழியில் வந்தவர்களும், தெலுங்கு நாட்டினின்று வந்தவர்களும், மறவர்களும், மற்றும் வீரமும், செல்வாக்கும், பெற்றிருந்த தலைவர்களும், பாளையக்காரர்களாக மாறினர்கள். இவ்வாறு தோன்றிய பாளையங்களில் பாஞ்சாலங்குறிச்சி, நெற்கட்டுஞ் செவ்வல், எட்டயபுரம், ஏழாயிரம் பண்ணை, சொக்கம்பட்டி, சிவகிரி, சிங்கம்பட்டி, அழகாபுரி, ஆற்றங்கரை, ஊற்றுமலை முதலான முப்பது பாளையங்கள், திருநெல்வேலி மண்டலத்திலும் மற்றும் நாற்பத்திரண்டு பாளையங்கள் மதுரை மண்டலத்திலும் இருந்தன. இங்ஙனம் பதினாரும் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய பாளையக்காரர்களின் ஆட்சி ஏறத்தாழ இருநூற்றைம்பது ஆண்டுகள் நிலைபெற்றிருந்தது.

திருநெல்வேலிப் பாளையங்களைக் கீழ்ப் பகுதி, மேற்பகுதி என இருபிரிவாகப் பிரிக்கலாம். கீழ்ப்பகுதி பாளையக்காரர்களுள் பெரும்பாலார் தெலுங்கு நாய்க்கர்களே. மேல்பகுதியிலாண்டவர், மறவர்களும், வன்னியர்களும் ஆவார்கள். கீழ்ப்பகுதிக்குட்பட்ட பாளையங்கள் அனைத்தும் பாஞ்சாலங் குறிச்சியைத் தலைமையாகக் கொண்டிருந்தன. மேற்பகுதிக்குட்பட்ட பாளையங்கள் நெற்கட்டுஞ்செவ்வல் பாளையக்காரரான பூலித்தேவரைத் தலைவராகக் கொண்டிருந்தன. ஆயினும் தென்னாட்டுப் பாளையங்களனைத்திற்கும் பாஞ்சாலங் குறிச்சியே தலைமை பெற்றிருந்தது. மிகச் சிறிய பாளையக்காரனாயிருந்தும், போதுமான படையற்றிருந்தும், தென்னாட்டுப் பாளையங்கள் யாவும் ஆங்கிலேயருக்கு அடிமையானதைக் கண்டும் உறுதியாக நின்று, மானமே பெரிதென மதித்து வீரப்போர் புரிந்து, வெள்ளையரைத்

திண றவைத்து, நம் நாட்டு விடுதலைப் போருக்கு முதல் பலியாகி முடிந்த வீரப்பெருமகன் **வீரபாண்டியக் கட்ட பொம்முவாகிய** தென்னாட்டு வீரனைப்பற்றி இனி அறியத் தொடங்குவோம்.

---

## 3. வீரபாண்டியக் கட்டபொம்மு

அடல்வேல் ஆடவரே அன்றி, அவர்தம் மடவரல் மகளிரும் மாண்புடை மறம் பெற்றிருந்த தென்பாண்டி நாட்டை அரசு செய்து வந்த வீரபாண்டியக் கட்ட பொம்மு **நாயக்கர் வமிசத்தைச்** சேர்ந்தவராவார். ஏப்பர் என வழங்கும் **கொல்ல நாயக்கர் குடியில் தோக்கலவார்** என்ற பிரிவைச் சேர்ந்தவர், (தோக்கலவார்—பசுக்களை வளர்ப்போர்) **தொட்டிய நாய்க்கர்** எனவும் வழங்கப்பெறுவர். இவ்வினத்தவர் இன்றும் சேலம், கோவை, திருநெல்வேலி, மதுரை முதலிய மாவட்டங் களில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் ஆதியில், துங்கபத்திரை நதியின் அருகில் புகழ் வாழ்ந்திருந்த "**கம் பிலி**" என்ற ஊரின் அருகில் இருந்து தென்னாடு புகுந்த மையாலோ, அன்றி மிகுதியாகக் கம்பளங்களைப் பயன் படுத்தியமையாலோ இவர்களைக் **கம்பளத்தார்** எனவும் வழங்குவர். இவர்கள் தெலுங்கு பேசி வந்தார்கள். இனி இவ் வீரபாண்டியனது முன்னோர்களைப்பற்றி அறியத் தொடங்குவோம்.

முன்னோர்: கட்டபொம்முவினுடைய முன்னோர் களுள் ஒருவனாகிய **பால்ராஜா** என்பவன் **பல்லாரி** நாட் டிலே வாடிக்கோட்டைப் பகுதிக்குச் சிற்றரசனாக இருந்தான். இம் மன்னனுக்கும் **வீரஜக்கம்மாள்** என்ற அம் மைக்கும் பொம்மு என்பவர் எட்டாவது பிள்ளையாகப் பிறந்தார். அக்காலத்து முகம்மதிய மன்னன் ஒருவன் பால்ராஜாவிடம் பெண் கொள்ள விழைந்தான். இவ்

விழைவின் விளைவு தனக்குத் தீதாக முடிவதோடு தன் குலப்பெருமையையும் அழிக்குமென்றறிந்த பால்ராஜா மரபுநிலை அழிய வாழ்வதினும், அரசு நிலையொழிந்து அகல்வதே நலம் என்று உறுதி செய்தான். இரவோடிரவாய்த் தன் வயப்பட்ட பொருள்களுடன் தென்னாடு போந்து, மணியாச்சிக்கு வடகிழக்கே பத்துமைல்தொலைவிலுள்ளதும், சாரலும், ஏரியும் வாய்க்கப் பெற்றதுமான சாலிகுளம் என்னுமிடத்தில் தன் வாழ்க்கையைத் தொடங்கினான்.

இஃதிங்ஙனமாக, குழவியாயிருந்த பொம்மு நல்ல வளர்ச்சியும் கவர்ச்சியும் உள்ள இளைஞனாய்ப் பதினாறாண்டுகள் நிரம்பப் பெற்றார். ஒருநாள் இரவு கள்வர் பலர் கொள்ளையடித்து நள்ளிரவில் அவ்வழியே வர; அக் கள்வர்களைப் பொம்மு ஒருவராகவே எதிர்த்து நின்று வெற்றி பெற்றதோடன்றி அவர்களுள் பலரைத் தகைந்தார். அது சமயம் சாலிகுளத்தருகே இருந்த வீரபாண்டியபுரத்தை ஆண்டுவந்த ஜகவீரபாண்டியன் என்ற மன்னன் அச்செய்திகளைக் கேள்வியுற்று, பொம்முவைத் தன் அவைக்கழைத்துச் சிறப்புகள் செய்து, அவன் வீரத்தை மெச்சி, 'பொம்மு கெட்டிக்காரன்' என்ற பொருள்தோன்ற 'கெட்டிபொம்மு' என்று அவனை அழகுற அழைத்தான். 'கெட்டி' என்ற தமிழ்ச் சொல், தெலுங்கில் 'கட்டி' எனவும் வழங்கும்; நாளடைவில் இப்பெயரே மருவி 'கட்டபொம்மு' என வழங்கலாயிற்று. ஜகவீரபாண்டியன் அக்காலத்தே தனக்குப் பகைவராயிருந்த விசயராமன், உக்கிரசிங்கன் என்ற இரு மன்னர்களையும் வென்று வருமாறு கட்டபொம்முவின் தலைமையில் ஒரு படையை அனுப்பினான். இக்கன்னிப் போரை வெற்றிகரமாக முடித்து வந்த கட்டபொம்முவுக்கு மன்னன் 'வீர பாண்டியன்' என்ற தன் பெயரின் ஒரு பகுதியைப் பட்டப் பெயராக அளித்துச் சிறப்பித்ததோடு, அவனிடம் மிகவும் அன்பு பாராட்டி வந்தான். மேலும்

தனக்குப் பின் தன் அரசை ஆள்வதற்கு ஆண் மகவின்மையால், மன்னன், வீரபாண்டியக் கட்ட பொம்முவையே அரசுக்கு உரியவனாக்கி இறந்தான்.

இங்ஙனம் நமது கதாநாயகன் வமிசத்தைத் தோற்றுவித்த ஆதிக் கட்டபொம்மு கி. பி. 1148-ல், அரசுரிமை பெற்றவுடனே, தன் இனத்தவர் பலரை ஆந்திர நாட்டினின்றும் அழைத்துத் தென்னாட்டில் குடிபுகச் செய்தான். தற்போது ஓட்டபிடாரம் என வழங்கும் ஊரின் அருகே தகுதியான தோட்டம் ஒன்றில் கோட்டைக் கொத்தளங்களை அமைத்து, அதைத் தனது தலைநகராக்கிக்கொண்டான். இங்ஙனம் அமைத்த நகருக்குத் தம் முன்னோருள் ஒருவனாகிய 'பாஞ்சாலன்' என்பவனது நினைவுக்குறியாகப் பாஞ்சாலங் குறிச்சி என்ற பெயரை வழங்கினான். (பாஞ்சாலன்—குறிச்சி; குறிச்சி—வாழுமிடம்.) ஆதிக் கட்ட பொம்முக்குப் பின் பட்டமேறியவர் அனைவரும் "பொம்மு" என்ற பெயரை மரபுப் பெயராகச் சூட்டிக் கொண்டனர். இதன்பின் இவ் வழிமுறையில் வீர பொம்மு, கெட்டிபொம்மு, சின்னபொம்மு, பால்ராஜா பொம்மு, நல்லபொம்மு, வீரசூடாமணி, வீரமல்லு, இரணவீரசின்னு, ஜகவீர பொம்மு, பால்பாண்டியன், பொம்மு துரை முதலிய நாற்பத்தெட்டு மன்னர்கள் ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகள் ஆட்சி புரிந்து வந்தார்கள். இவர்களுள் நாற்பத்தாறுவது வழி முறையாகப் பட்டம் பெற்ற ஜகவீரக் கட்டபொம்முவுக்கும், சண்முகக் கனி என்ற ஆறுமுகத்தம்மைக்கும் தென் நாட்டின் பெருமையை நிலைநிறுத்திய அருந்திறலாளனாகிய தென்னாட்டு வீரன் வீரபாண்டியக் கட்டபொம்மு, 3-1-1760-ல் அருமைத் திரு மைந்தராய்ப் பிறந்தார். இத்திருமகன் பிறந்த ஆறு ஆண்டுகளுக்குப்பின் ஊமைத் துரை என்று உலகத்தாரால் புகழப்பட்ட தளவாய் குமாரசாமி பிறந்தார். அவருக்குப் பின் சுப்பையா என

வழங்கப்பெற்ற துரைசிங்கமும், ஈசுவரவடிவு, துரைக்கண்ணு என்ற இரு பெண்மணிகளும் பிறந்தார்கள். இவர்கள் இளமையில் கல்வியிலும், வேல், வாள் முதலிய படைப் பயிற்சியிலும், உடற்பயிற்சியிலும் வல்லவர்க ளாக விளங்கினர்கள். ஜகவீரக் கட்டபொம்மு தம் மக்களுடைய வளர்ச்சியும் உணர்ச்சியும் கண்டு பெரு மகிழ்வுற்றான். கண்டார் மனத்தைக் கவர்ந்து, காளைப் பருவமுற்றிருந்த கட்ட பொம்முவுக்கு **வீரசக்கம்மாள்** என்ற பெண்மணியை மணம் புரிவித்தான், மற்றும் தள வாய் குமாரசாமிக்கும், துரைசிங்கத்திற்கும் முறையே **சௌந்தரவடிவு, ஞானமுத்தம்மாள்** என்ற இருவரையும் மணம் செய்வித்து மகிழ்ந்தான்.

வீரபாண்டியர் தமது முப்பதாவது வயதில் (2–2–1790–ல்) தம்பியர் இருவரும் இளவரசராக அமைய, **தானுபதிப் பிள்ளை** என்று பிற்காலத்தில் பெரும் புகழடைந்த **சிவசுப்பிரமணியப் பிள்ளை** அமைச்சராய் அமர, அரியணையேறினர்; உறவினரும், குடிகளும் உவகை மீக்கூர ஆட்சிபுரிந்து வந்தார். இவர்தம் அவையைச் **சங்கரமூர்த்திப் பிள்ளை** என்ற இயற்பெய ருள்ள புலவர் அழகு செய்தார்.

---

## 4. ஆட்சி நிலை

பாஞ்சாலங் குறிச்சிப் பாளையம் தொண்ணூற்றுறு ஊர்களைத் தன்னகத்தே கொண்டது. அவை கெவுனி கிரி வணிதம், பசுவந்தனை வணிதம், புதியம்புத்தூர்வணி தம், ஆதனூர் வணிதம், வேகிநத்தம் வணிதம், பட்டண மருதூர் வணிதம், என ஆறு வணிதங்களாகப் பகுக்கப் பட்டிருந்தன. (வ ணி த ம் — ப கு தி) இப்பகுதியி லிருந்த குடிகள் பாளையத்தாருக்கு வரி செலுத்தி வந் தார்கள். இங்ஙனம் பெறப்படும் வரிப் பொருள் பண

மாக மட்டுமின்றித் தானியமாகவோ, ஆடுமாடு முதலியவைகளாகவோ வசூலிக்கப்படும். அன்றி யும், பாஞ்சாலங்குறிச்சியாருக்கு நாடுகாவல், திசை காவல் என்ற இரண்டு உரிமைகளும் இருந்தன. நாடு காவல் என்பது நவாபுக்குச் சொந்தமான ஊர்களைப் பாதுகாப்புச் செய்வதற்காக நவாபின் ஊர்களிலிருந்து வசூலிக்கப்படும் வரியாகும். திசைகாவலென்பது நவா பின் மண்டிலத்தையும், எல்லைப் புறங்களையும் பாதுகாப் பதற்காக நவாபினிடமிருந்து பெறப்படும் பொருளா கும். மேலும், நெல்லை மண்டிலத்திலிருந்து முப்பது பாளையக்காரர்களிடமிருந்தும் உரிய காலத்தில் இறைப் பணத்தை வசூல் செய்து, அதில் தாம் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு, மீதத்தை ஆர்க்காட்டு நவாபுக்கு அனுப்பிவந்தார். இங்ஙனம் தமக்குக் கிடைத்த பொரு ளைக் கொண்டு படையைப் பெருக்கி, திருட்டு, கொள்ளை முதலியன இன்றிப் பாதுகாத்ததோடு, நாட்டின் நீதியை யும் நிலைநிறுத்துவார். பாளையக்காரர் அனைவரும் இவரைப் பின்பற்றியே ஆட்சிபுரிந்து வந்தனர். இவரது புகழ் பாண்டி மண்டிலமேயன்றி மறு மண்டிலங்களிலும் ஓங்கியது. தீரா வழக்குகளெல்லாம் இவ் வீரமகனிடம் வந்து தீர்ந்தன. பாளையக்காரர்களுக்குள் ஏற்பட்ட சச்சரவுகளெல்லாம் இவரால் தீர்க்கப்பட்டன.

ஒருமுறை சொக்கம்பட்டி ஜமீனுக்கு நேர்முறை தாயத்தனாகிய சின்னனஞ்சத்தேவனைத் தள்ளிவிட்டு, வெள்ளையத் தேவன் என்பவன் பட்டம் கட்டிக்கொண் டான். சின்னனஞ்சத் தேவன் அச் செய்தியைக் கட்ட பொம்முவினிடம் கூறி, முறை வேண்டினான். வீரபாண் டியன், ஜமீனை உடையவனிடம் ஒப்புவிக்குமாறு வெள் ளையத் தேவனுக்கு இரண வீரசின்னு என்பவன் மூலம் ஓலை போக்கினார். அதைக் கண்டும், மௌனம் சாதித்த வெள்ளையன்மீது தம் படையை ஏவி, வெள்ளையனை வென்று, சின்னனஞ்சத் தேவனுக்குப் பட்டமளித்தார்.

இவர் வலியவரையும், எளியவரையும் சமமாக எண்ணி ஆதரித்து வந்தார். மதுரை நகரில் திருமலை நாயக்கர் அரண்மனை கட்டத் தொடங்கியபோது, தென் திசைச் சுவர் நன்கு அமைந்து நில்லாமல், பலமுறை சிதைவுற்று வந்தது. இதனைத் தடுக்கச் சிலர் கூறிய யோசனையின்படி நரபலி கொடுக்க இசைந்தார் நாயக்கர். இப் பலிக்காகக் குறிக்கப்பெற்ற இருவரின் உறவின் முறையார் கட்டபொம்முவினிடம் வந்து குறையிரந் தனர். கட்டபொம்மு, நரபலியிடுவது அடாத செய லென்றும், இறைவனை வேண்டி, மீண்டும் சுவரெடுத் தால் அஃது இனிதாக அமையுமென்றும் நாயக்கருக்கு ஓலை போக்கி, நிகழவிருந்த நரபலியைத் தடுத்தார். இங்ஙனம் இவர் மக்களுக்குச் செய்த நன்மைகள் எண்ணிறந்தன.

இவருடைய படையில் நூற்றுக்கணக்கானகுதிரை களும், யானைகளும், ஒட்டகங்களும் இருந்தன. இருபதி னாயிரத்துக்கு மேற்பட்ட காலாட்கள் இருந்தார்கள். அக் காலப் போர் வீரர்கள் பெரும்பாலும் அப்பாளையத் தைச் சேர்ந்த குடிமக்களே ஆவார்கள். நாட்டில் உடற் கட்டுள்ள ஒவ்வோர் ஆண்மகனும் போர் நிகழுங்கால் போர் வீரனுகிவிடுவான்; அது சமயம் மன்னனுல் உணவு உடை முதலியன பெறுவான். போர் முடிந்த வுடன் தன் தொழிலுக்குத் திரும்பிவிடுவான்.

பாஞ்சாலங்குறிச்சிப் பட்டணத்தைச் சுற்றிலும் வலிமையான மதில்கள் அரண்செய்து நின்றன. அச் சுவர்கள் மண்ணுல் எழுப்பப்பட்டிருந்தாலும், பண்டைக் கால முறைப்படி பனஞ்சாற்றுலும், இராகிக் கூழாலும் மண் பிசைந்து கட்டப்பட்டதாகலின், அவை கல்லினும் வன்மை மிக்கு விளங்கின. கோட்டை இரட்டைச் சுவ ரால் அரண் செய்யப்பட்டு நடுவில் உமி, பதர், வரகு வைக் கோல், கம்பு முதலிய பொருள்கள் நிரப்பப் பெற்றிருந்த படியால், இவற்றைத் தகர்த்தல் எளிதன்று. அடிப்பாகத்

தில் பதினைந்தடி அகலமும் உச்சியில் மூன்றடி அகலமும் கொண்ட இந்தச் சுவர்கள் வெளிப்புறம் செங்குத்தாக வும், உட்புறம் சரிவாகவும் அமைந்து, பன்னிரண்டடிக்கு மேற்பட்ட உயரமுடையவையாக விளங்கின. இக் கோட்டையில் போர்க் காலங்களில் உள்ளிருப்பவர்கள் வெளியிலிருக்கும் எதிரிகளை அறிந்து சண்டை செய்ய வும், தாம் இருக்கும் இடத்தைப் பிறர் அறியாதிருக்க வும் பயன்படும் கிளிக்கூட்டு அலங்கங்கள் பல அமைக்கப் பட்டிருந்தன. இவையே யன்றி, இக் கோட்டையின் உட்புறத்தில் சுண்ணும்புக் காரையால் கட்டப்பட்ட மற்ருெரு கோட்டையும் இருந்தது. கோட்டையைப் பகைவர்கள் எளிதில் அணுகாதவாறு கோட்டை யைச் சுற்றிலும் இலந்தை மரங்கள் நிறைந்த காவற் காடு ஒன்றும் வளர்க்கப்பட்டிருந்தது.

இம்மன்னர் தம் குலதெய்வமாகிய திருச்செந்தில் முருகனுக்கு நானூறு ஏகர் நிலங்களுக்கு மேலாக மானியம் கொடுத்தார். அவை இன்னும் ‘செந்தி லான் பண்ணை’ என்று வழங்கி வருகின்றன. மேலும், திருச்செந்தில் முருகனுக்குத் தாமும் தம் மனையாளும் அணிந்திருந்த அணிகலன்கள் யாவற்றையும் அளித்து மகிழ்ந்தார். மற்றும் **பசுவந்தனை** என்னும் ஊரில் ஒரு கோவில் கண்டதோடு, **ஆழ்வார் திருநகரியி**லுள்ள தெய்வத்தின் திருப்பணிக்காக வெள்ளமடம் என் னும் கிராமத்தில் இருபத்தேழு கோட்டை விதைப் பாடுள்ள நிலத்தையும் வழங்கினர். இவர் செய்த அறங்கள் மற்றும் பலப் பல.

இவ்வாண்டகையின் ஆட்சியில் பாண்டி மண்டலம் முழுவதும் மகிழ்ந்தது. “அறத்தின் இறுதி உயிர்க் கிறுதி” என்ற பழமொழிக்கிணங்க ஆட்சி செய்த பாண்டியர் வழிவந்தவராதலால், அறத்தை ஆருயி ரெனக் காத்தார். களவும் கொலையும் தவிர்த்து, கலை யும் நலமும் செழிக்கச் செய்தார். குற்றமுடையார்

அடங்கினர். வஞ்ச நெஞ்சினர் ஒடுங்கினர். நல்லோர் தழைத்தனர். நாடு வளம்பெற்றிருந்தது என்பதைக் கீழ் வரும் செய்யுள் காட்டுகின்றது.

"குற்றமுளார் குலைநடுங்கக் குணமுடையார்
உளமகிழக் கோவின் செங்கோல்
பற்றியிவன் பாராண்டு பண்புபா
ராட்டிவரும் பான்மை நோக்கி
மற்றமறு புலத்துயர்ந்த மன்னவரு
மனமகிழ்ந்து மாண்பு செய்ய
வெற்றிமிகு திருவோடு வீரமிகு
பாஞ்சையினில் விளங்குகின்றான்.

(பாஞ்சக் கோவை)

---

## 5. கிழக்கிந்தியக் கம்பெனி

மேலை நாட்டினர் பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் கல்வி, வாணிகம் முதலியவற்றில் முன்னேறி ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டுக்கொண்டு வாணிகத்தையும், நாட்டையும் பெருக்க முனைந்தனர். இது காரணமாகப் பல ஐரோப்பிய வணிகக் குழுக்கள் கீழ் நாடுகளில் பண்டசாலைகளை அமைத்து, வாணிகம் செய்யத் தொடங்கியதோடு நாட்டாட்சி செய்யவும் தொடங்கின. இங்ஙனமாக வந்த குழுக்களுள் ஆங்கிலக் கிழக்கு இந்தியக் கம்பெனியும் ஒன்றாகும். இது முதலில் வட நாட்டில் தொடங்கிப் பின் தென்னாடு புகுந்தது ; அக் காலத்தில் பூவிருந்த வல்லியில் இருந்த சென்னப்ப நாயக்கரை வேண்டிக் கடற்கரை யருகில் நிலம் பெற்றுக் கோட்டை ஒன்றைக் கட்டிப் பண்டசாலைகளை அமைத்து வாணிகம் நடத்தி வந்தது.

---

1. English East India Company.

இங்ஙனம் வாணிகத்திற்காகத் தென்னாடு நுழைந்த இவ்வணிகக் குழுவே அந்நாள் அரசனாக இருந்த ஆர்க்காட்டு நவாபுக்குப் பெரும் பொருளைக் கடனாக உதவி, அதற்கு ஈடாக நாட்டில் வரி வசூலித்துக்கொள்ளும் உரிமையைப் பெற்றது. இதனால் ஆர்க்காட்டு நவாபுக்கு உரிமையாக இருந்த தென்னாட்டுப் பாளையங்கள் யாவும் ஆங்கில ஆட்சிக்கு உட்பட்டன. சென்னையில் இருந்த கம்பெனியார் தங்கள் தலைமை நிலையத்துக்கு உதவியாகத் திருச்சி, திருநெல்வேலி, பாளையங்கோட்டை முதலிய இடங்களில் பண்டசாலைகளையும் கோட்டைகளையும் அமைத்துக்கொண்டு, வரி வசூல் செய்ய முனைந்தனர். இங்ஙனம் நாட்டை நவாபு ஆங்கிலேயருக்கு உரிமைப்படுத்தியதை அறிந்த தென்னாட்டுக் குறுநில மன்னர்களாகிய பாளையக்காரர்கள் ஆங்கிலேயரை எதிர்த்ததோடன்றி, வரி கொடுக்கவும் மறுத்துவிட்டார்கள். வெள்ளையர் தாங்கள் நவாபினிடமிருந்து பெற்றிருந்த உரிமைகளை விளம்பரப்படுத்தியதன்றித் தங்கள் படை பலத்தாலும், நவாபினிடமிருந்த படைத் தலைவர்களைக் கொண்டும், மற்றும் அக்காலத்து வலிமை பெற்றிருந்த செல்வர்களைக் கொண்டும், பாளையக்காரர்களை நயமாகவும், பயமாகவும் வற்புறுத்தி ஒருவாறு வரி வசூல் செய்து வந்தனர்.

இம்முறையால் ஏறக்குறைய பாளையக்காரர்கள் அனைவரும் கம்பெனியின் ஆட்சிக்கு உட்படலாயினர். பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் பாஞ்சாலங்குறிச்சியை ஆண்டு வந்த **பொல்லாப் பாண்டிய நாயக்கர்** காலத்திலிருந்தே பாஞ்சாலங்குறிச்சியாரும், நெற்கட்டுஞ் செவ்வல் பாளையக்காரராகிய **பூலித் தேவரும்** கம்பெனியாருக்கு வரிதர மறுத்ததோடு தம்முடன் சேர்ந்த பாளையக்காரர்களையும் வரிகொடாதிருக்கும்படி தூண்டினர். முடிவில் பூலித்தேவரும் ஆங்கிலேயரின் வலி கண்டு வரி கொடுக்க இணங்கினர்.

ஆனல், பாஞ்சாலங்குறிச்சியார் மட்டும் வரி கொடுப்ப தில்லை என்று உறுதியாக நின்றனர். இதனல் ஆதியி லிருந்தே ஆங்கிலேயர் பாஞ்சாலங்குறிச்சியின் மீது உட்பகைகொண்டு இருந்தனர்.

நாளாக ஆக ஒருவாறு தம் வலிமையை வளர்த்துக் கொண்ட கம்பெனியார், பாளையக்காரர்களின் பணத்தை நேரே வசூல் செய்யவும், ஒருவாறு தம் அதிகாரத்தை நாட்டில் நிலைநிறுத்தவும், நிலங்களை அளவு செய்து அதிக வரியை வசூலிக்கவும் கருதி நில அளவை[1] செய்ய முன் வந்தனர். இது சமயம் எட்டயபுரம் ஜமீன்தார ராகிய **எட்டப்ப நாயக்கர்** நில அளவைக்கு வந்திருந்த அதிகாரியாகிய **லெப்டினன்ட் கர்னல் மாக்ஸ்வெல்**[2] என்ற ஆங்கிலத் தளபதியிடம் தாம் முழு அடிமை என்பதை உணர்த்தி, அடைக்கலம் புகுந்து நின்றதோடு, தாம் என்றும் ஆங்கிலக் கம்பெனிக்கு உற்ற உதவியாக இருந்து, காட்டிக் கொடுக்கும் காரியத்தைக் கண்ணிய மாகச் செய்யத் தக்கவர் என்பதையும் மெய்ப்பித்துக் கொண்டார். ஆங்கிலேயரது ஆட்சியும் வலிமையும் கண்ட ஏனைய பாளையக்காரர் கர்னல் மாக்ஸ்வெல்லைப் பாளையங்கோட்டை வந்து கண்டு பேசித் தம்மை அறிமுகம் செய்துகொண்டனர். ஆனல் பாஞ்சாலங் குறிச்சிப் பாளையக்காரரான கட்டபொம்மு மட்டும் அங்ஙனம் செய்யவில்லை. தென்னாட்டுச் செல்வத்தைக் கொள்ளையிடத் துணிந்த வெள்ளையரை மதியாமையே அதற்குக் காரணம். தென்னாட்டவர் யாவரும் கப்பம் செலுத்திக் கை கூப்பி நிற்கப் பாஞ்சாலங்குறிச்சியார் மட்டும் பணிய மறுத்தது மாக்ஸ்வெல்லுக்கு மனக் கொதிப்பைத் தோற்றுவித்தது.

---

1 Settlement.
2 Lieutenant Colonel Maxwell.

'பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு'

என்ற மூதுரைக்கிணங்கப் பிரித்தாளும் சூழ்ச்சியில் கைதேர்ந்த அவ் வெள்ளைத் தளபதி, தமக்கேற்ற அடிமையாகி நின்ற எட்டப்பருக்கு இதம் செய்யவும், தமக்கு எதிராகி நின்ற பாஞ்சாலங்குறிச்சியாருக்கு இடையூறு செய்யவும் முற்பட்டான். அவன் நில அளவை செய்த போது பாஞ்சாலங்குறிச்சிப் பாளையப் பட்டைச் சேர்ந்த ஆதனூர் வணிதத்தைச் சேர்ந்தஅருங் குளம், சுப்பணபுரம் என்ற இரண்டு ஊர்களையும் எட் டயபுரத்தோடு இணைத்துவிட்டான். இதனால் பாஞ் சாலங்குறிச்சிக்கும் கம்பெனிக்கும் மேலும் பகை முதிர்ந்ததோடு எட்டயபுரத்தார் கம்பெனியாருக்கு என் றும் மீளா அடிமையாயினர். வாள்வலி கொண்ட வீர பாண்டியனுடைய ஊர்களைத் தம் பாளையத்தோடு சேர்த்துக்கொள்ள எட்டயபுரத்தார் முதலில் அஞ்சினர் என்றாலும் கம்பெனி தமக்கு உதவியிருப்பதை எண்ணி ஏற்றுக்கொண்டார். பலமுறையும் கம்பெனியார் கடிதமூலமாக வரிகேட்டும், பாஞ்சாலங்குறிச்சியார் வரி செலுத்த இசைவதாக இல்லை.

'காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்'

என்ற குறளுக்கேற்பத் தக்க காலத்தைக் கம்பெனி எதிர்பார்த்திருந்தது. இதன்பின் ஆண்டுகள் ஆறு கழிந்தன.

---

## 6. ஆலன் தூது

கி. பி. 1798-ஆம் ஆண்டில் ஆலன் துரை எங்ஙனமாவது பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தாரிடம் பணவசூல் செய்துவிடுவது என்ற முறையில் பாஞ்சைப்பதி வந்து சேர்ந்தான். காகம் பறவாத கட்ட பொம்முவின் கோட்டையை மெல்ல அணுகினன். கட்ட பொம்முவைக் கண்டு இதமாகக் கம்பெனியாரோடு தொடர்பு கொள்ளும்படி எடுத்துரைத்தான். கடந்த ஆறு ஆண்டுகளுக்கும் வரிகொடுக்க வேண்டியதில்லை என்றும், ஏதோ ஓரளவு, வரி என்ற பெயரால், பொருள் தரவேண்டும் என்றும், இல்லையேல் மற்றப் பாளைக்காரர்களும் வரி தர மறுத்துக் கம்பெனியின் உரிமை பறிபோய் விடும் என்றும் வேண்டிக்கொண்டான். இதற்காகக் கட்ட பொம்முக்கு வேண்டுமான சலுகைகளைக் கம்பெனி செய்யத் தயாராக இருப்பதாகவும் கூறினன். இவ்வுரைகளைக் கேட்ட கட்ட பொம்மு "நாங்கள் இந்நாட்டை நாற்பத்தேழு தலைமுறைகளாக ஆளுகிறோம். நாங்கள் யாருக்கும் வரி கொடுத்ததில்லை. வரி கொடுப்பது எங்கள் குடிக்கு இழுக்கானது. நாங்கள் கம்பெனியின் உறவை விரும்புகிறோம்; பொருள் வேண்டுமென்றாலும் கொடுக்கிறோம்; ஆனல், வரி என்ற பெயரால் அரைக் காசும் கொடுக்கச் சம்மதிக்க மாட்டோம்," என்று உறுதியாக உரைத்து மறுத்துவிட்டார். இதைக் கேட்ட ஆலன் சொல்வகை அறியாது திரும்பிவிட்டான். இதற்குப் பின் கட்ட பொம்மு, தானபதிப் பிள்ளை, ஊமைத் துரை, துரைசிங்கம், இரணசிங்கன், சின்னபொம்மையா முதலியவர் கூடி ஆலோசனை செய்தனர். அதில் சின்ன பொம்மையா, துரைசிங்கம் ஆகியவர் ஆங்கிலக் கம்பெனியின் வலிமையையும், பாளையப்பட்டாரின் நிலைமையையும் எடுத்துக் கூறித் தாம் மட்டும் தனித்துக் கம்பெனியை எதிர்த்து நிற்பது நன்மையைத் தாராது ஆகையால் ஓரளவு வரியைக் கொடுத்தாவது கம்பெனி

யாரைத் தங்களோடு சேர்த்துக்கொள்ளவேண்டும்என்றனர். ஆனால் இரணசிங்கனும், தானுபதிப் பிள்ளையும் வரி கொடுத்தல் தமது மரபின் மானத்தை அழிப்பதாகும் என்றெடுத்துக் கூறி, வரி கொடுத்தல் ஆகாது என மறுத்துரைத்தனர். இறுதியாக, வரி கொடுப்பதில்லை என்று முடிவு செய்யப்பட்டது. தூதராக வந்திருந்த ஆலன் துரை, அக்காலத்துக் கம்பெனி ஆட்சித் தலைவராக[1] இருந்த எட்வர்டு[2], வில்லியம் பீட்டர்[3], இர்வின்[4], ஜோசப் வெப்[5] முதலிய தலைவர்களுக்குப் பாஞ்சாலங் குறிச்சியார் வரி தர மறுத்தமையை விளக்கமாக எடுத்து உரைத்தார். கம்பெனித் தலைவர்கள் தங்களுக்குள் கூடிப் பாஞ்சாலங் குறிச்சியைப்பற்றி யோசித்தனர். பாஞ்சாலங் குறிச்சியான் நல்ல படை வலிமையுடையவன் ஆகையால் அவனை எதிர்த்துப் போரிட்டு எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்வதைக் காட்டிலும், இதமாக அடுத்து ஆதரவு பெறுவதே நன்மையைத் தரும் என்றும், மேலும் அன்றைய நிலையில் பாஞ்சாலங்குறிச்சியை எதிர்ப்பதால் நாட்டுமக்களின் வெறுப்புக்கு ஆளாக நேரிடும் என்றும் அஞ்சிச் சூழ்ச்சிகள் பல சூழலாயினர். முதலில் பாஞ்சாலங்குறிச்சியானோடு உறவு கொண்டுள்ள பாளையப்பட்டார்களைப் பிரிக்க வேண்டுமென்றும், பாஞ்சாலங்குறிச்சியின்மீது பலவித புகார்களை எழுப்பவேண்டும் என்றும், இறுதியில் பாஞ்சாலங் குறிச்சியை எதிர்க்க வேண்டும் என்றும் முடிவு செய்தனர். இத் திட்டத்தின் முதல் படலமாகப் பாஞ்சாலங் குறிச்சியின்மீது பழி கூறும்படி பாளையத்தார்களைத் தூண்டினார்கள்.

---

1. Governer in Council 2. Edward
3. William Peter 4. Irwin 5. Joseph Webb

## 7. கோள் மூட்டும் குண்டுணிகள்

ஆதிமுதலாக வெள்ளையரின் அடிவருடியாக விளங்கிய எட்டயபுரத்தான் பாஞ்சாலங் குறிச்சியான் தமக்குத் தொல்லைகள் கொடுப்பதாகவும், தாம் ஆங்கிலக் கம்பெனியையே சதமாக நம்பியிருப்பதாகவும், கம்பெனியின் படை உடனடியாக வந்து கட்டபொம்முவினது கர்வத்தை அடக்காவிட்டால், தமது ஆட்சியும் நாடும் ஆபத்துக்கு ஆளாகநேரும் என்றும் ஓலை போக்கிப் பாதுகாப்பு வேண்டினன். அதுவேயன்றி 7-8-1797-ல் ஊற்றுமலை ஜமீன்தாராகிய **நவநீத மருதப்பன்** என்பவன், "கட்டபொம்முவினது அமைச்சராகிய தானாபதியின் தம்பி வீரபத்திரப் பிள்ளை எம் நாட்டின்மீது படையெடுத்து வர இருக்கிறார். ஆகையால் ஆங்கிலக் கம்பெனியாராகிய தாங்கள் எங்களைப் பாதுகாத்து அருளவேண்டும்," என்று ஒரு வேண்டுகோள் விடுத்ததோடு, தலைவன் கோட்டை ஜமீன்தாரையும் ஒரு கடிதம் எழுதத் தூண்டினன். பெர்க்கட்டு1 என்ற வெள்ளையனும் "கட்டபொம்மன் மிகவும் கெட்டவனாக நின்று துட்டத்தனங்கள் பல துடுக்கோடு செய்கிறான்; மாட்சிமை பொருந்திய கம்பெனியை மதிக்காமல் நமது ஆட்சிக்கு உட்பட்ட குடிகளிடத்தும் வரி வசூல் செய்துகொள்ளுகிறான். ஆகையால், உடனடியாகக் கட்டபொம்மனை அடக்காவிட்டால் காரியம் மிஞ்சிவிடும்," என்று ஓலை போக்கினான். மேலும், சிவகிரி முதலிய பாளையக்காரர்களும் பாஞ்சாலங்குறிச்சியின்மீது பழிதூற்றி வந்தனர். இங்ஙனம் வந்த பழி ஓலைகளனைத்தையும் எச். கிரேம்2 என்னும் வெள்ளையன் மொழி பெயர்த்துக் கம்பெனிக்கு அனுப்பி வந்தான். இதுவேயன்றிக் கம்பெனியாருக்கு எதிராக விளங்கிய சிவகிரிப் பாளையத்தாராகிய சங்கரலிங்கம் பிள்ளைக்கும் அவருடைய மகனுக்கும் ஒரு வழக்கு ஏற்பட்டது. அவ்வழக்கில் ஆங்கிலக் கம்பெனி

---

1. Perkette. 2. H. Greame.

யாருக்கு எதிராகக் கட்டபொம்மு, சங்கரலிங்கம் பிள்ளைக்கு உதவி செய்ததாகவும், 30-1-1798-ல் ஆழ்வார் திருநகரியில் காப்டன் ஹாமில்டன்[1] இருந்த வீட்டைப் பாஞ்சாலங் குறிச்சியைச் சேர்ந்தவர்கள் வளைத்துக் கொண்டு அத் துரையைப் பலவிதமாக அவதூறு செய்ததாகவும், தூத்துக்குடியிலிருந்த பட்டாளத்து அதிகாரி கேப்டன் டேவிசன்[2] கேட்டுக்கொண்டபடி ஆடுகள் கொடுக்கப்படவில்லை என்றும் கம்பெனிக்குப் புகார்கள் வந்தன. அஃதன்றி, நவாபின் ஆட்களும், திருநெல்வேலியில் இருந்த கம்பெனியின் வர்த்தக அதிகாரிகளும் கட்டபொம்முவின்மீது குறைகூறி வந்தனர்.

பாஞ்சாலங் குறிச்சியில் தீயோராயிருந்த சிலர் வெள்ளையரிடம் லஞ்சம் பெற்றும் அவர்களது வஞ்சகப் பேச்சில் மயங்கியும் வீரபாண்டியன்மீது பழிதூற்றலாயினர். எனவே தமக்கு என்றும் பாஞ்சாலங் குறிச்சியான் பணியமாட்டான் என்பதை உறுதியாக அறிந்து கொண்ட வெள்ளையர் பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத்தை வப்புக்கிழுக்கத் தொடங்கினர்.

---

## 8. ஜாக்சன்

பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தைத் தம் வசப்படுத்த முனைந்து நின்ற வெள்ளையர் ஆற்றலும் திறமையும் வாய்ந்த ஒருவரை வரி வசூலிக்கத் தென்னாட்டுக்கு அனுப்ப முடிவு செய்தனர். அதுசமயம் படைப்பழக்கமும், முரட்டுக் குணமும் படைத்தவனாக இருந்த டபிள்யு சி. ஜாக்சன்[3] இச் செயலுக்கு ஏற்றவன் எனத் தேர்ந்தெடுக்கப்பட்டு, தென்னாட்டுச்கு அனுப்பப்பட்டான். ஜாக்சன் 3-2-1798-ல் வரி வசூலிக்கும் கலெக்டராகத்

1. Captain Hamilton. 2. Captain Davison
3. W. C. Jackson.

தென்னாடு வந்தான். தென்னாடு வந்த ஜாக்சனை எட்டப்ப நாயக்கர் முதலிய பாளையக்காரர் அனைவரும் பாளையங்கோட்டை சென்று கண்டுகொண்டதோடு, கட்டபொம்முவின் மீது கோள்சொல்லித் தம்மைக் கம்பெனியின் நம்பிக்கைக்கு உரியவர்களாக்கிக் கொண்டு நாடு திரும்பினர். வழக்கப்படி பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரர்மட்டும் கலெக்டரைக் கண்டுகொள்ள வரவில்லை. இதை அறிந்த ஜாக்சன் கட்டாயமாக ஒரு வாரத்திற்குள் தன்னைக் கட்டபொம்மு வந்து காணவேண்டும் என்றும், நின்றுபோன வரிப் பணங்களையும் அனுப்பி வைக்கவேண்டும் என்றும் ஒரு கடிதம் எழுதினான். அதன்பின், முதல் தவணையில் செலுத்தவேண்டிய வரிப்பணத்தையும், இரண்டாவது மூன்றாவது தவணைகளில் செலுத்த வேண்டிய வரிப் பணத்தையும் உடனே கொண்டு வந்து செலுத்தும்படியும், இல்லையேல் தம்மை இராமநாதபுரத்தில்வந்துநேரில் பார்க்கும்படியும் ஏப்ரல் மாதம் 28–ஆம் தேதி வைகுண்டம் பிள்ளை என்பவன் மூலம் மற்றொரு கடிதம் அனுப்பினான். அந்த இரு கடிதங்களுக்கும் பதில் கிடைக்கவில்லை. மீண்டும் ஜாக்சன் மே மாதம் 23-ஆம் தேதி ஒரு கடிதம் எழுதி, முதலிரண்டு கடிதங்களுக்கும் பதிலும், பணமும் அனுப்பாத குற்றத்திற்குப் பதில் கூறப் பதினைந்து நாட்களில் இராமநாதபுரம் வரவேண்டுமென்று கட்டளையிட்டிருந்தான். கடிதத்தை அலட்சியம் செய்தால் பாளையம் பறிமுதல் செய்யப்படும் என்றும் எழுதி இருந்தான்.

அக்கடிதங்களொன்றாலும் கலெக்டர் எதிர்பார்த்த பலன் கிட்டவில்லை ; பணமும் கிடைக்கவில்லை; பதிலும் கிடைக்கவில்லை; கட்டபொம்முவும்இராமநாதபுரத்துக்கு வரவில்லை ; கட்டபொம்முவிடமிருந்து கடிதம் வாராததால், ஏமாற்றம் அடைந்த கலெக்டர், ரெவின்யு போர்டுக்குப் பல கடிதங்கள் எழுதினான். பாஞ்சாலங்குறிச்சி

யான் தமக்கு வரி கட்டாதிருந்ததோடு, தங்களுக்குரிய கிராமங்களிலும் வரி வசூல் செய்து கொள்ளுகிறான் என்றும், பாஞ்சாலங்குறிச்சியின் வரி பாக்கிக்கே யன்றி கம்பெனியாரிடம் முன்பணம் பெற்றுத் தறி நெய்பவர்களுக்குக் கொடுத்த தொகைக்குக்கூட ஆபத்து வரும் என்றும் எழுதினான். பாளையக்காரரின் உத்தரவுக்குக் கீழ்ப்படியாவிட்டால் தங்கள் சொத்துக்கள் கொள்ளை போய்விடும் என்று நெசவாளர்கள் அஞ்சுவதால் வாணிகத் துறையிலும் கம்பெனிக்கு அதிக நஷ்டம் ஏற்படக்கூடும் என்றும் கடிதம் எழுதினான். பாஞ்சாலங்குறிச்சியில் இருக்கும்வரைக் கட்டபொம்முவை அடக்க முடியாதென்றும், மேலும் வரி கொடாமலிருந்தால் அவனுடைய பாளையத்தைப் பறித்து அவனது தாயத்தாருள் ஒருவருக்குக் கொடுக்கப்படும் என்று அச்சுறுத்த வேண்டும் என்றும் தன் விண்ணப்பத்தில் கேட்டுக்கொண்டிருந்தான். மேலும், கட்டபொம்முவை அடக்கப் பாளையங்கோட்டையிலிருந்த **மேஜர் ஸ்மார்ட்**[1] என்றவர் தலைமையில் ஒரு படையை அனுப்புவிக்க வேண்டுமென்றும் தெரிவித்துக்கொண்டான். ஆனால், கம்பெனியார் அதற்கெல்லாம் செவிசாய்க்கவில்லை. கலெக்டர் அனுப்பிய கடிதங்களில் குறிக்கப்பட்டிருந்த குற்றங்கள் உண்மையில் கட்டபொம்முவைச் சேர்ந்தவையா என்பதை அறிந்து, அதன்பின் தக்க முறையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள ஜாக்சனுக்கு அதிகாரம் கொடுக்கத் தீர்மானித்தனர்.

---

## 9. ஜாக்சனின் சூழ்ச்சி

ரெவின்யு போர்டாரின் முடிவுப்படி 18-7-1798-ல் கலெக்டர் ஜாக்சன், கட்டபொம்மு தன்னைத் தனது கச்சேரியில் செப்டம்பர் மாதம் ஐந்தாம் தேதிக்குள் நேரே

1. Major Smart.

வந்து காணவேண்டும் என்றும், இல்லையேல் பாஞ்சாலங் குறிச்சியின் மீது படையெடுக்க நேருமென்றும் ஓர் கடிதம் எழுதி அதனைத் துருவசன், மதாரன் என்ற இருவீரர் வசப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பினான். இக்கடிதத்தைக் கண்ட கட்டபொம்மு, "இன்னும் ஒரு வாரத்தில் வந்து காண்பதாகச் சொல்லு," எனக் கூறி வீரரை அனுப்பிவிட்டுத் தானாபதி, ஊமைத்துரை முதலியவர்களைக் கலந்தாலோசித்தார். "சுற்றிலுமிருந்த பாளையக்காரர் அனைவரும் ஆங்கிலேயருக்கு அடிபணிந்துவிட்டபடியால், நாம் மட்டும் எதிர்த்து நிற்பது தக்கதல்ல," என்று கூறிய ஊமைத்துரையின் மொழிக்கிணங்கி ஜாக்சனை நேரில் காண்பதன் மூலம் ஓரளவுபகையைக் குறைக்கலாம் என்று கட்டபொம்மு நம்பினார்.

கடிதம் கொண்டு போனவர்கள் "இன்னும் ஒரு வாரத்துக்குள் கட்டபொம்மு தங்களைவந்து சந்திப்பதாக இருக்கிறார்," என்று கூறக் கேட்ட ஜாக்சன் ஓரளவு மகிழ்ந்தானாயினும், இக் கடிதத்திற்கும் காலதாமதமா?" என்று கருவினான். ஆகஸ்டு மாதமே ஜாக்சனைக் காண ஊமைத்துரை, துரைசிங்கம், தானாபதி முதலிய தளபதிகளும், 4000 வீரர்களும் சூழ வீரபாண்டியர் திருநெல்வேலிக்குப் புறப்பட்டார். கலெக்டர் ஜாக்சன் வீரபாண்டியரை வம்புக்கிழுக்க வேண்டும் என்ற வன்னெஞ்சம் கொண்டவனாதலால், வீரபாண்டியருக்குப் பேட்டி கொடுக்காமல் திருப்பி அனுப்பி அவமானம் செய்யவேண்டும் என்று கருதினான். அதுவேயன்றிப் பொம்முவின் ஊர் அருகே இருப்பதால் தனக்கு ஆபத்து நேர்ந்தாலும் நேரலாம் என்று கருதி அவர் திருநெல்வேலிக்கு வருவதை யறிந்து குற்றாலத்திற்குச் சென்றுவிட்டான். மன்னர் கட்டபொம்மு திருநெல்வேலியை அடைந்தார். அங்கு ஜாக்சன் இல்லை என்றும், அவசியமான ஒரு காரணம் பற்றிக் குற்றாலத்திற்குப் போயிருப்பதாகவும் கச்சேரியில் இருந்தவர்கள்

கூறினார்கள். செய்தி யறிந்த வீரபாண்டியர் "என்னைக் காண வரும்படி சொல்லிவிட்டு என்ன அவசரம் கருதிப் போனாரோ? என்னைக் காண்பதைவிட வேறு அவசியமான காரியமும் உண்டா?" என்று இகழ்ச்சி தோன்றக் கூறியதோடு, குற்றாலம் சென்று ஜாக்சனைக் கண்டுவருவது என்று புறப்பட்டார்.

மேலும், கட்டபொம்மு குற்றாலத்திற்கும் தன்னைத் தொடர்ந்து வருவதையறிந்த ஜாக்சன், தனது காரியக்காரனான ராகவையா, என்பவனிடம் "நாம் நம் படைகளைத் திரட்டிக் கட்டபொம்முவை இங்கே சிறைப் பிடித்து விடுவோமா?" என்று யோசனை கேட்டான். அதுகேட்ட ராகவையா, "அஞ்சா நெஞ்சும் அருந்திறலுமுடைய கட்டபொம்முவைச் சிறை செய்வது நம்மால் முடியாத காரியம். அவரது கோபத்தைக் கிளறித் தொல்லையைப் பெருக்கிக் கொள்வது அறிவுடைமையல்ல," என்று கூறினான். ஜாக்சன் உடனே சொக்கம்பட்டிக்கு விரைந்து போய் விட்டான். குற்றாலத்தை அடைந்தகட்டபொம்மு, ஜாக்சன் அங்கும் இல்லை என்பதையும் சொக்கம்பட்டிக்குப் போய் விட்டானென்பதையும் கேள்விப்பட்டார்.

அதுகண்ட தானாபதி ஊமைத்துரை முதலியவர் "இடம்விட்டு இடம் மாறும் ஜாக்சனின் கருத்துச்சதித் திட்டத்தின் அடிப்படையைக் கொண்டு இருக்கிறது. ஆகையால் இவ்வெள்ளை மனிதனை நாம் பின்பற்றிப் போகலாகாது. இவன் நம்மை அவமானப்படுத்தி அடிமை கொள்ள முயலுகிறான். நாம் இனித் திரும்புவதே சரியானது," என்று உரைத்தனர். வீரபாண்டியர் மட்டும் இதற்கு இணங்கவில்லை. "முன் வைத்த காலைப் பின் வைப்பதா? நாம் எந்தக் காரியத்துக்காகப் புறப்பட்டோமோ அந்தக் காரியத்தை முடிக்காமல் வீடு திரும்புவது வீர மரபுக்கு அழகல்ல. நீங்களை

வரும் பாஞ்சாலங்குறிச்சிக்குத் திரும்புங்கள் : நான் மட்டும் தனியே சென்று கலெக்டர் ஜாக்சனைக் கண்டு வருகிறேன்,'' என்று கூறினார். ஜாக்சனின் சதிச் செயலையும், வீரபாண்டியனின் நெஞ்சுறுதியையுங் கண்டு தானாபதி, ஊமைத்துரை முதலியவர் தடுத்து உரைக்கவும் அஞ்சினர். "தாங்கள் தனியே செல்வது அவ்வெள்ளையன் சூழ்ச்சிக்கு வெற்றியே தரும். நாங்களும் உடன் வருகிறோம்; நடப்பது நடக்கட்டும்,'' என்று கூறி சொக்கம்பட்டிக்குப் புறப்பட்டனர். வீரபாண்டியர் தம் படைகள் சூழத் தன்னை மேலும் தொடர்ந்து வருகிறார் என்பதை அறிந்த ஜாக்சன் நடுங்கினான். மேலும் சொக்கம்பட்டியிலிருந்து சிவகிரி, ஸ்ரீ வில்லிபுத்தூர், பேரையூர், பள்ளிமடை, கமுதி முதலிய பல ஊர்களுக்கும் இடமாற்றம் செய்துகொண்டே ஜாக்சன் இறுதியாக இராமநாதபுரத்தை அடைந்தான்.

வீரபாண்டியர் தன்னைத் தொடர்ந்து வருவதை அறிந்து தன்னைக் கொன்று முடிப்பதற்கே வருவதாகத் தீர்மானம்செய்து, சேதுபதி மன்னனுக்குச் சொந்தமானதும், அவரது அரண்மனைக்கு அருகிலுள்ளதுமான **இராமலிங்க விலாசம்** என்னும் மாளிகையில் பெரும் பாதுகாப்புப்படையொன்றை ஏற்பாடு செய்துகொண்டு ஜாக்சன் தங்கினான். மாளிகையின் உட்புறங்களிலும் மேன்மாடியிலும் ஆயுதம் தாங்கிய ஆயிரக்கணக்கான வீரர் நிறைந்திருந்தனர். வீரபாண்டியர் பாஞ்சாலங்குறிச்சியை விட்டு நீண்ட தூரம் வந்துவிட்டமையால் படை பலங்கொண்டு வெற்றிகொள்வதற்கு இராமநாதபுரமே ஏற்ற இடம் என்று ஜாக்சன் கருதினான். பரிவாரங்களுடன் பேட்டி காண அநுமதியளிக்கப்படமாட்டாது என்றும், பரிவாரங்களையெல்லாம் நிறுத்திவிட்டுத் தனியே மாளிகையின் மேல்மாடிக்கு வந்தால்தான் தன்னைக் காணமுடியும் என்றும் செய்தி விடுத்தான்.

முதல் நாளிரவே கோபாலையா என்பவன் "ஜாக்சன் சதித்திட்டத்தில் இருக்கிறான்; ஆதலின் எச்சரிக்கையாக நடந்துகொள்ளுங்கள்," என்று கூறியிருந்ததும் வீரபாண்டியருக்கு நினைவு வந்தது. இங்ஙனம் தனித்து வந்தால்தான் பேட்டி கொடுக்கமுடியும் என்று கூறிய செய்தியிலுள்ள சூதை அறிந்தும் கட்டபொம்மு ஜாக்சனைக் காண்பதற்குத் தயங்கவில்லை. ஆனால், தானாபதி, ஊமைத்துரை முதலியவர் வீரபாண்டியரைத் தனியே அனுப்ப அஞ்சினர்.

வீரபாண்டியனைத் தனியே விட மனமின்றி உடன் தொடர்ந்த ஊமைத்துரை முதலியவர்களை வாயில் காத்த இரண்டு படை வீரர்கள் "துரை தங்களைமட்டும்தான் வரச் சொல்லுகிறார் என்று கூறி வீரபாண்டியரை மட்டும் அனுமதித்து மற்றவரை நிறுத்திவிட்டார்கள். ஆயினும் வீரபாண்டியர் தன்னந்தனியே நெஞ்சம் அஞ்சாமல் மேல்மாடி சென்றார். சிறிது நேரங் கழிந்தபின் கட்டபொம்முவைத் தனியே விட்டிருக்க மனம் ஒப்பாத ஊமைத்துரையும், தானாபதியும் மேல் மாடிக்குப் போக முற்பட்டனர். அதுகண்ட வீரர் தடுக்கவே மிடுக்காகக் கடுத்துத் தடுத்து நின்ற காவலரைத் தள்ளிவிட்டு மேல்மாடி சென்றுவிட்டனர். காவலர் செய்வகை அறியாது விழித்தனர்.

இப் பேட்டி 1798–ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பத்தாம் தேதி காலை பத்துமணிக்கு நிகழ்ந்தது. வீரபாண்டியரைக் கண்ட வெள்ளையன் அவரது வீரத்தைக் கண்டு வியந்தானாயினும், மன்னர்க்குரிய மரியாதைசெய்யாது, அவர் மீது தான் தயாரித்திருந்த குற்றச் சாட்டுகளை அடுக்கத்தொடங்கினான். "கிழக்கிந்தியக் கம்பெனிக்கு வரி கொடாது மறுத்து வருவது ஒரு குற்றம்; ஆங்கிலேயருக்கு அடிவருடி வாழும் எட்டயபுரத்துப் பாளையக்காரனுக்கு இணங்கி நடவாதது மற்றொரு குற்றம்; கடிதங்கள் பல எழுதியும் அதனைக் கவனிக்காதது

பின்னும் குற்றம்; வெள்ளேயரிடம் அநுமதி பெருமல்வரி வாங்கியது பெருங்குற்றம். ஆற்றூர், ஆறுமுக மங்கலம் என்ற கம்பெனியின் கிராமங்களைத் தம்பாளையத்தோடு சேர்த்துக்கொண்டதோடன்றி, மற்றப் பாளையக்காரர்களை மிரட்டி வருவதும், கம்பெனிக்கு வரி கொடாதிருக்கும்படி தூண்டுவதும் மன்னிக்க முடியாத குற்றம். இவற்றிற்கு நீர் கூறும் பதில் என்ன? எம்மை எல்லாப் பாளையக்காரரும் வந்து கண்டு போக நீர்மட்டும் வாராதிருந்ததேன்? இதனுல் கம்பெனியை அவமானப்படுத்துவதே உமது நோக்கம் என்பது விளங்குகின்றதன்ருே?" என்று கூறிக் குற்றங்களை அடுக்கினுன்.

"கிழக்கிந்தியக் கம்பெனியாராகிய நாங்கள் நவாபுக்குக் கொடுத்த கடனுக்காக நாடாளும் உரிமை பெற்றுவிட்டோம். இனி அரைக்கணமும் தாமதமின்றி நீர் எமக்குத் திறை செலுத்த வேண்டும்," என்று கட்டளை இட்டான். இதுகேட்ட வீரபாண்டியர் உடனே "அன்னியருக்கு அடங்கி வாழும் அடிமை வாழ்வு எங்கள் தென்னுட்டு மரபுக்கு இழுக்கு; வரி கொடுக்கும் வழக்கம் எமது வமிசத்திற்கே ஒவ்வாதது. எங்களைத் தேடி வருபவர்களை நாங்கள் மதித்து உபசரிப்போமேயன்றி, பிறரைத் தேடிப் போய்ப் பேட்டி காணும் வழக்கம் எங்கள் பாளையத்தாருக்கு இல்லை," என்று அச்சமின்றிக் கூறினுர். உடனே ஜாக்சன் கம்பெனியின் ஆணை என்று கூறித் தான் கட்டபொம்முவுக்கு எழுதிய கடிதங்களைத் தன்னிடமிருந்த மொழிபெயர்ப்பாளனைப் படித்துக்காட்டும்படி உத்தரவிட்டான். அங்ஙனம் அவன் படித்தவைகளில் மே மாதம் 23–ஆம் தேதி எழுதப்பட்டதாகஇருந்த கடிதம் ஒன்றில் பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரர் தம்மை நேரில் வந்து காண வேண்டுமென்றும் கடிதங் கொண்டு வருபவனுக்கு அவரைக் கையோடு அழைத்து வருவதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும், அக் கடிதத்திற்குப் பணியாமல் இருந்

தால் பாளையம் பறிமுதல் செய்யப்படும் என்றும் கண்டிருந்தது. அக் கடிதத்தின் சொற்களைக் கேட்டவுடன் கட்டபொம்முவின் கண்கள் சிவந்தன; மீசை துடித்தது. வீரச் சிரிப்போடு "கட்டபொம்முவுக்குக்கூட இவ்விதம் கடிதம் எழுத ஒருவனுக்குத் தைரியம் உண்டா?" என்று கூறிய வண்ணம் மீசையின்மேல் கையை வைத்தார். இதைக் கண்டவுடன் கலெக்டர் ஜாக்சன், 'அப்படியானால், உம்மைச் சிறைப் பிடித்து இருக்கிறேன். நீர் இக்கட்டடத்தை விட்டு வெளியே கால் வைக்கலாகாது. இது கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆணை," என்றான்.

"நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம் என்று முழங்கும் தென்னாட்டு மன்னன் வீரபாண்டியன், நாடோடிகளாய் வந்து நாடாளப் புகுந்த வெள்ளையருக்கு அஞ்சுவானா? பாஞ்சாலங்குறிச்சிப் பாளையப்பட்டு மன்னன் பரதேசிகளிடம் சிறைப்படுவதா? அது மானங்கெட்ட செய்கை," என்று கூறிக்கொண்டே கட்டடத்தை விட்டு வெளியேற முயன்றார்.

இதற்குள் ஜாக்சனது சதித் திட்டத்தின்படி மாளிகைக்குள் மறைந்திருந்த மற்றவர்கள் மன்னன்மீது பாய்ந்தார்கள். கட்டபொம்மு வாட்போரில் வல்லவர் என்பதை அவர் வாள் மெய்ப்பித்தது. கண நேரத்தில் இருவர் அவரது வாளுக்கு இரையாயினர். எஞ்சிய மல்லர் எடுத்தனர் ஓட்டம். கிழக்கிந்தியக் கம்பெனியின் துணைத் தளபதியாகிய லெப்டினன்ட் கிளார்க்[1] என்பவன் வீரபாண்டியரை எதிர்த்துத் தடுத்தான். வீரபாண்டியருக்கும் தளபதி கிளார்க்குக்கும் வாட்போர் நடந்தது. வெற்றியேயன்றி வேறொன்றை யறியாத வீரபாண்டியரது வாளுக்கு வெள்ளையன் இரையானான். இங்ஙனம் உள்ளே குழப்பம் நிகழ்ந்ததையறிந்த

---

1, Lieutenant Clarke

பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் இராமலிங்க விலாசத்திற்குள் நுழைந்து விட்டார்கள். தளபதி கிளார்க் இறந்தவுடன் துப்பாக்கிகள் சுடப்பட்டன. வீரத்தையே உயிராக மதித்த பாஞ்சாலங் குறிச்சிப் படைக்குமுன் வெள்ளையரின் கூலிப்படை நிற்க முடியவில்லை. வாளும், வேலும், வல்லையங்களும் இராமலிங்க விலாசத்திற்குள் நுழைந்து கலக்கிவிட்டன. ஊமைத்துரை, வெள்ளையத் தேவன், தானுபதி முதலியவருடைய வாள்கள் வீரர்களின் உயிரைக் குடித்தன. பின்னுளில் வெள்ளையத் தேவன் என்ற பெயரைக் கேட்டவுடன் ஆங்கிலேயர் அலறியோடும் அளவுக்கு வெள்ளையனது வீரத்தை விளக்கியது இப்போரேயாம். இப்போரில் வெள்ளையத் தேவனது ஆற்றலைக் கண்டு வியந்து பாண்டியர் அவனுக்கு "பகதூர்" என்ற பட்டத்தைத் தந்தார். மக்கள் அவனை "பாதர் வெள்ளையத் தேவன்" என்பார்கள். "பகதூர்" என்பது "பாதர்" என மருவியது போலும்.

இங்ஙனம் நிகழ்ந்த போரில் வீர பாண்டியன் முதலிய பலரும் இராமலிங்க விலாசத்தை விட்டு வெளியேறினர். ஆனுல், அவருடன் வந்திருந்த அமைச்சர் தானுபதிப்பிள்ளை மட்டும் உள்ளே குழப்பத்தில் சிக்கிக்கொண்டார். வீரபாண்டியக் கட்டபொம்மு இதனை அறிந்துகொள்ளவில்லை; நெடுந்தூரம் சென்ற பின்னரே நினைவு வந்தது. மீண்டும் இராமலிங்க விலாசம் திரும்பித் தானுபதியை மீட்டு வருவது என்று முடிவு செய்தார் பாண்டியர். ஆனுல், ஊமைத்துரை முதலியவர் "இதற்குள் அவர் வெள்ளையர் கையில் சிக்கி உயிரிழந்திருப்பது நிச்சயம். மீண்டும் செல்வது சரியல்ல" என்றனர். முதலில் அவரது யோசனையை மதியாததால் நேர்ந்த அவதியை நினைந்து, மீட்க வேறு வழி என்ன செய்யலாம் என்று எண்ணிய வண்ணம் வீரபாண்டியர் பாஞ்சாலங்குறி

சியை அடைந்தார். குழப்பத்தில் அவர்கள் விட்டுச் சென்ற பல்லக்கு முதலிய பல பொருள்களைக் கலெக்டர் ஜாக்சன் ஏலத்தில் விற்றுவிட்டான்.

இந்த நிகழ்ச்சி நடந்த இரு தினங்களில் தூத்துக்குடியில் இருந்த டேவிஸன் என்ற ஆங்கில வணிக நண்பருக்குக் கட்டபொம்மு கடிதம் எழுதினார். வீர பாண்டியர் மீது அன்புள்ள டேவிஸனும் உடனடியாகத் தம் மனைவியோடு பாஞ்சாலங்குறிச்சி வந்து லட்சுமிவிலாசம் என்ற மாளிகையில் கட்டபொம்முவைக் கண்டார். கட்டபொம்மு ஜாக்ஸனால் தமக்கு நேர்ந்த தொல்லைகளை எல்லாம் எடுத்துரைத்து, மேலும் தமக்கு ஜாக்சனால் தொல்லைகள் நேரக்கூடும் என்பதையும் கூறினார். டேவிஸன் ஜாக்சனது விபரீதப் போக்கைக் கண்டு மனம் வருந்தியதோடு, பாளையப்பட்டாரின் மதிப்பு, மரியாதைகளுக்கு மாறாக ஜாக்சன் நடந்துகொள்வதையும், அவனது ஆட்சியால் தென்னாட்டவரின் பகை மூளுமேயன்றி, உறவு கைவராதென்றும் கம்பெனிக்குக் கடிதம் எழுதினார். மேலும், வீர பாண்டியருக்கு ஆறுதல் மொழிகள் கூறிச் சென்றார். ஜாக்சன் இராமநாதபுரத்தில் தன்னிடம் சிக்கிய தானாபதிப் பிள்ளையைக் கைகளுக்கு விலங்கிட்டுச் சிறைப் படுத்தினான்.

பொறுப்பற்ற முறையில் நடந்துகொண்ட தன் குற்றத்தை மறைப்பதற்காக ஜாக்சன் கம்பெனியாருக்கு "பாஞ்சாலங்குறிச்சித் தலைவனான வீர பாண்டியக் கட்டபொம்மு என்னைக் கண்டு பேச விரும்பினான்; நானும் சம்மதித்தேன்; அவன் தனது தம்பி ஊமைத்துரை, தானாபதிப் பிள்ளை மற்றும் படை வீரர் சூழ என்னைப் பேட்டி கண்டான். அதே நேரத்தில் நான் அறியாதவாறு நாலாயிரம் படை வீரர்களை மாளிகையைச் சுற்றி மறைத்து வைத்திருந்தான். பேட்டியின் போது கம்பெனிக்கு வரி செலுத்த வேண்டும் என்று நயமுடன் உரைத்தேன். பேச்சுக்கிடையில் என்னை அவ

மதித்து வெளியேறியதோடு, தடுத்து நின்ற தளபதி கிளார்க்கையும் குத்திக் கொன்றுவிட்டான். இதனால் ஏற்பட்ட கலகத்தில் இருதரப்பிலும் பலர் மாண்டு விட்டனர். குழப்பத்தில் வீர பாண்டியன் வெளியேறி விட்டான். அவனது அமைச்சன் தானுபதியை மட்டும் சிறை செய்துவிட்டேன். தென்னாட்டு மன்னன் கட்டபொம்முவை அடக்கி ஒடுக்கி அவன் ஆட்சியைப் பறிக்காத வரையில் தமிழகத்தில் கம்பெனியார் ஆதிக்கம் செலுத்துவது முடியாத காரியம். வீர பாண்டியன் ஒருபோதும் பணியமாட்டான். இங்குள்ள படை பலம் போதாது; உடனடியாக பீரங்கிப் படைகளையும், குதிரைப்பட்டாளத்தையும் இங்கு அனுப்பிவைக்கவும்," என்று வேண்டுகோள் விட்டிருந்தான். ஜாக்சனது கடிதத்தைக் கண்ட கம்பெனித் தலைவர்கள் முதலில் கலங்கினர்; குமரி முதல் இமயம் வரை ஆதிக்கம் செய்ய வகுத்துள்ள திட்டம் வீர பாண்டியனால் வீணாகி விடுமோ என்றஞ்சினர். தானுபதியை அழைத்துக்கொண்டு நேரில் வருமாறு ஜாக்சனுக்குக் கடிதம் அனுப்பினர். இதற்குள் டேவிஸன் கம்பெனியாருக்கு எழுதிய கடிதமும் கிடைத்தது. டேவிஸனது கடிதத்தில் இராமநாதபுரம் கலகத்திற்கு ஜாக்சனது முரட்டுக் குணமே காரணம் என்றும், இதனால் தென்னாட்டாருக்கும் ஆங்கிலேயர்க்கும் பெரும்போர் மூளுவது உறுதி என்றும் கண்டிருந்தது. ஜாக்சன் தன்னால கூடுமானவரைப் பாஞ்சாலங்குறிச்சியான் மீது பழியைத் திரட்டிக்கொண்டு தானுபதிப் பிள்ளையுடன் திருச்சி வந்தான். கம்பெனியார் இரு தரப்பினரையும் தனித் தனியே விசாரித்தனர். டேவிஸனது கடிதமும் தானுபதியின் சொல்வன்மையும் ஆங்கிலேயரது சூழ்ச்சியும் கூடித் தானுபதியைச் சிறை நீக்கியதோடு ஜாக்சனது கலெக்டர் பதவியையும் பறித்தன.

இங்ஙனம் கம்பெனியார் தானுபதியை விடுதலை செய்ததோடு, தானுபதியிடம் பாஞ்சாலங்குறிச்சிக்

கட்டபொம்முவைத் திருச்சிக்கு அழைத்து வரும்படி கூறினார்கள். தானுபதியும் பாஞ்சாலங்குறிச்சி சென்று நிகழ்ந்தவைகளை மன்னருக்குக் கூறித் "தங்களது பேட்டியைக் கம்பெனியார் விரும்புகின்றனர்," என்ற செய்தியைக் கூறி நின்றார். முதலில் ஊமைத்துரை முதலியவர் "இது ஆங்கிலேயரது சூழ்ச்சிகளுள் ஒன்றோ?" என ஐயுற்றனர். தானுபதியின் உரைகள் வெள்ளையர்கள் காண விரும்புவது உறவு கொண்டாடுவதற்கேயென்பதை உறுதிப்படுத்தியதால், தம் பரிவாரம் சூழத் திருச்சியைச் சென்றடைந்தார் கட்டபொம்மு.

ஆங்கிலக் கம்பெனியார் இவருக்குத் தக்க மரியாதை அளித்து வரவேற்று உபசரித்ததோடு விருந்து செய்து மகிழ்ந்தனர். வீரபாண்டியக் கட்டபொம்மு குதிரை ஏற்றத்தில் வல்லவர் என்பதைக் கேள்வியுற்றிருந்த வெள்ளையர் அவருக்குப் பல குதிரைகளை ஈந்து, அவரது குதிரையேற்றங் கண்டு மகிழ்ந்தனர். அதன்பின் கம்பெனியார் அவருக்கு ஏழு குதிரைகளையும், ஆறாயிரம் ரூபாய் விலைமதிப்புள்ள முத்துமாலை ஒன்றையும், கம்பெனியாரின் அடையாளம் இடப்பெற்ற வாள் ஒன்றையும் தந்தத்தினால் செய்த பல்லக்கு ஒன்றையும் கொடுத்ததோடு, "துரைகள் சூடாமணி" என்ற பட்டத்தையும் சூட்டி மகிழ்ந்தனர். அதன்பின் பாஞ்சாலங்குறிச்சியாரைத் தென்னாட்டு வரி வசூலிப்புக்குப் பாதுகாப்பாளராக இருந்து, கம்பெனிக்கு உதவியளிக்கும்படி வேண்டிக்கொண்டனர். கட்டபொம்முவும் மனம் மகிழ்ந்து "என்னால் ஆனதை கம்பெனிக்கு என்றும் செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன்," என்று கூறி விடை பெற்றுத் தம் நாடடைந்தார்.

இங்ஙனம் ஆங்கிலேயர் கட்டபொம்முவுக்குச் சிறப்புகள் செய்தது, அவர் வலிமையுடையவராதலால்

எதிர்த்துப் போரிடாமல் அடுத்து வசப்படுத்துவதற்கே யாம். அது கண்ட பாளையப்பட்டாரனைவரும் வியப்பும், பொருமையும் கொண்டனர்.

---

## 10. லூஷிங்டன்

இதற்குப் பின் எஸ்.லூஷிங்டன்1 என்ற வெள்ளையன் தென்னாட்டுக்குக் கலெக்டராக வந்தான். வந்தவுடன் எப்பொழுதும் போலவே எட்டப்பர் முதலானோர் இச்சகம் பேசித் தம்மை நல்லவராகக் காட்டிக் கொண்டதோடு கட்டபொம்மனைப்பற்றிப் பழி தூற்றலும் செய்தனர். லூஷிங்டன் 1799 மார்ச்சு மாதம் 16–ஆம் தேதி வீரபாண்டியருக்கு ஒருகடிதம் எழுதினான். இராமநாதபுரம் கலகத்தில் கொலையுண்ட தளபதி கிளார்க்குத் துரையின் குடும்பத்திற்கு நஷ்டஈடு கொடுக்கவேண்டும் என்றும், மேலும் பாஞ்சாலங்குறிச்சி சம்பந்தமாகப் பேச வேண்டியிருப்பதால் வரிப் பணத்துடன் தாமதமின்றிப் பாளையங்கோட்டை வரவேண்டுமென்றும் அக்கடிதத்திற் குறிப்பிடப் பெற்றிருந்தன. கடிதம் கண்ட வீரபாண்டியர் பாஞ்சாலங்குறிச்சியெங்கும் மழையின்மையால் பஞ்சம் ஏற்பட்டுவிட்டதென்றும், மக்கள் நிலங்களைத் தரிசாகப் போட்டுவிட்டு வெளியேறி விட்டனர் என்றும், குடிகள் சாகுபடி செய்யத் தொடங்கியவுடன் வரியைச் செலுத்தி விடுவதாகவும், இராமநாதபுரத்தில் நிகழ்ந்த குழப்பத்தின் போது தமது பல்லக்கு முதலிய விருதுகளைக் கம்பெனி அதிகாரிகள் அபகரித்துக் கொண்டாரென்றும், அவைகளைத் திரும்பவும் தமக்கு அளிக்க வேண்டுமென்றும், மேலும் சார்மகால் பகுதியைச் சார்ந்த ஊர்களில் நாடு காவல் வரியை வசூலித்துக்கொள்ளக் கம்பெனியார் தம்மை அநுமதிக்க வேண்டுமென்றும் கலெக்டருக்குக் கடிதம் போக்கினர்.

1. S. Lushington

இக் கடிதம் கண்ட லூஷிங்டன் "கட்டபொம்மு தவணை கேட்பது வரி செலுத்துவதற்கன்று; கம்பெனியை எதிர்த்துக் கலகம் செய்யப் பலம் திரட்டுவதற்காகவே தவணை கேட்கிருன்," என்று கமபெனிக்குக் கடிதம் எழுதினன்.

இந்நிலையில் கம்பெனிக்கு எதிராக இராமநாதபுரத்தில் ஒரு பெரிய கலகம் மூண்டது. இக் கலகத்திற்குக் காரணம் இராமநாதபுரம் பாளையப்பட்டாராகிய இராமலிங்க சேதுபதியே எனக் கருதிய கம்பெனியார் இராமநாதபுரத்தைத் தங்கள் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்ததோடு இராமலிங்க சேதுபதியைச் சென்னைக்கு அனுப்பிச் சிறை செய்துவிட்டனர். இதனல் இராமநாதபுரமும், மற்றும் பல பாளையங்களும் ஆங்கில ஆதிக்கத்தை எதிர்த்துப் பெருங்கலகம் செய்யத் தொடங்கின.

இதற்கிடையில் தானபதிப் பிள்ளை ஒரு தவறு செய்துவிட்டார். "குன்றி னனையாரும் குன்றுவர் குன்றுவ, குன்றி யனையசெயின்" என்ற மூதுரைக்கேற்ப, தானபதி செய்த சிறு குற்றமே வெள்ளையரின் வெறுப்பு கட்டபொம்முவின்மீது திரும்பக் காரணமாக இருந்த தென்னலாம். இராமநாதபுரம் கலகத்தில் சிறைப்பட்ட தானபதிப் பிள்ளை, தாம் தப்பியதற்கும் பாஞ்சாலங் குறிச்சியாருக்கு வெள்ளையர்கள் பெருமைசெய்ததற்கும் காரணம், கட்டபொம்முவை நயம்செய்து வசப்படுத்துவதற்கான ஆங்கிலேயர்கள் திட்டமென்றறியாது, தம் சொல்வன்மையே என்று தவருகக் கருதிவிட்டார். மேலும் வீரபாண்டியர் இவரது சொல்லுக்கு மிகவும் பெருமை கொடுத்து வந்தது தானபதியின் தவருன போக்குக்குத் தூண்டுகோல்போல அமைந்தது. இதனல் யாவரும் தனக்கு நிகரில்லை என்ற இறுமாப்புத் தானபதியிடம் குடிகொண்டது. இந்நிலையில் தானபதி தம் மகன் வெள்ளைச்சாமி என்ற வேலாயுதம் பிள்ளைக்குக் கலியாணம் செய்யக் கருதினர். அதுசமயம் வெள்ளை

யர்கள் உணவுப் பொருள்களை ஒடுக்கும் வகையில், நிரம்பப் பொருள் கொடுத்து நெல்லைச் சூழ்ச்சியாக சேமித்துப் பாளையங்கோட்டை, ஸ்ரீ வைகுண்டம், ஆழ்வார் திருநகரி முதலிய இடங்களில் பாதுகாப்புச் செய்தனர். இக்களஞ்சியங்கட்குப் பெர்க்கட்டு[1] என்ற வெள்ளையன் பாதுகாப்பாளனாக இருந்ததோடு, நெல்லை உயர்ந்த விலைக்கு விற்றுக் கம்பெனிக்கும் பணத்தை அனுப்பி வந்தான். இது நிற்கத் தானாபதியின் மனைவியாகிய முத்துவடிவு கலியாணச் செலவிற்காக நெல் வேண்டுமெனவும், பலகாரத்திற்காகப் பதினாறு கோட்டைப் பச்சை நெல் வேண்டுமெனவும் கணவனிடம் கூறினாள். தமக்குக் குறையாக இருக்கும் நெல்லை நிறைவு செய்து கொள்ளவும், கம்பெனியின் தவறான போக்கைக் கண்டிக்கவுமாகச் சிந்தித்துச் சேனைத் தலைவன் சின்னமாவேரி நாயக்கன் தலைமையில் ஐந்நூறு வீரர்களையும், இருநூறு பொதி மாடுகளையும் அனுப்பி ஸ்ரீ வைகுண்டத்திலிருந்த நெற்களஞ்சியத்தைக் கொள்ளையிடுமாறு ஏவினார். இதனால் பெர்க்கட்டு வீரர்களுக்கும், பாஞ்சாலங்குறிச்சி வீரர்களுக்கும் போர் நிகழ்ந்தது. இதில் களஞ்சியத்தின் தலைமைப் பாதுகாப்பாளனாக இருந்த பாண்டியத் தேவன் கொலையுண்டான். பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் நெல்லை எருதுகளில் ஏற்றிக்கொண்டு விடிவதற்குள் ஓட்டப்பிடாரத்தை அடைந்தார்கள். இங்ஙனம் தானாபதிப் பிள்ளை நெல்லைக் கொள்ளையிட்டது குறித்துப் பெர்க்கட்டுத் துரை கட்டபொம்முவுக்குக் கீழ்வருமாறு 4–6–1799–ல் ஒரு கடிதம் எழுதினான்.

"தங்கள் தானாபதிப் பிள்ளை எங்கள் நெல்லைக் கொள்ளை கொண்டதோடு தலைமைக் காவலனாகிய பாண்டியத் தேவனையும் கொலை செய்துவிட்டான். இது செய்திக்குத் தாங்கள் உடம்பட்டிருக்க மாட்டீர்களென்

---

1. Perkette

பதை உறுதியாக நம்புகிறேன். இங்ஙனம் கொள்ளை யும் கொலையும் செய்த அக்கள்ளனை எம் கைவசப்படுத் துக. இல்லையேல் அவனால் உமது பாளையம் அடியோடு முடிவுற நேரும். மேலும் லூஷிங்டன் எழுதிய கடிதங் களுக்கும் தாங்கள் சரியான முறையில் பதில் விடுக்கா திருப்பது நன்றன்று.'' இதுகண்ட கட்டபொம்மு தானாபதியைக் கடிந்துகொண்டாரென்றாலும், வெள்ளை யரிடம் அவரைக் காட்டிக்கொடுக்கச் சம்மதிக்கவில்லை. தானாபதியும் தாம் கொள்ளையடிக்கவில்லை என்றும் நெல் வாங்கப் போன இடத்தில் நேர்ந்த சச்சரவே பாண்டி யத் தேவன் கொலைக்குக் காரணம் என்றும் கூறிமழுப்பி விட்டார்.

கலெக்டர் லூஷிங்டன் இராமநாதபுரம் முதலிய இடங்களில் புரட்சி நடப்பதற்கும், மற்றும் பல இடங் களில் புரட்சிக்கான அறிகுறிகள் காணுவதற்கும், நெல் கொள்ளை போனதற்கும் ஆதரவாக இருந்தவர் வீர பாண்டியரே எனக் கருதினான். நாடெங்கும் மூளும் கலகங்களைத் தடுப்பதற்குக் கட்டபொம்முவைத் தன் கண் காணிப்பில் வைத்துக்கொள்வதே சரியான வழி என்றும், இல்லையேல் கலகத்தை அடக்க முடியாதென் றும் நம்பினான். ஆகையால், உடனே கமுதியிலிருந்த தனது முகாமுக்கு வந்து, தன்னைச் சந்திக்குமாறு பல முறையும் கட்டபொம்முவுக்குக் கடிதம் எழுதினான். வீரபாண்டியர், இன்று வருகிறேன், நாளை வருகி றேன் என்று கலெக்டரின் அழைப்புக்குச் சாக்குப்போக் குச் சொல்லி அசட்டை செய்து காலம் கடத்தியதோடு கம்பெனிக்கு எதிராகக் கலகம் நடத்திவந்த சிவகங்கை யின் பக்கம் பரிவாரங்களுடன் பயணப்பட்டார். தன் அழைப்பை மதியாமல் கட்டபொம்மு சிவகங்கையின் பக்கம் புறப்பட்ட செய்தியறிந்த லூஷிங்டன் வீரபாண் டியரும் கலகக்காரர்களுடன் கலந்துகொள்வதற்கா கவே போகிறார் என்று கருதினான். சிவகங்கை சென்

றிருந்த வீரபாண்டியருக்கு லூஷிங்டன் உடனடியாகத் தம்மைக் கமுதி முகாமில் சந்திக்க வேண்டுமென் றும், பலமுறை தாம் எழுதிய கடிதங்களை அவமதித்த தோடு பத்துக் கல் தொலையில் வந்திருந்தும் தம்மைவந்து காண வேண்டுமென்ற கருதில்லாதிருந்ததை எடுத்துக் காட்டியும் ஒரு கடிதம் எழுதியனுப்பினான்.

கடிதம் கண்ட வீரபாண்டியர் "உடனே வர வேண்டும்!" என்ன அகந்தை? பரதேசி வெள்ளையன் பாஞ்சாலங்குறிச்சியானைப் பயமுறுத்துவதா?" என்று சினந்ததோடு "இன்று உடல் நலமில்லை; நாளை வருகி றேன்," என்று கூறியனுப்பினான்.

மறுநாள் தன்னைக் காண வரும்போது ஆரவாரங் களோடும் படைகளோடும் வரலாகாதெனவும், முப்பது பேர்களுக்கு மேற்பட்ட பாதுகாப்பாளர்களை வைத்துக் கொள்ளக் கூடாதெனவும் லூஷிங்டன் கட்டபொம்மு வுக்குச் செய்தியனுப்பினான். ஆனால், கட்டபொம்முவோ இக்கட்டளைக் கிணங்காமல் வழக்கப்படி படைகள் புடைசூழ விருதுகளோடு தம்மை அநுமதித்தாலன்றி கலெக்டரைப் பேட்டி காண முடியாதென்று கூறிவிட் டார். இராமநாதபுரத்துக் கலகத்தை அறிந்திருந்த லூஷிங்டன் பேட்டிக்கு அனுமதிக்கவில்லை. வீரபாண்டிய ரும், கலெக்டரைப் பேட்டி காணாது பாஞ்சாலங்குறிச் சிக்குத் திரும்பிவிட்டார். கட்டபொம்முவின் போக்குக் கலெக்டருக்குக் கவலையையும் திகிலையும் கொடுத்தது. வீரபாண்டியனை விட்டுவைத்தால் நிலைமை மோச மாகிவிடும் என்றும், உடனடியாகப் பெரும் படை ஒன்று திரட்டி அனுப்பிவைக்க வேண்டும், என்றும் பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தை அடக்கி ஒடுக்கா விட்டால் கம்பெனி தோல்வி அடைவது உறுதி என் றும் கடிதம் எழுதி, அப்போது சென்னையில் கவர்னராக

இருந்த லார்ட் எட்வர்ட் கிளைவுக்கு[1] அனுப்பினான். இது கண்ட கவர்னர், மேஜர் பானர்மென்[2] தலைமையில் பெரும் படை ஒன்றைத் தென்னாட்டுக்கு அனுப்பியதோடு, கலெக்டர் முதலியவர்களுக்கிருந்த அதிகாரங்கள் அனைத்தையும் பானர்மென்னுக்கே அளித்தார்.

---

## 11. பானர்மென்

எல்லா வகையான அதிகாரங்களையும் பெற்றுத் தென்னாடு புகுந்த பானர்மென், 1799-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பாஞ்சாலங்குறிச்சியின் மீது படை எடுக்கப் போகிறான் என்ற செய்தி ஊரெங்கும் பரவியது. அச்சமயம் தளபதி பானர்மென் தன்னைப் பாளையங்கோட்டையில் வந்து கண்டு பேசுமாறு வீரபாண்டியனுக்கு ஓலை போக்கினான். கடிதம் கண்ட வீரபாண்டியன் பாளையங்கோட்டை சென்றால், பானர்மென் தன்னைச் சிறை பிடிப்பது உறுதி என்று அறிந்துகொண்டு, "இன்று நாள் சரி இல்லை ஆதலால், நல்ல நாள் பார்த்துக் கொண்டு இன்னும் ஒரு வாரத்திற்குள் வருகிறேன்," என்று சொல்லி அனுப்பினான். தூதனை அனுப்பியவுடன் கட்டபொம்மு தமது நண்பராகிய டேவிசன் துரையைக் கண்டு மேல் நடக்க வேண்டியதைக் குறித்து ஆலோசனை கேட்டான். டேவிசன் துரையும் பாளையங்கோட்டை சென்று பானர்மென்னைக் காண்பதே சரியானது என்று யோசனை கூறினார். ஆனால் கட்டபொம்மு அதை ஏற்க மறுத்துவிட்டு **மாப்பிள்ளை வன்னியர்** என்பவரை அழைத்துப் பானர்மென்னிடம் சமரசம் பேசுமாறு அனுப்பிவைத்தார். பானர்மென் மாப்பிள்ளை வன்னியரிடம் சமரசம் பேசாது அவரைச் சிறை செய்துவிட்டான். கட்ட

---

1. Lord Edward Clive. 2. Majar Bannerman.

பொம்மு தமது சூழ்ச்சிக்கிணங்கிப் பாளையங்கோட்டை வரமாட்டாரென்பதை உறுதியாக அறிந்துகொண்ட பானர்மென் உடனடியாகப் பாஞ்சாலங்குறிச்சியின்மீது படையெடுத்துவிட்டான். இங்ஙனம் உடனடியாகப் படையெடுத்தமைக்கு வேறு ஒரு காரணமும் உண்டு. பாஞ்சாலங்குறிச்சியாரின் குலதெய்வமாகிய தேவி ஜக்கம்மாளின் திருவிழாவைக் கொண்டாடுவதற்காக ஊமைத்துரை முதலிய பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் அனைவரும் திருச்செந்தூருக்குப் போயிருந்தபடியால், கோட்டையில் தனித்திருந்த வீரபாண்டியனை எளிதில் சிறைகொள்ளக் கருதினான் பானர்மென்.

பகலில் படையெடுத்தால் பாஞ்சாலங்குறிச்சியார் எச்சரிக்கையாகிவிடுவார் என்று கருதிய பானர்மென் இரவில் தன் படையை நடத்தி விடிவதற்குள் பாஞ்சாலங்குறிச்சி எல்லையை அடைந்துவிட்டான். இப்படையுடன், கேப்டன் ஓரீலீ1, புரூஸ்2, லெப்டினெனன்ட் டல்லாஸ்3, டார்மிக்ஸ்4, பிளாக்5, பிரௌன்6, காலின்ஸ்7 ஆகிய ஆங்கிலத் தளபதிகளும் சென்றார்கள். வீரபாண்டியர், உளவறிவதற்காகப் பாளையங்கோட்டையில் ஏற்கெனவே ஒற்றர்களை அமைத்திருந்தமையால், படையெடுப்புச் செய்தி நள்ளிரவிலேயே கட்டபொம்முவுக்குக் கிடைத்துவிட்டது. கோட்டையின் மீதிருந்த வீரமுரசங்கள் விண்ணதிர முழங்கின. வெளியிடங்களிலிருந்த வீரர்கள் அனைவரும் கோட்டைக்குள் கூடினார்கள். இதற்குள் கம்பெனிப் படையும், கோட்டையை வளைத்துக்கொண்டது. திருச்செந்தூரிலிருந்த ஊமைத்துரை முதலியவர்களும்செய்தியறிந்துஅணியணியாகப் பாஞ்சாலங்குறிச்சி வந்தார்கள். அவர்களைக் கோட்டைக்குள் விடாமல் தடுத்தது வெள்ளையர் படை. எனினும், ஊமைத்துரை முத

1. Captain O'reily. 2. Captain Bruce, 3. Lt. Dollas. 4. Lt. Dormieux. 5. Lt. Blake, 6. Lt. Brown. 7. Lt. Collins.

லியவர், கோட்டைக்குள் நுழைந்து விட்டனர். இதற்குள் பானர்மென், ஆற்றூரில் இருந்த தானுபதிப் பிள்ளையைப் பிடித்து வருமாறு நூறு வீரர்களை அனுப்பினான். ஏற்கெனவே செய்தி அறிந்த தானுபதிப் பிள்ளை கோட்டைக்குள் நுழைந்துகொண்டார். கோட்டையை முற்றுகை செய்த தளபதி பானர்மென் இன்னும் அரை மணி நேரத்தில் தம்மிடம் வீரபாண்டியன் சரணுகதி அடையவேண்டுமென்றும், இல்லையேல் கோட்டையை இடித்துச் சிறை பிடிக்கப் போவதாகவும் இராமலிங்க முதலியார் மூலம் வீரபாண்டியருக்குச் செய்தியனுப்பினான். தூது சென்ற இராமலிங்க முதலியார் வீரபாண்டியர் சரணுகதிக்கு இணங்க மறுத்ததைப் பானர்மென்னுக்குத் தெரிவித்தார். பானர்மென் கோட்டையைத் தாக்கும்படி கட்டளையிட்டான். பீரங்கிகள் தெற்கு வாயிலைத் தாக்கத் துவங்கின. டல்லாஸ் மற்ெருரு படையுடன் வடக்கு வாயிலைத் தாக்கினுன். தெற்குப் புறத்து வாயிலைத் தகர்க்கத் தொடங்கிய படைக்கு லெப்டினன்ட் காலின்ஸ் தலைவனுயிருந்தான்.

பாஞ்சாலங்குறிச்சியின் வீரத் திருவாயில் வெள்ளையரின் குண்டுக்கு ஆற்ருது வீறிட்டுச் சாய்ந்தது. படைகளுடன் காலின்ஸ் கோட்டைக்குள் நுழைந்தான். தமிழ் வீரன் வெள்ளையத் தேவனது வேல், குதிரைமீது வந்த தளபதி காலின்ஸின் மார்பைத் துளைத்து ஊடுருவிச் சென்றது. காலின்ஸ் வீறிட்டலறிச் சாய்ந்து மடிந்தான். இந்நிகழ்ச்சி வெள்ளையருக்குப் பெருத்த நடுக்கத்தைத் தந்தது. கம்பெனிப் படைகளும் வீரபாண்டியன் படைகளும் ஏழுமணி நேரம் வீரப் போரிட்டன. கோட்டை கொலைக்களமாக மாறியது.

ஏழுமணி நேரம் தொடர்ந்து கடும்போர் நடத்தியும் தன் எண்ணம் ஈடேருதது கண்ட பானர்மென் மேலும் பல பீரங்கிகளையும் ஒரு படையையும் அனுப்புமாறு பாளையங் கோட்டைக்கு எழுதிக் கேட்டுக்கொண்

டான். பானர்மென் போரை நிறுத்திக் கோட்டையை விட்டு வீரர்கள் வெளியேருத வண்ணம் பாதுகாப்புச் செய்யத் தொடங்கினன். இதற்கிடையில் வீரபாண்டியரும் தானுபதிப் பிள்ளை முதலியவரும் ஆலோசித்துத் திருச்சியிலிருந்தும் பாளையங் கோட்டையிலிருந்தும் படைகள் வந்தால் எதிர்த்து நிற்பது கடினம் என்றும், எனவே பல பாளையக்காரர்களையும் திரட்டிப் பெரும் போருக்குத் தமிழ்நாட்டைத் தயாராக்குவதே சரியானது என்றும் முடிவு செய்து, இரவு பத்தரை மணிக்குத் தம்பியர், தளபதிகள், தானுபதி முதலியவர் தொடர கட்டபொம்மு கோட்டையை விட்டு வெளியேறிவிட்டார். பொழுது விடிந்ததும் வீரபாண்டியன் எங்ஙனமோ தப்பிவிட்டான் என்பதை அறிந்த பானர்மென் ஆத்திரங் கொண்டான். எனவே வீரபாண்டியனைத் தேடிப்பிடிப்பதற்கு ஆட்களை அனுப்பினன். கட்டபொம்மு வடதிசைச்சென்றிருப்பார் என்று ஊகித்து,வட பாகங்களில் இருந்த பாளையத்தார் அனைவருக்கும் வீரபாண்டியருக்கு யாரும் ஆதரவு அளித்தலாகாதென்றும், அவரைப் பிடித்துத் தருபவருக்குத் தக்க பரிசில்கள் கொடுக்கப்படும் என்றும் கடிதம் அனுப்பினன். கம்பெனிக்கு வழிவழியாக அடிமை செய்து வாழ்வு பெற விரும்பிய எட்டயபுர மன்னனுகிய எட்டப்பன் இக்கடிதம் கண்டதும் வீரபாண்டியனைத் தம்மால் தேடிப் பிடிக்க முடியுமென்றும்; அதற்காக ஒரு படையை அனுப்பிவைக்க வேண்டுமென்றும் கேட்டிருந்தான். அதன்படி பானர்மென்னும் தளபதி டல்லாசின் தலைமையில் ஒரு படையை அனுப்பி வைத்தான்.

வீரபாண்டியன் கோட்டையிலிருந்து தப்பியபின் அவனது தாய், மனைவி முதலிய குடும்பத்தினர் இருபத்திரண்டு பேர்களும் தமக்கு நட்பாயிருந்த டேவிசன் துரையிடம் அடைக்கலம் புகுந்தனர். ஆனல் கம்பெனி

யாரின் பகைக்கு அஞ்சிய டேவிசன் அவர்களைக் கம்பெனியார் வசம் ஒப்புவித்துவிட்டான்.

தமிழகத்தின் வீரப் புதல்வன் வீரபாண்டியன் கோலார்ப்பட்டி பாளையக்காரரான இராஜகோபால நாயக்கர் இல்லத்தில் தங்கியிருப்பதாக எட்டப்பனுக்குச் செய்தி கிடைத்தது. டல்லாசும் எட்டப்பனும் நூற்றுக் கணக்கான வீரர்களுடன் புறப்பட்டனர். நூற்றுக் கணக்கான வீரர்களுடன் எட்டப்பன் தம்மைச் சிறை பிடிக்க வருவதை மேல்மாடியில் நின்று கண்டுகொண்டார் கட்டபொம்மு. தம்பியரும், தானாபதிப் பிள்ளை முதலிய வீரரும் வாளேந்தி வீரப்போர் புரிந்தனர். எட்டப்பன் படைகள் கலங்கி நின்றன. வெள்ளையன் படையும் விலவிலத்தது. இக்கடும் போரில் இருதரப்பிலும் பலர் மாண்டனர். இறுதியில் வீரபாண்டியன், ஊமைத்துரை உள்பட அறுவர் குதிரையேறித் தப்பிவிட்டனர். ஆனால், தானாபதி முதலாக முப்பத்துநான்கு வீரர்கள் பிடிபட்டனர். இவர்கள் சிக்கியது பானர்மென்னுக்கு ஓரளவு மகிழ்ச்சியைத் தந்ததாயினும், வீரபாண்டியன் தப்பியது வருத்தத்தையே கொடுத்தது. இதற்காக எட்டயபுரத்தார் வெள்ளையரிடம் சன்மானங்கள் பெற்றனர். வெள்ளையருக்கு எதிராக வீரபாண்டியனைத் தூண்டியது தானாபதியே என்று கருதிய பானர்மென் அவரது தலையை வெட்டி பாஞ்சாலங்குறிச்சி மக்கள் காண பவனி வருதல் வேண்டும் என்று கட்டளை இட்டான். ஆனால், தண்டனையை நிறைவேற்றுதல் தள்ளி வைக்கப்பட்டது. நாகலாபுரம் பாளையக்காரனான சௌந்தரபாண்டியனையும், வீரபாண்டியருக்கு உடந்தையாக இருந்தான் என்று குற்றம் சுமத்திச் சிறை செய்தான். இவ்விருவரையும் விசாரிப்பதற்காகப் பாளையக்காரரனைவருக்கும் அழைப்பு அனுப்பி அவர்களை வருவித்தான். இங்ஙனம் அழைத்தது மற்றப் பாளையக்காரர்களுக்கு அச்சத்தை உண்டாக்கவும் தாம்

கள் நேர்மையாக நடந்துகொள்வதாகப் பிறர் நினைந்து கொள்ளவேண்டும் என்பதற்குமாம். விசாரணையில் தானுபதிப் பிள்ளை, தாம் கம்பெனிக்கு எதிராகச் சதி செய்தது மெய்யே என்றும், அதற்காகத் தாம் வருத்தம் தெரிவிப்பதாகவும் கூறினர். சௌந்தரபாண்டியன் மட்டும் வருத்தம் தெரிவிக்கவும் மறுத்துவிட்டான். பானர்மென் இவ்விருவருக்கும் தூக்குத் தண்டனை அளித்ததோடு அவர்களுடையபொருள்களைப் பறிமுதல் செய்யுமாறும் கட்டளையிட்டான். கட்டளைப்படி சௌந் தர பாண்டியனை இராமநாதபுரத்தைச் சேர்ந்த கோபால புரத்திலும் தானுபதிப் பிள்ளையை நாகலாபுரத்திலும் தூக்கிலிட்டுக் கொன்றனர். தானுபதிப் பிள்ளையினது தலையை மட்டும் அரிந்துகொண்டு உடலை நாகலாபுரத் தில் எறிந்து நாய் நரிகளுக்கு இரையாகும்படி செய்து தலையைப் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையின் முன் னே ஈட்டி முனையில் மாட்டி நிறுத்தி வைக்கும்படி பானர்மென் கட்டளையிட்டான். இதனுல் தென்னுட்டு மக்கள் வெள்ளையரின் கொடுமையைக் கண்டு நடுங்கினர் கள். இதுவேயன்றி இவ்விருவரின் குடும்பத்தார்களையும் உறவினர்களையும் சிறை செய்தனர். மற்றும் நாகலா புரம் ஜமீன்தார் சாத்தூரப்பப் பிள்ளை, கோலார்பட்டி ஜமீன்தார் சௌந்தரலிங்க நாயக்கர், குளத்தூர் தானு பதி ஆறுமுகம் பிள்ளை, ஏழாயிரம்பண்ணைத் தானுபதி கோமதிநாயகம் பிள்ளை, ஆகிய ஐவரையும் கம்பெனி யார் சிறை செய்தனர். இந் நிகழ்ச்சிகளுக்குப் பின் வீர பாண்டியன் இராஜத் துரோகி என்றும் அவருக்கு அடைக்கலம் கொடுப்பவர் தங்கள் பாளையத்தை இழப் பதோடு தூக்குத் தண்டனையும் அடைவர் என்றும், காட்டிக் கொடுப்பவர் தக்க சன்மானம் பெறுவர் என் றும் நாடெங்கும் செய்தி பரப்பினுன் பானர்மென்.

மேலும், இனிப் பாளையக்காரர்களின் பாதுகாப்பைத் தாமே ஏற்றுக்கொண்டதால் தென்னாட்டவர் யாரும் ஆயுதங்களை வைத்திருக்கவோ தயாரிக்கவோ கூடாது என்றும், அங்ஙனம் வைத்துக் கொள்வது சட்ட விரோதமானதென்றும், ஆயுதங்களைத் தம் வசம் ஒப்புவித்து விட்டு அவற்றிற்குத் தக்க பணத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றும், பாளையப்பட்டு மக்களில் எவரேனும் ஆயுதம் வைத்திருப்பாராயின் அதற்குப் பாளையக்காரரே பொறுப்பாளியாவாரென்றும், இக் கட்டளையை மீறி நடக்கும் குற்றவாளிகள் மரண தண்டனைக் குள்ளாவார்கள் என்றும், இக்கட்டளையைச் செப்புத்தகட்டில் பொறித்து மக்கள் அனைவரும் பார்க்கும் இடங்களில் பாளையக்காரர்கள் வைக்கவேண்டும் என்றும் உத்தரவிட்டான் பானர்மென்.

இது இங்ஙனமாகப் புதுக்கோட்டையைச் சேர்ந்த எல்லையிலுள்ள காடுகளில் கட்டபொம்மு தங்கியிருந்ததாகவும், அங்கு ஒரு பெரும்படைச் சேகரிப்பு நடந்து கொண்டிருப்பதாகவும் விரைவில் அவர்கள் பாஞ்சாலங்குறிச்சிக்கு வர இருப்பதாகவும் பானர்மென்னுக்குச் செய்தி கிடைத்தது. கட்டபொம்மு புதுக்கோட்டையில் இருந்தால், அவரைப் பிடிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று பானர்மென் புதுக்கோட்டைத் தொண்டைமானுக்குக் கடிதம் எழுதினான். இச் செய்தியைக் கேட்ட புதுக்கோட்டைத் தொண்டைமான் பூரிப்படைந்தான். கட்டபொம்மனைக் காட்டிக் கொடுத்துக் கம்பெனியாரின் தயவைப் பெறலாம் என்று அடிமைக் குட்டையில் ஊறிய அவன் மனம் மகிழ்ந்தது. தன் நேரில்லாத் தமிழக வீரரைச் சுயநலத்திற்குச் சூறையாடத் துணிந்தான்; புதுக்கோட்டை முழுவதும் ஒற்றர்களை ஏவித் துப்பறியச் செய்தான் தமிழத் துரோகி தொண்டைமான்.

கட்டபொம்மு புதுக்கோட்டையைச் சேர்ந்த திருக்களர்பூரில் தங்கியிருந்தார். தாமும் தம்பியரும் ஏறிவந்த குதிரைகள் நெடுவழி வந்தமையின் களைப் புற்று வீழ்ந்து இறந்தன. வீரபாண்டியர் தொண்டை மானின் மன நிலை அறியாது தமக்கு இதம் செய்யும் நண்பனாக எண்ணிப் புதுக்கோட்டை சென்று அவனைக் காண எண்ணினார். ஆங்கிலேயனது நற்பேறு வீரபாண் டியரின் மனத்தை மாற்றியது போலும். அவர் புதுக் கோட்டைக்குப் போகும் வழியிலேயே புதுக்கோட்டை மன்னன் ஏவியிருந்த சிப்பாய்களைச் சந்தித்தார். அவ் வீரர்களுக்குத் தலைவனாக இருந்த முத்து வைரவ அம் பலக்காரன் தன் உள்ளத்திலிருந்த கள்ளத்தைக் காட் டாமல் "எங்கள் மன்னர் தங்களைக் கண்டு அழைத்து வரும்படி அனுப்பி வைத்தார். தங்களை வழியிலேயே காண நேர்ந்தது எங்கள் நல்வினைப் பயனே," என்று பல்லைக் காட்டிப் பரிவுடன் கூறினான். வஞ்சமறியாத நெஞ்சராகிய வீரபாண்டிய மன்னர் அவர்களுடன் புறப்பட்டுப் புதுக்கோட்டை அடைந்தார்.

"மானம் சிறிது; வாழ்வு பெரிது," என்றெண் ணிய தொண்டைமான் தளபதி பானர்மென்னுக்கு "வீரபாண்டியனை நாங்கள் காட்டில் தேடிக் கடும்போர் புரிந்து சிறை செய்திருக்கிறோம். உடனே படை யுடன் வந்து கைப்பற்றிப் போகவும்," என்று செய்தி அனுப்பினான். செய்தி கேட்ட பானர்மென் மட்டில்லா மகிழ்ச்சி கொண்டான். பெரும் படை ஒன்றைப் புதுக்கோட்டைக்கு 1799 அக்டோபர் முதல் தேதி யன்று அனுப்பிவைத்தான். அதில் கம்பெனியின் போர் வீரர்களேயன்றி எட்டயபுரத்து வீரரும் நிறைந்திருந்த னர். வெள்ளையர் படை புதுக்கோட்டை வரும்வரை தொண்டைமான் அளவற்ற உபசாரங்கள் செய்த தோடு விடை பெற்றுச் செல்லப் பன்முறை முயன்ற வீரபாண்டியரை "என்ன அவசரம்; இன்னும் சில

நாள் இங்குத் தங்கிச் செல்லலாம்,'' என்று வஞ்சக மொழி கூறித் தடுத்து நிறுத்தியிருந்தான். தொண்டைமானின் ஏற்பாட்டின்படி எண்ணெய் முழுகி இன்சுவை யருந்தி மாளிகையின் மேற்பகுதியில் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தார் ஆண்டகை வீரபாண்டியர். பானர்மென்னின் படைகள் மாளிகையைச் சூழ்ந்து கொண்டன. படையினரில் பலர் வீரபாண்டியன் உறங்கிக் கொண்டிருந்த மேல் மாடிக்கு விரைந்தனர். தம்பியரும் தாமும் விழித்தெழுந்தனர். வேல் தாங்கிய ஆயிரக்கணக்கான படைகள் மாளிகை முழுதும் நிறைந்திருந்ததோடு மாளிகைக்கு வெளியிலும் கூடியிருந்தன. படைவலியும் துணையும் அற்ற பாண்டியர் பல்லும் நகமும் இழந்த பாய்புலியை ஒத்தார். வீரபாண்டியர் திகைத்தார். சிறிது நேரத்தில் திகைப்பு நீங்கி நகைத்தார். வீரச்சிரிப்புடன் "வெறுங்கையோடு நிற்கிறோம்; உங்கள் எண்ணம் எதுவோ அதன்படி செய்யலாம்,'' என்ருர். கடும்போரை எதிர்பார்த்த வீரர்கள், வீரரது வலியற்ற நிலைகண்டு கையில் விலங்கிட்டனர், வீரவாள் பிடித்த வேந்தருடைய கைகள் இருப்பு விலங்குகளை ஏற்றன. தமிழ் மக்கள் தனிப் பெருந்தலைவரான வீரபாண்டியரைத் தமிழ் மக்களுள் ஒருவனுகிய தொண்டைமான் காட்டிக் கொடுத்ததைக் கண்ட தமிழ்த் தாயின் தலையும் வெட்கத்தால் கவிழ்ந்தது.

அண்டையிலிருந்த ஊமைத்துரை ஆத்திரங்கொண்டார், "அஞ்சுவது அஞ்சாமை பேதைமை ஆதலின் அமைக'' என்று தம்பிக்கு ஆறுதல் கூறிவிட்டு, "நண்பர் விஜயரகுநாதத் தொண்டைமான் எங்கே? நண்பர் தொண்டைமான் என்பால் கொண்ட அன்பு மறத்தற்கரியது. நம்பி வந்தவருக்கு இது போன்ற நல்லுதவி புரிபவர் வேறு யாரிருக்கிருர்கள்? அவரைக்காண என் கண்கள் விரும்புகின்றன என்று காவலாளர்களை வீரபாண்டியர் கேட்டார். தமிழகத்திற்கு அழியாப் பழி

தேடிய தொண்டைமான் வீரபாண்டியரைக் காணவும் அஞ்சினுன். வீரபாண்டியருக்கு இல்லை என்ற பதிலே கிடைத்தது. "நாழியாகிறது; நான் போகிறேன்; தொண்டைமானுக்கு என் நன்றியைத் தெரிவியுங்கள்," என்று கூறிக்கொண்டு வீரர்களுடன் புறப்பட்டார்.

இனிய உளவாக இன்னுதை கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

என்னும் அருமறையை உரிமையாகப் பெற்ற பாண்டியர் ஆத்திரங்கொண்ட நிலையிலும் இன்சொல்லின் மூலம் தமது எரிச்சலைக்காட்டி மறைந்தார். வீரபாண்டியரோடு ஊமைத்துரை, முத்தையா, குமாரசாமி முத்துக்குமாரசாமி, வீரண்ணமணியக்காரன் என்பவர்களும் பிடிபட்டனர்.

மேஜர் பானர்மென் வீரபாண்டியர் சிறைப்பட்ட செய்தியைச் சென்னைக் கவர்னருக்கு அனுப்பி, கட்டளையை எதிர்பார்த்திருந்தான். கொடுங்கோலும் வஞ்சமும் துணையாகக் கொண்ட **ராபர்ட்டு கிளைவின்**[1] மகனை **லார்டு எட்வர்டு கிளைவே** அப்போது கவர்னர் பதவியிலிருந்தான். அவன் பாளையக்காரரனைவரையும் கூட்டி பகிரங்க விசாரணை செய்து வீரபாண்டியரைத் தூக்கிலிடும்படி கட்டளையிட்டான்.

இக்கட்டளைப்படி 16—10—1799-ம் ஆண்டு காலை 10 மணிக்குக் **கயத்தாற்றில்** அவை கூட்டப்பட்டது. பாளையக்காரரனைவரும் உயிரற்ற பதுமைகளைப் போல் அமர்ந்திருந்தனர். வீரபாண்டியர் மீது கம்பெனியின் சார்பாக பானர்மென் கீழ்க்கண்ட குற்றங்களைப் படித்தான்.

"பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரனை வீரபாண்டியன் கிழக்கிந்தியக் கம்பெனி ஆணைப்படி வரிசெலுத்த மறுத்தது ஒரு குற்றம்.

---

1. Robert Clive.

கலெக்டர் ஜாக்ஷன் பேட்டிக்கு அழைத்தபோதெல்லாம் ஆரவாரமான படைகளோடும் உடைவாளோடும் வர அனுமதித்தாலன்றி பேட்டி காண இயலாது எனக் கூறிக் கம்பெனியை அவமதித்தது மற்றொரு குற்றம்.

கிழக்கிந்தியக் கம்பெனிப் படைகளை எதிர்த்துப் போரிட்டுக் காலின்ஸ் உள்படப் பல கம்பெனி வீரர்களைக் கொன்றது பின்னும் ஒரு குற்றம்." என்று மூன்று குற்றங்களைச் சாட்டி இதை உறுதிப்படுத்தத் தளபதி பானர்மென்னின் மொழி பெயர்ப்பாளனாகிய இராமலிங்க முதலியார், மற்றும் பானர்மென்னின் ஹவில் தாராகிய இப்ரஹிம்கான், கம்பெனியின் கீழ்த்தரத் அதிகாரியாகிய சுவாமி, வீரபாண்டியரின் உறவினருள் ஒருவனாகிய கெடி வேட்டூர் நாய்க்கர் ஆகிய நால்வரையும் விசாரணை செய்து குற்றங்களை மெய்ப்பித்தான். நீதிபதியாக அமர்ந்திருந்த பானர்மென், "உம்மீது சாட்டப்பட்டுள்ள குற்றங்களுக்கு நீர் கூறும் பதில் என்ன?" என்று கேட்க வீரபாண்டியர் கீழ்வருமாறு பதிலளித்தார்.

"இங்குச் சாட்சிகள் கூறியவை அனைத்தும் உண்மையே," ஆனால் நான் அவற்றைக் குற்றங்களாகக் கருதவில்லை.

பாஞ்சாலங் குறிச்சியை ஆண்ட பாண்டியர் மரபின் வேந்தர்களாகிய நாங்கள் எந்தக் காலத்திலும் எவரது கட்டுப்பாட்டுக்கும் அடங்கி வாழ்ந்த தில்லை; வரி செலுத்தியதும் இல்லை. அப்படிப்பட்ட பாண்டியர்கள் வழிவந்த நான் அந்நியராகிய உங்களுக்கு எப்படி வரி செலுத்துவேன்? அப்படி வரிசெலுத்த ஒப்புக்கொண்டிருந்தால் அது தான் குற்றம் ஆகும்.

தேடி வந்தவர்களை வரவேற்று மகிழ்விப்பது தான் எங்கள் வழக்கம். பிறரை வலிந்து சென்று பார்ப்பது

எங்கள் பாண்டிய மரபுக்கு இல்லாதது. ஆகவே நான் கலெக்டரைப் போட்டி காண மறுத்தது குற்றமாகாது.

பாஞ்சாலங்குறிச்சி எனது உரிமைத் திருநாடு அதைப் பிறர் தாக்கும்பொழுது எதிர்த்துப் போரிட்டது எப்படிக் குற்றமாகும்? பகைவர்கள் தாக்கும் போது அதைப் பார்த்துக்கொண்டு வீண்பொழுது போக்கியிருந்தால் அதுதான் குற்றமாகும். ஆகவே நீங்கள் நான் செய்த செயலைக் குற்றம் என்று கூறுவது தான் குற்றம்.''

வீரபாண்டியர் கை விலங்குடன் கைதிக் கோலத்தில் நின்றிருந்தும், அவர்தம் கனல் கக்கும் சொற்களைக் கேட்ட பானர்மென்னின் நெஞ்சம் அஞ்சியது. முடிவில் வெள்ளைத் தளபதி, நீதியின் பேரால் வீரபாண்டியருக்குத் தூக்குத் தண்டனை விதித்திருப்பதாகத் தீரப்புக் கூறினன்.

உச்சிமீது வானிடிந்து வீழுகின்றபோதிலும் அச்சமில்லை அச்சமில்லை என்று அதிர முழங்கிய தென்னாட்டு மன்னரது வீரவுரை கேட்ட பாளையப்பட்டார் அனைவரும் நெஞ்சம் திடுக்கிட்டனர். தீர்ப்புக் கூறிய ஒருமணி நேரத்திற்குப் பின் தமிழகத்தின் வீர உருவாக விளங்கிய உத்தமனைக் கொல்வதற்கு முற்பட்டனர். வீரபாண்டியரை அருகிலிருந்த புளியமரத்தில் தூக்கிலிடுவதற்கு ஏற்பாடாகியிருந்தது.

ஆங்கிலேயரது அடியை வருடி ஆதிக்கம் பெற விரும்பிய எட்டப்பனும், காட்டிக் கொடுத்துக் கண்ணியம் பெற நினைத்த தொண்டைமானும், மற்றும் பாளையக்காரரனைவரும் சூழ்ந்து நிற்க, வீரபாண்டியர் தூக்கு மரத்தை அணுகினர், பாளையக்காரரனைவரையும் பார்த்துக் குறுநகை புரிந்தார். ''நான் வீரனாக மாளப் போகிறேன். என்னை வருங்காலத் தமிழகம் வாழ்த்தும்.

நீங்கள் கோழைகளாகி அன்னியருக்குக் குற்றேவல் செய்கிறீர்கள். நான் இன்று சாகிறேன். நீங்கள் நாளை சாகப் போகிறீர்கள். நான் மானத்தோடு சாகிறேன். நீங்கள் மானம் இழந்து சாகப் போகிறீர்கள்.

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.

என்ற திருமுறையை உங்கள் செவிகள் கேட்டதில்லையா? வெள்ளையருக்கு அஞ்சி நிற்கும் வீணர்களே! மானம் இழந்தபின் வாழ்வதும் ஒரு வாழ்வா?" என்று கூறிய வண்ணம் வீரபாண்டியர் தூக்கு மரத்தின்மேல் ஏறினார்.

பாளையப் பதுமைகள் மட்டும் கண்களைத் திறந்த வண்ணமே நின்றன. இதற்கிடையில் இரண்டு வீரர்கள் அவரைத் தூக்கிவிட முற்பட்டனர். வீரபாண்டியர் அவர்களை உதறிவிட்டுத் தாமே ஏணி நாற்காலியில் ஏறிக்கொண்டார். கூட்டத்தைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்தார். ஆசைத் தம்பி—இன்பத்திலும் துன்பத்திலும் உற்ற உதவியாக இருந்த தம்பி; தம்பியுடையான் படைக்கஞ்சான் என்ற பழமொழியை உறுதிப்படுத்திய தம்பி—ஊமைத்துரையை ஆவி பிரியுமுன் ஒரு முறையாவது கண்டு மகிழலாம் என்ற எண்ணத்தோடு பார்த்தார். தம்பியைக் காணவில்லை. பாண்டியரது உள்ளம் கொல்லன் உலைபோலக் கொதித்தது.

"இவ் வெள்ளை மனிதனுக்கு முன் கைதியாய் நிற்கவும், அவன் முடிவுப்படி இப்புளிய மரத்தில் தொங்கித் துடித்து மாளவும் நேர்ந்துள்ள இந்நிலை கண்டு நான் வருந்தவில்லை; ஆனால் என் கோட்டையைப் பாதுகாத்துப் பகைவரைப் பாடழித்துப் போர்முனையில் பகைவரால் வெட்டப்பட்டு வீரமரணம் அடைந்திருப்பேனேயானால் எம் பாண்டியர் குடிக்கும், இந் நாட்டுக்கும் வீரம் தேடித் தந்திருப்பேன். நான் அந்த வாய்ப்பை

இழந்ததற்காக வருந்துகிறேன்; அந்நியரின் ஆதிக்கத்தி லிருந்து எனது தாய்நாடு மீளவேண்டும் என்பதைத் தவிர எனக்கு வேறு ஆசை எதுவும் கிடையாது. என் றுவது ஒருநாள் இந்நாட்டு மக்கள் வெள்ளையரை விரட் டியே தீருவர்,'' என்னும் வீர மொழிகளைக் கூறினர்.

கன்னித் தமிழ்நாட்டு மன்னர் கட்டபொம்மு வரையாது வழங்கிய தம் வலது கரத்தால் தூக்குக் கயிற்றை எடுத்துப் பொன்னும் மணியும் தாங்கிய தம் கழுத்தில் மாட்டிக் கொண்டார். மறுநொடியில் தம் மைத் தாங்கியிருந்த நாற்காலியைக் காலால் உதைத்துத் தரையில் உருட்டினர். ''மருந்தோமற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை,பெருந்தகைமை பீடழிய வந்த இடத்து,''என் பது வள்ளுவர் வாய்மொழி. புரட்சி வீரர் கட்டபொம் முவின் உடல் புளியமரத்தில் தொங்கியது. பிறநாட் டார் இடும் பிச்சைக்கு இச்சகம் பேசும் அடிமைத் தமி ழகத்தில் அவர் வாழ விரும்பாமல் உரிமையோடு இறந் தார். அது கண்டு மக்கள் யாவரும் கண்ணீர் விட்டுக் கதறினர்கள். அவரது உடல் தக்க மரியாதைகளுடன் கொளுத்தப்பட்டது.

"வீரநாயகா! விண்ணுலகு அடைந்தையோ? என்பார்
பாரையாண்டுறு பாண்டியா! மாண்டையோ? என்பர்;
மாரனும்எனும் வடிவனே? மாய்ந்தையோ? என்பர்;
ஆரவே அழுது அழலினை மூட்டினர் அடுத்தே.''

"கோழைகளாய் நின்று கூழைக்கும்பிடு போடும் பாளையக்காரர் அனைவரும் கோழைகளாய் மண்டி ஒண்டி இருக்கிறார்களே! அதிகாரிகளை அண்டியாவது உதவி வேண்டவில்லையே! இவர்களும் தமிழகத்து மன் னர்கள் தாமா? மானங்கெட்ட மடையர்கள் என்பன போலப் பலவாறு மனம் புழுங்கிக் கூறி மறுகினர் மக் கள். தன் கணவன் தாய்நாட்டு மானங்காக்க உற்ற

போரில் உயிர்விட்டான் என்பது கேட்டு வீரசக்கம்மாள் மனம் உடைந்து.

"அடுத்தஒரு வனைக்காக்க ஆருயிரும் அருங்கிளையும் அரசும் அந்தோ
கொடுத்து நின்ற குலமகனே! உலகமெல்லாம் நனிகாணக் கொண்ட என்னைத்
தடுத்தாண்டு கொள்ளாமல் தள்ளிவிட்டுச் சென்றனையே தகவோ சொல்லாய்!
எடுத்தாண்ட வில்லாளா! இல்லாளை எடுத்தாளல் இனிதே அன்றோ."

என்று கதறினள்.

தூக்கிடும் நேரத்தில் தான் இருந்தால் என்ன நேருமோ என்றஞ்சிய வெள்ளையன், கட்டளையைப் படித்தவுடன் தக்க பாதுகாப்போடு தன் இருப்பிடம் சேர்ந்தான். அடைக்கலம் புகுந்த அன்பனைக் காட்டிக் கொடுத்த புதுக்கோட்டையானை வெள்ளையர் மறக்க வில்லை. அது வரை கம்பெனிக்கு வரிசெலுத்தும் பாளையப்பட்டாக இருந்த புதுக்கோட்டை 'தனியரசு' என்று பிரகடனம் செய்யப்பட்டது. என்றும் தங்களுக்கு அடிமையாக இருந்த எட்டப்ப நாயக்கனுக்கு சிவஞானபுரம் என்னும் சிற்றூரைக் கம்பெனியார் பரிசாகத் தந்தனர். 21-10-1799-ல் கயத்தாற்றில் தங்கியிருந்த பாளையக்காரர் அனைவரையும் பானர்மென் கூட்டிக் கம்பெனியாரின் சார்பாக ஒரு கட்டளையைப் படித்தான்.

அதன்படி, பாளையக்காரர் அனைவரும் ஆயுதங்களைக் கம்பெனியார் வசம் ஒப்புவிக்க வேண்டுமென்றும், தங்கள் கோட்டைகளை அடியோடு இடித்துத் தகர்த்துவிட வேண்டுமென்றும், இக்கட்டளையை எதிர்த்தவர்கள் கொலைத்தண்டனைக்கு உரியவர்கள் ஆவார்கள் என்றும் அறிவித்தான். இதன்படி வீரபாண்டியர் இறந்த ஏழு

நாட்களுக்குள் திருநெல்வேலிச் சீமையிலிருந்த நாற்பத்திரண்டு கோட்டைகளும் தகர்க்கப்பட்டுவிட்டன. பாஞ்சாலங்குறிச்சி, நாகலாபுரம், ஏழாயிரம் பண்ணை, குளத்தூர், காடல்குடி ஆகிய பாளையங்கள் கம்பெனியின் நேரடி நிர்வாகத்திற்கு வந்தன. பாளையங்களின் அரச விருதுகள், அதிகாரங்கள் முதலியன் பறிக்கப்பட்டன. பாளையக்காரர் அனைவரும் பல்லைப் பறிகொடுத்த பாம்பு போல ஒடுங்கினர். இத்தனைக் கொட்டமும் நடத்திய பானர்மென், மேலும் தான் இந்தியாவில் இருப்பது ஆபத்துக்குரியது என்பதை அறிந்து இங்கிலாந்துக்குப் புறப்பட்டுவிட்டான்.

---

## 12. ஊமைத்துரை

பாஞ்சாலங்குறிச்சி மன்னர் வீரபாண்டியக் கட்டபொம்முவைக் கயத்தாற்றில் தூக்கிலிட்டபின் மாதங்கள் பதினாறு கடந்து விட்டன. ஊமைத்துரை முதலியவர் பாளையங் கோட்டைச் சிறையில் அடைபட்டிருந்தனர். வீரர்களின் இரத்தம் கொதித்தது. ஆங்கிலேயர்களின் செய்கை மறக்குடி மக்களின் மனத்தை நொடிக்கு நொடி வருத்திக்கொண்டே இருந்தது. மக்களின் உயிராய் அமைந்த மன்னனைப் பிரிந்த மக்கள் தவித்தார்கள். பழிக்குப் பழி வாங்கியாவது தம் கடமையைச் செய்ய முற்பட்டார்கள். நாட்டுப்பற்று மிக்க புரட்சிக் கூட்டம் ஒன்று உருவாகிப் பாளையங்கோட்டைச் சிறையில் இருந்த பாண்டியர் மரபினரை மீட்டுவந்து மீண்டும் அரசராக்கி ஆங்கிலேயரை அழிப்பது, அல்லது தம் உயிரை அருஞ்சமரில் முடிப்பது என்று உறுதி கொண்டது. புரட்சி வீரர்கள் **மணியாச்சி** என்ற ஊரின் அருகிலுள்ள **ஓட்டநத்தம்** என்னும் சிற்றூரில் இரவு நேரங்களில் கூடிப் புரட்சிக்கான திட்டங்களை வகுத்தனர். இத்திட்டத்தின்படி 2-2-1801-ம் தேதி விறகு விற்பவர்,

வழிப்போக்கர், பிச்சைக்காரர், துறவியர் போன்ற மாறு வேடங்களில் புரட்சிப்படை பாளையங் கோட்டைக்குள் நுழைந்தது. இரவு வரும் வரை வீரர்கள் அயலிலே திரிந் திருந்து, மாலைப்பொழுதானவுடன், சிறையைத்தகர்த்து ஊமைத்துரை முதலிய வீரச்செல்வர்களை மீட்டுவந்த தோடு பாளையங் கோட்டையே நடுங்குமாறு கலக்கிவிட் டனர். பாளையங்கோட்டை வீதிகளில் ஆயுதம் தாங் கிய புரட்சி வீரர்கள் "வெள்ளையர் ஆட்சி ஒழிக. வீர பாண்டியர் குடி வாழ்க" என்று வீர முழக்கம் செய் தார்கள்.

இங்ஙனம் பாளையங்கோட்டைச் சிறை தகர்க்கப் பட்டபோது, அங்கிருந்த கம்பெனியைச் சேர்ந்த வெள்ளை யர் இருபதின்மருக்கும் குறைந்தவராவார். அவர் களும் அன்று தளபதி மேக்காலே வீட்டில் நடந்த விருந் துக்குப் போயிருந்தார்கள். அன்று மட்டும் புரட்சி வீரர் கள் மெக்காலே வீட்டை முற்றுகை யிட்டிருந்தால், அங் கிருந்த வெள்ளையர் அனைவரையும்அழித்திருக்கமுடியும். மீண்டும் திருச்சியிலிருந்து கம்பெனியின்படை தென் னாடுவருவதற்குள்புரட்சிவீரர்களின் கை ஓங்கியிருப்பின், நம் நாட்டு வரலாறே வேறு முறையில் அமைந்திருக்கும். ஆனால், போதுமான திறமையும் பயிற்சியும் இல்லாது, நாட்டுப் பற்றொன்றையே மூச்சாகக் கொண்டிருந்த புரட்சி வீரர்கள் ஊமைத்துரையின் தலைமையில் பாஞ் சாலங்குறிச்சி நோக்கிப்புறப்பட்டார்கள். அன்று இரவு விடிவதற்குள் முப்பது கல் தொலைவைக் கடந்துபாஞ்சா லங்குறிச்சியின் அருகிலுள்ள ஒட்டப்பிடாரத்தை அடைந்தார்கள். அங்குத் தங்கி, மேலும் செய்ய வேண்டு வனவற்றைப் பற்றித் திட்டமிட்டார்கள்.

வெள்ளையரால் வீழ்த்தப்பட்ட பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையை மீண்டும் எழுப்புவது.

கம்பெனிப் படைகளை எதிர்த்துப் போராட மக்க ளுக்கு உணர்ச்சியும் பயிற்சியும் அளிப்பது.

வெள்ளையரால் கைப்பற்றப்பட்ட பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத்தையும், வேறு பாளையங்களையும் போரிட்டுக் கைப்பற்றுவது, என்ற மூன்று திட்டங்களை யும் வகுத்துக் கொண்டனர். இம் மூன்று திட்டங்களை யும் நிறைவேற்ற நாட்டு மக்களனைவரும் முனைந்து நின்றதோடு பாளையக்காரர்களில் பலரும், சின்னப்பேந்தி ரன் முதலிய செல்வந்தர்களும் முன்வந்தனர். பொருள் திரண்டது; படைவலுத்து, வீரத்தமிழர் அனைவரும் வீறு கொண்டெழுந்தனர்.

அதுசமயம் கம்பெனிப் படைத்தலைவனாக இருந்த மெக்காலே சிறையினின்றும் தப்பிய ஊமைத்துரை முதலிய புரட்சி வீரர்களைப் பிடித்து வருவதற்காக 900-துப்பாக்கி வீரர்கள் குதிரை வீரர்கள் பீரங்கிப்படையி னர் ஆகிய பெரும் படையொன்றைத் திரட்டிக்கொண்டு வந்தான். இப்படை பாஞ்சாலங்குறிச்சி நோக்கி வரும் வழியிலுள்ள குலையநல்லூரென்னுமிடத்தில் கூடார மடித்து உணவு தயாரித்துக் கொண்டிருந்தது. அது சமயம் ஆயிரத்துக்கு மேற்பட்ட புரட்சி வீரர்கள் அவர் களைத் தாக்கிக் குலை நடுங்கும்படி செய்துவிட்டார்கள். இத்தாக்குதல்நிலைத்திருந்தது ஒருமணிநேரமேயாயினும், மிகக் கடுமையாக இருந்ததோடு, புரட்சி வீரர்கள் நாற் பதின் மரையும், கம்பெனியாரில் அறுவரையும் உயிரிழக் கச் செய்தது. மீண்டும் புரட்சிப் படை இரவு ஒன்பது மணிக்குக் கம்பெனிப்படையைக் கலக்கத்தொடங்கியது. இரவு முழுவதும்புரட்சிவீரர்களுக்குங்கம்பெனிப்படைக் கும் போர் நிகழ்ந்தது. இதனால் கம்பெனிப் படைக்கு வீரம் வில விலத்து, அச்சம் அதிகரித்தது. கம்பெனிப் படையினர் மறு நாள் காலை புறப்பட்டு பத்துமணிக்குப் பாஞ்சாலங் குறிச்சியில் கால் வைத்தும் கலங்கி நின்ற னர். இக்கலக்கத்திற்குக் காரணம் தளபதி பானர்மென் கட்டளைப்படி தரைமட்டமாக்கப்பட்ட பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டை மீண்டும் தலை தூக்கி நின்றதேயாம்

இக்கோட்டை நாட்டுப்பற்றுக் கொண்ட மக்களின் ஆர்வத்தால் கட்டப்பட்டது. இக்கோட்டை இரண்டே வாரங்களில் கட்டி முடிக்கப்பட்டது. கோட்டை கட்டும் வேலையில் ஈடுபட்டவர்கள் இருபதினாயிரத்துக்கு மேற்பட்ட வீரர்கள். இக்கோட்டையை எழுப்பப் புரட்சி வீரர்கள் பட்டபாடு சிறிதன்று. முன்னிருந்த கோட்டையைக்காட்டிலும் புதிய கோட்டை உரம் வாய்ந்தது என்பதைப் பின்னால் நடந்த பீரங்கித் தாக்குதல்கள் மெய்ப்பித்தன. ஆண்டுக்கணக்கில் அருப்பாடு பட்டு அமைக்க வேண்டிய கோட்டை, இருவாரங்களில் எழுந்து நின்றது என்றால், அந்நாட்டு மக்களின் நாட்டுப்பற்றுக்கு ஓர் எல்லையுண்டோ? இக்கோட்டை பனஞ்சாற்றினால் பிசைந்த மண்ணைக்கொண்டு கட்டப்பட்டதாம். கோட்டை இவ்விதம் எழுந்து நிற்கும் என்று அறியாத கம்பெனியார் கோட்டையைக் கண்டு திகைத்துக் கோட்டைக்கு ஒருமைல் தூரத்தில் கூடாரமடித்துத்தங்கினர். இரவு நேரங்களில் கோட்டையைத் தாக்கலாமென்பது அவர்தம் எண்ணமாகும். இதற்குள் மெக்காலே பாஞ்சாலங்குறிச்சியாரின் நிலைமையை அறிவதற்காக ஒற்றரை ஏவியிருந்தான். ஒற்றர்கள், இரவுப் பொழுதானவுடன் கோட்டையிலிருந்த ஐயாயிரம் புரட்சி வீரர்கள் கம்பெனியாரைத் தாக்கத் திட்டமிட்டு இருந்ததாகக் கூறினார்கள். இதைக் கேட்ட மெக்காலேவின் உள்ளம் நடுங்கியது. எப்படியாவது புரட்சி வீரர்களுக்கு அகப்படாமல் தப்பிவிட வேண்டுமென்று முடிவு செய்துகொண்டு பகல் இரண்டு மணிக்கே படையுடன் பாளையங்கோட்டைக்குத் திரும்பிவிட்டான். இவ்வெற்றிகரமான பின்வாங்குதலை அறிந்த புரட்சி வீரர்கள் இப்படை பாளையங்கோட்டை போனவுடன் தங்களைத் தாக்கப் பெரும் படையுடன் வருவது உறுதி என்று எண்ணிக் கம்பெனிப்படையைக் கலக்கத்தொடங்கினர். இருதரப்பிலும் வீரர் பலர் மாண்டனர். முடிவில் கம்பெனிப் படை பாளையங்கோட்டையை நோக்கி

ஓடத் தொடங்கியது. புரட்சி வீரர்களும் கோட்டையில் வந்து கூடினர். புரட்சி வீரர்கள் வெற்றி அல்லது வீழ்ச்சி என்ற துணிவுடன் இறுதிப் போரை எதிர்பார்த்து நின்றனர்.

இதன்பின் பாஞ்சாலங்குறிச்சியார் கம்பெனியோடு ஒத்துழைத்த பாளையங்கள் சிலவற்றைக் கைப்பற்றியதோடு, தூத்துக்குடியிலிருந்த கம்பெனியின் இந்திய வீரர்களையும் விரட்டியடித்து, அவர்களிடமிருந்த ஆயுதங்களையும் பறித்துக் கொண்டனர். மற்றும் அங்கிருந்த இரு ஆங்கில அதிகாரிகளைச் சிறைபிடித்து அவர்களுடைய சொத்துக்களையும் கைப்பற்றினர். அதுசமயம் பாகட்[1] என்ற ஆங்கிலத் தளபதியின் மனைவி ஊமைத்துரையின் காலில் விழுந்து உயிர்ப்பிச்சை வேண்டினாள். பாஞ்சாலங்குறிச்சியின் முடிசூடா மன்னனாகிய ஊமைத்துரை அபயக் குரலுக்கு ஆதரவு காட்டிச் சிறைபிடித்த வெள்ளையரை விடுதலை செய்ததோடு, அவர்களுடைய பொருள்களையும் கொடுத்தனுப்பி விட்டான். பின்னர் அவன் காடல் குடி, ஸ்ரீவைகுண்டம் முதலிய பாளையங்களைக் கைப்பற்றிக் கொண்டான். பொது மக்களின் ஆதரவும் புரட்சி வீரர்களுக்குத் துணை செய்தது. 10-2-1799-இல் பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து ஓடிய கம்பெனிப் படை ஒன்றரை மாதத்தில் தங்களைப் பலப்படுத்திக் கொண்டு மீண்டும் பாஞ்சாலங்குறிச்சியைத் தாக்க முற்பட்டது; கோட்டைக்கு மேற்கே நாற்பது அடி நீளமும், பதினைந்து அடி அகலமும், பதினாறு அடி உயரமும் உள்ள ஒரு பீரங்கி மேட்டை எழுப்பி, அதன் மீது இரண்டு பீரங்கிகளை நிறுத்தி, கோட்டையின் மீதும் கோட்டையின் உள்ளிருந்தோர் மீதும் குண்டுமாரி பொழிந்தது கம்பெனியாருடைய பல மணிநேரத் தாக்குதல்களுக்குப்பின் கோட்டையின் சுவர் சிறிது உடைபட்டது. ஆனாலும் கோட்டையின் சுவர் முற்றிலும்

1. Baggot

தகர்ந்துவிட வில்லை. கம்பெனி வீரர்கள் இடிபட்ட சந்துகளில் நுழைய முயன்றார்கள். புரட்சி வீரர் வேலாலும், ஈட்டியாலும், துப்பாக்கியாலும், கம்பெனி வீரர்களைக் கொன்று குவித்தனர். எண்ணற்ற கம்பெனி வீரர் இப்போரில் மாய்ந்தனர். இப்போரில் மாண்ட வீரர்களில் மிகுதியானவர்கள் எட்டைய புரத்தார்களே. தங்கள் முயற்சி வெற்றியைத் தாராததை அறிந்த கம்பெனியார் கவலை கொண்டனர். கோட்டைத்தாக்குதலில் தோல்வியடைந்த கம்பெனி தம் முகாம் சென்று இளைப்பாறியதோடு, பிணக்குவியலாகி இருந்த தம் வீரர்களின் உடலை அடக்கம் செய்வதற்காக வெள்ளை நிறச் சமாதானக் கொடியைக் காட்டிப் புரட்சி வீரர்களிடம் சமாதானம் வேண்டினர். வீரத்தமிழ் மரபில் வந்த வீரனாதலால் ஊமைத்துரை அறப்போரின் திறத்தை எண்ணி அதற்கிசைந்தான். இச்செயலைக் கம்பெனியார் பிற்காலத்தில் பெரிதும் புகழ்ந்தனர். தளபதி மெக்காலே தம்மிடமிருந்த படைப்பலங் கொண்டு பாஞ்சாலங்குறிச்சியைக் கைப்பற்ற முடியாதென்றும், திருச்சியிலிருந்து பீரங்கியுடன் படைகளை அனுப்பிவைக்குமாறும் திருச்சியிலிருந்த கம்பெனித் தலைவருக்குச் செய்தியனுப்பினான். அது கண்ட வெள்ளையர் குலை நடுங்கினர். வீரபாண்டியரோடு சமாதானம் செய்துகொள்ளாதத்ற்காக மிகவும் வருந்தினர். **கர்னல் ஆக்னியூ**[1] வின் தலைமையில் பல பீரங்கிகள் கொண்ட பெரும் படை ஒன்றைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பி வைத்தனர். திருச்சியில் இருந்து படைபலம் வரும்வரை கோட்டைக்குள் இருந்த புரட்சி வீரர்களுக்கு உணவுப் பொருள்கள் கிடைக்காதபடி தடை செய்து வந்ததோடு, கோட்டையினின்றும் வீரர்கள் வெளியே செல்லாதவாறும் மெக்காலே பாதுகாப்புச் செய்து வந்தான். புரட்சி வீரர் பலர் உணவின்றிமடிந்தனர்; என்றாலும் உயிருடனிருந்தவீரர்களின் உள்ளம் கம்பெனிக்கு அடிபணிய மறுத்தது. இதற்குள்

---

1. Celonel Agnew.

இலங்கையிலிருந்து பெரும் படையொன்று பாஞ்சாலங் குறிச்சியை நோக்கி வந்து கொண்டிருந்தது. குமரி முதல் இமயம்வரைத் தம் வசப்படுத்தி நின்ற வெள்ளைய ரைப் பாஞ்சாலங் குறிச்சிச் சிறு பாளையக்காரன் தனது வீரமொன்றையே துணையாகக்கொண்டு நடுங்கச்செய்து விட்டான். தென்னாடு முழுவதும் இருந்த கம்பெனிப் படைகளும், எட்டயபுரம், புதுக்கோட்டை போன்ற துரோகிகளின் படைகளும் பாஞ்சாலங்குறிச்சியில் வந்து குவிந்தவண்ணம் இருந்தன. இரண்டு மாதங்களுக் குப்பின் திருச்சியிலிருந்து வந்த படைகள் பாஞ்சாலங் குறிச்சியை அடைந்தன. 21-5-1799-இல் வந்த ஆக்னியூ வின் படை இரண்டு நாள் ஓய்வெடுத்துக் கொண்டு, 23-5-1799-ல் மீண்டும் கோட்டையைத் தாக்கத் துவங் கியது. புதியனவும் பழையனவுமாகிய பீரங்கிகளனைத் தும் கோட்டைத்தாக்குதலில் ஈடுபட்டன. பல மணி நேரத் தாக்குதலுக்குப்பின் கோட்டையில் பலமான உடைப்புகள் ஏற்பட்டன. கம்பெனிப்படைகள் கோட் டைக்குள் புக முயன்றன. ஆனால் ஷெப்பர்டு[1] என்ற தளபதி போரை மறுநாளுக்குத் தள்ளி வைத்து விட் டான் பாவம்! அவன் காலின்ஸின் கதியை மனத்துட் கொண்டான்போலும்! மறு நாள் காலை மீண்டும் பீரங் கிகள் கோட்டையின் கொத்தளங்களைத் தாக்கத் தொடங்கின. போதுமான அளவுக்குக் கோட்டை தகர்ந்ததை அறிந்த கம்பெனிப் படைகள் கோட்டைக் குள் நுழைந்தன. புரட்சி வீரர் சோர்ந்துவிடவில்லை; பழிக்குப்பழி வாங்குவதையே மனத்துட்கொண்டிருந் தவராதலால், அவர்கள் சாவதற்கு அஞ்சவில்லை; வழிக ளில் தாண்டமுடியாதவாறு ஆழமுள்ள அகழிகளைத் தோண்டி வைத்தனர். விரைந்து வந்த கம்பெனிப் படை வீரர் குழியில் விழுந்து நிறைந்தனர். மேலும் வழிகளில் மரங்களை வெட்டிப் போட்டும், உள்ளே

---

1. Major Sheperd.

நுழையாதவாறு தடுத்தனர். கம்பெனிப் படையை புரட்சி வீரர்கள் மூர்க்கத்தனமாகத் தாக்கித் தாமும் மடிந்தனர். வேல்களும், வல்லையங்களும், ஈட்டிகளும் பகைவர்களின் குருதியைச் சுவைத்தன. "சேனைத் தலையாக்கி செங்குருதி நீர் தேக்கி, ஆனை மிதித்த அருஞ் சேறாய்" பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை தோற்றம் அளித்தது. தோள்களும், தாள்களும், தலைகளும் முண்டங்களும் ஆங்காங்குக் காட்சி அளித்தன. பீரங்கி களும் வெடிகளும் இடியைப்போல முழங்கின. கரு மருந்தின் நாற்றமும், கரும்புகையின் வீச்சும் எங்கும் கலந்து மண்டின. உள்ளே புரட்சி வீரர்கள் நடத்திய குரங்குப் போரைக் கூலிப் படையான கம்பெனிப் படை யால் தாங்க முடியவில்லை. கோட்டைக்கு உள்ளிருந்த ஆண்களும், பெண்களும் பிணமாகி நிறைந்தனர். இந் நிலையை அறிந்த ஊமைத்துரை மேலும்கோட்டைக்குள் இருப்பது தற்கொலைக்குச் சமமாகும் எனக் கருதி வெளி யேற முடிவு செய்தான். வெளியில் கம்பெனிப் படை யின் காவல் பலமாக இருந்தது. ஊமைத்துரை "புரட்சி வீரர்களே! வீரப்போர் செய்துகொண்டே கோட்டையைவிட்டு வெளியேறுங்கள். படுகாயமுற்ற வீரர்கள், பெண்கள், குழந்தைகள் முதியோர் முதலி யவர்களைப்பாதுகாப்பானவெளியிடங்களுக்குக்கொண்டு செல்லுங்கள்," என்ற கட்டளையை எங்கும் பரப்பினான். இக்கட்டளை பிறந்ததும் புரட்சி வீரர்கள் அணிவகுத்துப் போரிட்டுக்கொண்டே கோட்டையை விட்டு வெளி யேறினர். கோட்டைக்கு வெளியிலிருந்த கம்பெனிப் படை சுமார் அறுநூறுக்கு மேற்பட்டவர்களைக் கொன்று குவித்தது. இவர்களில் பெரும்பாலார், பெண்களும் குழந்தைகளுமாவர். பாஞ்சாலங்குறிச்சியின் உள்ளும், புறமும் ஒரே பிணக்குவியல். எங்கு நோக்கி னும் இரத்த வெள்ளம். பீரங்கிகளின் பேய் முழக்கம். அந்தோ! கோட்டை, கொலைக்களமாகியது. இங்ஙனம் வெளியேறிய புரட்சி வீரர்களைத் தொடர்ந்து கர்னம்

ஆக்னியூவின் தலைமையில் ஒரு வெள்ளைப்படை தொடர்ந்தது. மூன்று மைல் தூரத்திற்கப்பாலுள்ள ஒரு சிற்றூரை அடைந்ததும் புரட்சி வீரர்கள் கம்பெனிப் படையை எதிர்த்துக் கடும்போர் புரிந்தனர். இப்போரில் ஊமைத்துரையும், சிவத்தையாவும் காட்டிய வீரம் அளவற்றது. இதன் விளைவாக ஊமைத்துரையின் உடலெங்கும் புண்ணுகிச் சோர்ந்து தரையில் சாய்ந்தான். தலைவனை இழந்த புரட்சி வீரர்கள் எதிர்க்க வகையறியாது நாலாபக்கமும் சிதறி ஓடினர். வெற்றி பெற்ற வெள்ளையர்கள், தம் முகாமுக்குத் திரும்பினர். இதன் பின் அவ்வூரில் இருந்த பெண்கள் பலர் போர்க்களம் வந்து படுகாயமுற்ற வீரர்களை எடுத்து அவர்கட்குச் சிகிச்சை செய்தனர். அது சமயம் ஒரு வீரனது தாய் குற்றுயிராய்க் கிடந்த, தனது மகனை எடுத்துக் காப்பாற்ற முயன்ருள். அவனது உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. “ஐயோ! மகனே” என்று தாய் அலறினுள். தாயின் குரல் கேட்டுக் கண் திறந்த அவ் வீரமகன் சுற்று முற்றும் பார்த்துத் தனது அருகில் ஊமைத்துரையின் உடல் உயிருக்கு மன்ருடிக் கொண்டு கிடந்ததைக் கண்டு, “அதோ! என் சாமியைக் காப்பாற்று. அவ்வீரத்திருமகன் இருந்தால், இந்நாடே நலம் பெறும்; நான் பிழைத்து என்ன பயன்?” என்று கூறி, ஊமைத்துரையைக் காப்பாற்றும்படி வேண்டிக் கொண்டான். என்னே தமிழரது வீரம்! “புரந்தார் கண்ணீர் மல்கச் சாகிற்பின் சாக்காடு இரந்துகோள் தக்க மகனின் மனநிலை இருந்தவாறு என்னே! அத்தமிழ் மகனின் கட்டளையைத் தலைமேற்கொண்ட தாய் ஊமைத்துரைக்கு வேண்டிய உதவிகளைச் செய்தாள். ஒரு சமயம் புரட்சி வீரர்களைத் தேடிக்கொண்டு கம்பெனிப் படை வந்தபோது இத்தாய் ஊமைத்துரையைக் கட்டிலில் படுக்கவைத்து உடலை மூடி, “வைசூரியால் என் மகன் இறந்து விட்டான்.” என்று கூறி,

அழுதாள். அம்மை என்றவுடன் அலறி நடுங்கும் வெள்ளையர் திரும்பிவிட்டனர். இதன்பின் பாஞ்சாலங் குறிச்சியில் மீண்டும் புரட்சி வீரர்கள் தலைகாட்டாதபடி கம்பெனியார் அளவுக்கு மிஞ்சிய கொடுங்கோல் செலுத்தினர். புரட்சிக்குச் சம்பந்தப்படாத பல பொது மக்களின் பொருளும், உயிரும் பறிக்கப்பட்டன.

ஊமைத்துரை செய்வகை யறியாது திகைத்தான். தனக்குத் துணையாக வருவோர் இருநூறு பேர்கூட அது போது இல்லை. அது சமயம் சிவகங்கை பாளையக் காரராக இருந்த சின்ன மருது, பெரிய மருது சகோதரர் கம்பெனிக்கு எதிராக இருந்தனர். இதை அறிந்த ஊமைத்துரை மருது சகோதரர்களின் துணை பெற்று ஆங்கிலேயரை எதிர்க்கத் தொடங்கினான். மறவர் குலத்தைச் சேர்ந்த இருபதினாயிரம் வீரர்கள் இவன் கைவசப்பட்டார்கள். மீண்டும்போர் துவங்கியது. பாஞ் சாலங்குறிச்சியை விட்டுப் போர்க்களம் சிவகங்கைக்கு மாறியது. கடும்போர் நடந்தது. எனினும், ஆதிக்கம் மிக்க ஆங்கிலேயரோடு நீடித்து நிற்க முடியவில்லை. கம்பெனிப் படையினர் ஊமைத்துரை, சிவத்தையா, மருது சகோதரர் ஆகியவர்களைச் சிறை பிடித்தனர். மருது சகோதரர்களை அவர்களுக்குச் சொந்தமான திருப்பத்தூர்க் கோட்டையிலேயே தூக்கிலிட்டுக் கொன்றனர். ஊமைத்துரையையும், சிவத்தையாவை யும் 1801–ம் ஆண்டு ஜூன் மாதம் 10–ஆம் தேதி பாஞ் சாலங்குறிச்சிக் கோட்டைக்கு மேல்புறத்திலுள்ள பீரங்கி மேட்டில் தூக்கிலிட்டுக் கொன்றனர். வீரபாண்டியரின் வழிவந்த மன்னர்கள் சுயநலக்காரர்களின் சூதால் மடிந் தனர். இதனால் தென்னாட்டில் வீரம் மங்கத் தொடங் கியது.

24–5–1799–இல் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை யைக் கம்பெனியார் பிடித்துக்கொண்டவுடன் கோட் டையைத் தரைமட்டமாக்கியதோடு, அவ்விடத்தை உப்

யையும், ஆமணக்கையும் தூவி உழுதுவிட்டனர். மற்றும் கலகத்துக்கு உடந்தையாக இருந்த சிவத்தையா நாயக்கன், குலசேகரப்பட்டினம் மூப்பன், தளவாய்ப் பிள்ளை, சின்ன மருதுவின் மகன் துரைசாமி முதலிய எழுபது பேர்களை சல்லடை போட்டுச் சலித்துப் பிடித்து விட்டனர். இங்ஙனம் பிடித்த புரட்சி வீரர்களையும், மற்றும் மருது சகோதரர்களின் குடும்பங்களையும், சிங்கப் பூருக்கு அப்பாலுள்ள பிரின்ஸ் ஆப்வேல்ஸ் [1] என்ற தீவுக்குக் கொண்டு போய் விட்டனர். இறுதியாக நிகழ்ந்த கோட்டை தாக்குதலின் போது வெளியேறிய ஊமைத்துரையின் மனைவியையும் அவரது குழந்தைகளையும் செக்காரப்பட்டியிலிருந்து கம்பெனியார் பிடித்துப் பாளையங் கோட்டையில் சிறை வைத்தனர். அதன் பின் அவர்களைத் திருச்சிக்கு அழைத்துக்கொண்டு போயினர். தமிழகத்தின் வீரப்புதல்வரான வீரபாண்டியரைக் காட்டிக் கொடுத்ததற்குக் காணிக்கையாக பாஞ்சாலங்குறிச்சி பாளையத்தின் வடபகுதி எட்டப்பனுக்கும், தென்பகுதி மணியாச்சிப் பாளையப்பட்டானுக்கும் பிரித்துக் கொடுக்கப்பட்டது. ஆங்கிலேயர் பாஞ்சாலங் குறிச்சி என்ற பெயரையே தங்கள் கணக்குகளினின்றும் நீக்கிவிட்டனர். இப்பெயர் இப்போது தேசப் படத்தில் இல்லை. மேலும் பழைய கோட்டை இருந்த இடத்தில் எந்தவிதமான கட்டடங்களையும் ஏற்படுத்தக் கூடாதெனவும் கட்டளை இட்டனர். இவ்வாறு ஆங்கிலேயரை எதிர்த்து அரும்போர் செய்த பாஞ்சாலங் குறிச்சிப் பாளையம் அடியோடு அழிக்கப்பட்டது.

---

## 13. வீர வழி பாடு

வீரபாண்டியருக்குப் பின் அவரது வழியில் மக்கள் இல்லை. பிடிபட்ட ஊமைத்துரையின் புதல்வ

---

1. Prince of Wales.

னுக்குக் கம்பெனியார் "கம்பெனிச் செல்வம்" என்ற பெயரிட்டு வளர்த்ததோடு, திருமணமும் செய்து வைத்தனர். இவரது குடிமுறையைச் சேர்ந்தவர்கள் இன்றும் செக்காரக்குடியில் தெற்கு அரண்மனை, வடக்கு அரண்மனை என வழங்கும் அரண்மனைகளில் குடியிருந்து வருகின்றனர். இவர்களுக்கு இன்னும் அரசாங்கத்தாரால் உதவிப் பணம் கொடுக்கப்படுகிறது. இம் மரபினர் இன்றும் தம் சாதி மக்கள் அனைவருக்கும் தலைவர்களாக விளங்குகின்றனர். தம் இனத்தவர் வாழுமிடங்களுக்கு ஆண்டுக்கு ஒருமுறை பல்லக்கு முதலிய அரசவிருதுகளுடன் போவதும், அவர்களுக்குள் ஏற்படும் மனவேறுபாடுகளைத் தீர்த்து வைப்பதும் வழக்கம். கம்பெனிச் செல்வம் என்பவரின் மகனான ஜெகவீரபாண்டியத்துரை இழந்துபோன பாஞ்சாலங்குறிச்சியைத் தம் வசம் ஒப்புவிக்க வேண்டுமென்று அரசாங்கத்தின்மீது வழக்குத் தொடுத்தான். இது காரணமாகச் சென்னை வந்திருந்தபோது, நோய்வாய்ப்பட்டு இறந்துவிட்டான். இப்பெருமகன், ஆறு மொழிகளில் புலமை பெற்றிருந்தான். இன்றும், இக்குடியில் பிறக்கும் மூத்த பிள்ளைக்குக் கட்டபொம்மு என்றும், இளைய பிள்ளைக்கு ஊமைத்துரை என்றும் பெயர்களிடப்படுகின்றன.

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை இன்று மண் மேடாகக் காட்சியளிக்கின்றது. பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டை மேட்டுமண்ணுக்குப் பெருமை இருப்பதாக இன்றும் மக்கள் நம்புகின்றனர். கோட்டை இருந்த இடத்திலிருக்கும் மண்ணைக் கொண்டு வந்து நீரில் கரைத்துத் தம் குழந்தைகளுக்கு உண்பிக்கின்றனர். இங்ஙனம் செய்தால் குழந்தைகள் வீர உணர்ச்சியுள்ளவராவார்கள் என்பது நம்பிக்கை. கோட்டை மண்ணையும் பரப்பி, அதன்மீது முட்டைகளை அடைவைத்துப் பொரித்த சேவல்கள் மிக்க வீரமுடையன என்று கோழிச் சண்டைக்காரர் கருதுகின்றனர். இத்துணைப்

பெரும் புகழுற்ற வீரர் நம் நாட்டில் இருந்தார் என்பது நம் அனைவர்க்கும் பெருமையேயாம்.

இப்பெருமகனைப் பற்றி கர்னல் வேல்ஸ்[1] என்ற வெள்ளையர் கீழ்வருமாறு கூறியிருக்கிறார்; "தென்னாட்டுப் பாளைக்காரர் முரணுடைய வீர வகுப்பினர். போர்ப்பழக்கமும், உரிமை வளர்ச்சியும் உள்ளவர்கள். இவர்கள் சமீபத்தில்தான் அடக்கப்பட்டார்கள். இவர்கள் அனைவரிலும் பாஞ்சாலங்குறிச்சியாரே ஈடும் எடுப்புமில்லாத வீரர்கள். பாஞ்சாலங் குறிச்சிதான் இவர்களது ஜிப்ரால்டர் 2 கட்டுப்பாடில்லாத வீரம் விளைவிக்கக் கூடிய பயன் முழுவதும் அவன் தோன்றிய இடங்களிலெல்லாம் ஏற்படும் என்பது நிச்சயம். சிறிதும் தன்னலமில்லாத மேன்மையான நாட்டுரிமைக்குப் போரிட்ட வீரனுக்குத் தூக்கு மேடை ஏறவேண்டிய நிலை ஏற்பட்டது."

கட்டபொம்முவைக் கயத்தாற்றின் அருகிலே தூக்குப் போட்ட இடத்தில் நாட்டு மக்கள் நினைவுச் சின்னம் நிறுவுவதற்கு முயன்றனர். ஆங்கிலேயரின் அடக்குமுறை அங்ஙனம் செய்யவொட்டாது தடுத்ததோடு அவரது வரலாறுகளையும் எழுதலாகாது எனத்தடுத்தது. நாட்டு மக்கள் இந்நிகழ்ச்சிகளை நாடகமாக்கி நடித்தனர். அதுவும் அடக்கு முறையால் அடக்கப்பட்டது. இங்ஙனம் தடுப்பு முறைகள் பல தோன்றியும் மக்களுக்கு வீரபாண்டியர் மீதிருந்த பற்றுதல் மட்டும் குறையவில்லை. கட்ட பொம்முவைத் தூக்கிலிடப்பட்ட இடம் மங்கம்மாள் சாலை என்ற பெருவழியின் அருகில் இருக்கிறது. அவ்வழியில் போவோர், வருவோர் எல்லாரும் சிறியனவும் பெரியனவும் ஆகிய கற்களை அவ்விடத்தில் போட்டு, அவ்விடத்திற்கு ஒரு வணக்கம் செலுத்தி வருவதன் மூலம் கட்ட பொம்மு இறந்த இடத்தை நினைவு

1. Colonel welsh. 2. Gibralter.

கூர்ந்து வீரனுக்கு வழிபாடு செய்து வந்தனர். இன்றும் இவ்விடத்தில் பெரியதோர் கற்குவியல் காணப்படுகின்றது. இதுபோலவே ஊமைத்துரையைத் தூக்கிலிட்ட இடமாகிய குலையநல்லூரின் வடபாகத்திலுள்ள பரம்புக்குத் தென் சரிவில் கயத்தாற்றிலிருந்து ஒட்டப்பிடாரத்திற்குப் போகும் வழியினும் ஒரு கற்குவியல் காணப்படுகிறது. இக்குவியல்களுக்குப் பொதுமக்களும், கட்டபொம்முவினது உறவினர்களும் ஆண்டுதோறும் வழிபாடு நடத்துகின்றனர். கடவுள்களுக்குப் பூசை நடத்துவது போல படையல்களும், படைக்கின்றனர். தங்கள் குழந்தைகளுக்கு வேண்டுதல்கள் செய்து கொள்கின்றனர். இளிவரின் வாழாத மானம் உடையார், ஒளி தொழுது ஏத்தும் உலகு என்பது தமிழ்மறை. இங்ஙனம் அடக்கு முறையால் தடுக்கப்பட்ட வீரபாண்டியனது வரலாறு மறைந்தொடுங்குவதை அறிந்த தமிழ்ப் புலவர் ஒருவர் "கட்ட பொம்மன் மெட்டு" என்ற புதிய இசை ஒன்றை அமைத்து வீரனது வரலாற்றை நாட்டுப் பாடலாகப் பாடினார். இப்பாடலே கட்ட பொம்முவினது வரலாற்றைப் பலரறியும்படி செய்தது. வீரபாண்டியர்மீது **பாஞ்சைக் கோவை, வீரபாண்டியம், கலியுகப் பெருங்காவியம், வீரபாண்டியன் அநுராக மாலை, வீரபாண்டியன் கும்மி, வீரபாண்டியன் அம்மானை** முதலிய பல தமிழ் நூல்கள் காணப்படுகின்றன. பாஞ்சாலங்குறிச்சி இருந்த இடத்தில் இராணுவக் கல்லூரி நிறுவப்பட வேண்டுமெனவும், வீரபாண்டியனுக்கு நினைவுச் சின்னம் எழுப்ப வேண்டுமெனவும் தற்போது சட்டசபைகளில் பேசப்படுகின்றது.

தமிழகத்தின் விடுதலைக்காக முதன்முதலில் வெள்ளையரோடு பெரும் போரிட்டு வீரமரணம் அடைந்த வீரபாண்டியனுக்குத் தமிழகம் நன்றி செலுத்துமா? அவன் இறந்த இடத்தை வீரக் கோவிலாக்கி வழிபடுமா? வீட்டுக்கு வீடு வீரபாண்டியரது உருவங்களும்

வரலாறுகளும் விளங்குமா? கட்டபொம்முவின் கழகங்களும், ஊமைத்துரையின் கழகங்களும் ஊரெங்கும் உருமாகுமா? அந்நாள் எந்நாள்?

தமிழகமே, உனது அடிமைத்தளை யகற்றப் போரிட்டு வீரமரணம் அடைந்த ஆதித் தமிழ் வீரனை என்றும் மறவாதே.

வாழ்க வீரபாண்டியன் பெயர்!

வாழ்க அவன் புகழ்!!

---

